


# நானக் சிங்

சாந்த் சிங் செகோன்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள அட்டையில காணும் சிறபக காட்சியில பகவான் புததரின அனனை மாயாதேவி கணட கனவின பலனை, மன்னா சுத்தோதனருககு நிமிததிகர் மூவா விளககுகின்றனா. அவாகளுக்குக் கீழே அமாந்து இந்த விளககத்தை எழுகிறாா ஓர் எழுததா. எழுதும் கலையைச சிததிரிககும் முதல இந்தியச சிற்பம இதுவாகவே இருக்கலாம்.

[நாகாாஜுன மலைச சிறபம — கி.பி. இரண்டாம நூற்றாண்டு
படஉதவி : நேஷனல் மியூஸியம், புதுதிலலி]

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# நானக் சிங்

மூலம்:

சாந்த் சிங் செகோன்

தமிழாக்கம்

நா. இராசகோபலன்



சாகித்திய அக்காதெமி

*Nanak Singh* - Tamil translation by N. Rajagopalan of Sant Singh Sekhon's monograph in English. Sahitya Akademi, 1993. Rs. 15.

ISBN-81-7201-391-4

**சாகித்திய அக்காதெமி**
முதல் பதிப்பு 1993

**சாகித்திய அக்காதெமி**
இரவிந்திர பவன், 35, பெரோஸ் ஷா சாலை,
புது தில்லி 110 001.

'சுவாதி' மந்திர் மார்க், புதுதில்லி—110 001.

ADA ரங்கமந்திர, 109 ஜெ.ஸி. ரோடு, பெங்களூர்—560 002.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா—700 053.

'குணா பில்டிங்', 304—305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை—600 018.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலயா சாலை,
தாதர், பம்பாய்—400 014.

விலை: ரூ. 15/—

Printed at. Vinayaka Offset Printers

உள்ளடக்கம்

# 1

## பிறப்பும் இளமைப் பருவமும்

இன்றைய பாகிஸ்தானில் உள்ள ஜீலம் மாவட்டத்தில் சாக் ஹமித் என்னும் கிராமத்தில் 1897—ஆம் ஆண்டு ஜூலை 4—ஆம் நாளில் நானக்சிங் பிறந்தார். தந்தை பகதூர் சந்த், மனைவி லட்சுமியையும் மூன்று குழந்தைகளையும் கிராமத்திலேயே விட்டுவிட்டு, கடை வைத்துப் பிழைப்பதற்காகப் பெஷாவர் சென்றிருந்தார். நானக்சிங் மூத்த குழந்தை; அக்குழந்தைக்கு ஹான்ஸ்ராஜ் எனறு பெயரிடப்பட்டது.

"ஆண்டில் ஒன்று அல்லது இரண்டு முறை தந்தை கிராமத்துக்கு வந்தார். ஒருவாரம் அல்லது பத்து நாட்கள் தங்கியிருந்து, ஊதியத்தில் ஒரு பகுதியை அன்னையிடம் தந்து, தாம் பிழைக்குமிடம் திரும்பினார். ஒவ்வொரு முறையும் புறப்படும் தறுவாயில், அடுத்தமுறை பெஷாவருக்கு மனைவி, பிள்ளைகளை அழைத்துச் செல்வதாக உறுதியளிப்பார். தன் கணவன் அழைத்துப்போவதாகச் சொன்ன அடுத்த தடவையை எதிர்நோக்கியே அந்த ஏழைத்தாய் பத்தாண்டுகளைக் கழித்தாள்" என்று நானக்சிங் எழுதுகிறார்.

ஹான்ஸ்ராஜ் தந்தையின் கடை பெஷாவரில் கன்டோனமெண்ட் பஜாரில் அமைந்திருந்தது. பொதாஹர், தோபா, முல்தான், மார்வார் முதலிய எல்லாப் பகுதிகளிலிருந்தும் மக்கள் வநது கூடும் இடம் அது. ராணுவ அலுவலர்களும், பிறரும் வந்து வாங்குவதால், லாபகரமான வகையில் வணிகம் நடந்தது. தொடக்க நிலையில் இந்த வணிகர்கள் கன்டோன்மென்டுககு தம் மனைவியரையும் குழந்தைகளையும் அழைத்து வருவதில்லை. ஆயின் மெல்ல மெல்ல இந்தப் பழக்கம் மறைந்தது. பல ஆண்டுகள் காத்திருந்து நிறைய சம்பாதித்ததும், அந்த இடத்திற்குச் செல்லும் நல்லதிர்ஷ்டம் லட்சுமிக்குக் கிட்டியது. "இங்கே முள்ளங்கியும் காரட்டும் ஏராளமாகக் கிடைப்பதுபோல், அங்கே திராட்சையும் மெலான்

பழங்களும் ஏராளம்'' என்று அன்னை பூரிப்போடு கூறிக்கொண்டாள். ஆயின், கையில் மூன்றும் கருவில் ஒன்றுமாக நான்கு குழந்தைகளுக்குத் தாயான அவளை அதிர்ஷ்டம் விரைவில் வஞ்சித்தது. நானக்சிங் வருத்தத்தோடு நினைவு கூர்கிறார்: "பாஸ்மாதத்து கிருஷ்ண பட்சம் அது; எங்கும் பனிமூட்டம்; மூன்று குழந்தைகளின் தாய், தன் கருவில் சுமக்கும் நான்காவதற்காகப் பிரசவ வேதனையை அனுபவித்துக்கொண்டிருந்தாள். மறைந்த ஒருவரின் பாடையோடு, இரண்டு நாட்களுக்கு முன்னர் மயானத்திற்குச் சென்ற கணவர், நிமோனியாக் காய்ச்சலோடு திரும்பி வந்து அவளருகில் கட்டிலில் சாய்ந்தார். அன்றிரவின் மூன்றாம் ஜாமத்தில் ஆண்மகவு ஒன்று பிறந்தது. நான்காம் ஜாமத்தில் தந்தை இறுதி மூச்சை விட்டார்''.

மூன்று சிறுவர்க்கும் ஒரு சிறுமிக்கும் தாய் — கணவனின் மறைவுக்குப் பிறகு திக்கற்ற விதவையானாள். மூத்தவன் பத்து வயதைத் தாண்டவில்லை. மறைந்த கணவரின் சகோதரர்களிடம் கடை மேற்பார்வையை ஒப்படைத்தாள். கடையைச் சீரழிவுகளுக்கு உட்படுத்த அவர்களுக்கு வெகுகாலம் பிடிக்கவில்லை.

எனினும் ஹான்ஸ்ராஜின் அன்னை மனந்தளரவில்லை. கடைக்குரிய பண்டங்களை வாங்குவதற்காக நகைகளை விற்றாள். அவளுடைய புத்திசாலித்தனமான உதவியால் ஹான்ஸ்ராஜும் அவனுடைய இளைய சகோதரனும் சிறுவயதிலேயே குடும்பப் பொறுப்பை உணர்ந்து செலுத்த முடிந்தது.

தம் அன்னையின் வாழ்வில் நிகழ்ந்த மனங்கொதிக்கும் நிகழ்ச்சி ஒன்றை நானக்சிங் இங்கே குறிப்பிடுகிறார். தன்னைக் கெடுக்க முயன்ற மிருகத்தனமான ஒருவனிடமிருந்து தப்புவதற்காக அன்னை ஜன்னல் வழியாக முதல் மாடியிலிருந்து தரையில் குதித்தாள். அக்கொடியவன் பெயரைச் சொல்லவோ, எழுதவோ கூட நானக்சிங் விருமபவில்லை. முழங்காலகளுக்குக் கீழே அவளுடைய கால்கள் பழுதுபட்டன. "அந்த விலங்கின் வெறிக்கு இலக்காகாமல் தன் கற்பைக காத்துக்கொள்ளும் முயறசியில் தலைப்பட்ட அன்னை, ஓராணடு இரண்டாண்டு அல்ல, பல ஆண்டுகள் படுக்கையில் கிடநதாள். இவ்வுலகம் எனக்குத் தன் இதயப்பூர்வமான மரியாதையை நல்கியுள்ளது; இனிய மனைவியைத் தந்திருக்கிறது. நயமும் பணிவுமிக்க மக்களை ஈந்துள்ளது என்றால், எல்லாம்

என்னுடைய அன்னையின் ஆசிகளால் தான் என்று நான் முழுதுமாக நம்புகிறேன். என் கையால் மலம் வாரித்தூய்மை செய்வது முதல் இரவு பகலாக நான் அவளுக்குத் தொண்டு புரிந்தேன்'' என்கிறார் நானக்சிங். ஐந்தாண்டுகளே முறையான பள்ளிக்கல்வி பெற முடிந்தது. என்பதையும் இதே சந்தர்ப்பத்தில் அவர் புலப்படுத்துகிறார்.

நானக்சிங் தம்முடைய முதற்காதலை நினைவு கூர்கிறார். காதலியின் பெயர் சா என்னும் முதலெழுத்தோடு தொடங்கியது. அது பற்றியே அவளை சாவித்திரி என்ற முழுப் பெயரால் அழைக்கிறார்.

"நான் அந்தச் சிறுமியின் பிள்ளைப்பருவத்து விளையாட்டுத் தோழன் என்றாலும், காலப்போக்கில், என் வாழ்வில் அவள் ஆழ்ந்து நிற்பாள் என்று நான் கனவு கண்டதில்லை. அவள் என்னைவிட ஒன்றிரண்டு ஆண்டுகள் மூத்தவளாக இருப்பாள் என்று நினைக்கிறேன். ஆயின் அறிவாற்றலிலும் ஒழுங்கிலும் அவள் என்னுடைய பாட்டிக்குப் பாட்டியாக இருப்பாள்! ஒப்பிட்டுப் பார்த்தால், நான் முற்றிலும் சாதாரணமானவன்தான். மற்றொரு வேறுபாடும் உண்டு. நான் எவ்வளவு விகாரமாக இருந்தேனோ அவ்வளவு கவர்ச்சியாக இருந்தாள் அவள். ஆயினும், இவ்வளவு வேறுபாடுகளுக்கிடையே அவள் என்னிடம் பாசமும் அன்பும் வைத்திருந்தாள்.'' என்று எழுதுகிறார்.

சாவித்திரி இளமையிலேயே தாயை இழந்தவள்; தந்தை, அவருடைய விதவைச் சகோதரி ஆகிய இருவர் பராமரிப்பில் வளர்ந்தாள். துரதிர்ஷ்டம் பிடித்த விதவை அத்தை அப்பாவி மருமகள் மீது பழி தீர்த்துக் கொண்டாள். சலனம், மூடநம்பிக்கை, எரிச்சலூட்டுதல், கொடூரம் ஆகியயெல்லாம் கொண்டவள் அவள். வறண்ட வீட்டுக் கடமைகளில் அடிக்கடி சாவித்திரிக்கு அத்தையிடமிருந்து ஏச்சும் உதையும் பரிசுகளாகக் கிடைக்கும். வெளியுலகத்தார்க்கோ அத்தை பயபக்தி நிரம்பிய உள்ளம் உடையவளாய்த் தோன்றினாள். தந்தை சாவித்திரியிடம் நிறைந்த அனபுடையவராயினும், சகோதரிக்கு அஞ்சியவராக இருந்தார்.

சாவித்திரி மிக இளமையிலேயே விதவையானாள். கொடுமையும் உற்றாள். விதவையின் துயர்க்கோலத்திற்கு அடையாளமாகச்

சாவித்திரி சடையைக் கத்தரித்துவிட்டுக் கொள்ளும்போது ஹான்ஸ் ராஜூக்கு அவளுடைய தோற்றம் பிடிப்பதில்லை. எனினும் அவளுடைய கூந்தல் வளர வளர ஹான்ஸ் ராஜூக்கு அவளிடத்தில் இருந்த ஈடுபாடு மிகுதியாயிற்று. அது ஒரு கவர்ச்சியாய் வளரலாயிற்று. "அவளுடைய கூந்தல் எவ்வளவு நீளமாக வளர்ந்திருக்கிறது என்று பார்ப்பதற்காகவே, ஒரு நாளில் பலதடவை அவள் வீட்டுக்கு நான் சென்றேன்" எனகிறார் அவர். ஒரு நாளைக்கு ஒரு நாள் அவளுடைய கூந்தலில வளர்ச்சி தெரியவில்லையென்றால், அவருககுச் சஞ்சலமாக இருக்கும்; சாவித்திரியோ பொறுமை இன்மைக்காக அவரை மெல்லக் கடிந்து கொள்வாள். கூந்தல் வளர்ச்சி முழுத்தோற்றம் பெற ஆறுமாதங்களுக்குமேல் ஆகும் என்று அவள் கூறும்போது, அவர் அப்பட்டமாக ஏமாந்து போவார். அதைவிடப் பெரிய ஏமாற்றம் அவருக்காகக் காத்திருந்தது. சாவித்திரி காசநோயால் துன்புற்றாள். மருத்துவர் யோசனைப்படி மலைவாழ் பகுதிக்கு அவளை அழைத்துச் செனறபோது, ஹான்ஸ் ராஜை உடன் அழைத்துச் செல்வதற்கு சாவித்திரியின் தநதை ஹான்ஸ் ராஜின் தாயிடம் அனுமதி வேண்டினார். மறுப்பேதும் சொல்லாமல் அவர்களோடு செல்ல அனுமதித்த தாயை வெகுவாகப் புகழ்கிறார் நானக்சிங். "இன்னொருவர் குழந்தைக்காகத் தன் குழந்தையை ஆபத்துக்குட்படுத்தும் தாய் அரியவள் தான்" என்கிறார் அவர்.

சாவித்திரி வெகுகாலம் உயிரோடிருக்கவில்லை. மரணபபடுக்கையில் இருந்தபோது மனம் திறந்து பேசுவதற்காக ஹானஸ் ராஜிடம் அனுமதி கேட்டாள். அனுமதி கொடுத்து அவர் செவி சாய்த்து நின்றபோது, வாய்திறந்து அவள் பேசுவதற்கு முன்னமே நிலைதளர்ச்சி ஏற்பட்டு ரத்தவாந்தி எடுத்தாள், அவள் கதை முடிந்தது. "அவளுடைய மறைவைவிட முற்றுப்பெறாத அவளுடைய சொற்கள், தொடர்நது பல ஆண்டுகள் என் உள்ளத்தை அலைக்கழித்துக் கொண்டிருந்தன என்கிறார் அவர். தம் வாழ்வில் நிகழ்ந்த முதலும் இறுதியுமாகிய காதல் அனுபவம் இதுவே என்று குறிப்பிடுகிறார் நானக்சிங்.

சாவித்திரியின் மறைவுக்குப் பின்னர் நானக்சிங் எழுதுகிறார்: "என்னுடைய துயரத்தைச் சற்று மறப்பதற்கு உறுதுணையாக இருந்தது ஒன்றே ஒன்றுதான். இசையிலும் கவிதையிலும் நான் கொண்ட ஈடுபாடுதான் அது. சாவித்திரி எனக்குக் கொடுத்த

நினைவுப்பரிசும் அதுதான். பொதுக் கூட்டங்களிலோ, நண்பர் குழாங்களிலோ ஒப்பிப்பது அல்லது பாடுவது கருதி எழுதப்படும் செய்யுட்களே அந்த நாளில் கவிதைகளாகக் கருதப்பட்டன. கிடைத்த ஒவ்வொரு வாய்ப்பிலும் எவ்வளவு சுவையற்றதாயினும் என் யாப்பு வல்லமையைக் காட்டிச் செய்யுள் புனைவதில் நான் அவ்வளவு ஆர்வங் கொண்டவனானேன். எதைக் கூர்ந்து நோக்கினாலும் அல்லது உணர்ந்தாலும் அதற்குச் செய்யுள் வடிவம் கொடுத்தேன். சில வேளைகளில் நண்பர்களிடையே அமர்ந்திருக்கும்போது எதேச்சையாகச் செய்யுளியற்றுவது உண்டு.

இதனால் ஹான்ஸ்ராஜ் பலரறிந்தநிலை உற்றான்; ஆனால், தீயபழக்கங்கள் அவனைப் பற்றலாயின. நானக்சிங்கினுடைய கணிப்பின்படி இவற்றுள் முதலாவது புகைப்பழக்கமே. ஓயாமல் புகைபிடிக்கும் பழக்கத்தில் தலைப்பட்டான். இது, குடிப்பழக்கத்திற்கும் திருடுவதற்கும் வழிகோலிற்று. திருட்டுப் பழக்கம் சிறிய தந்தை ஒருவரின் கடையளவில் அடங்கி நின்றது. ஒருவேளை அவரைப் பழிவாங்கும் பண்பாக இது பரிணமித்திருக்கலாம்.

தந்தை மறைந்தபோது, கடையிலிருந்து பண்டங்களை மறைத்துக்கொண்டு, தனக்கும் தன் உடன் பிறந்தார்க்கும் சிற்றப்பன்மார் செய்ததை மனங்கசந்து சாடுகிறார் நானக்சிங். ஆனால் அவர்களுள் ஒருவர் தக்கபடி அனுபவிக்க நேர்ந்தது. வினையின் விளைவுக்கேற்ப, அவருக்குப் பிறந்த மூன்று ஆண் குழந்தைகளும் குழந்தைப் பருவத்திலேயே ஒன்றன்பின் ஒன்றாக மறைந்தன. அவருடைய கடை ஹான்ஸ்ராஜ் கடையின் பக்கத்துக்கடை. அவருக்கு உதவுவார் யாரும் இல்லை. சிறிதுநேரம் எளிய கடமைகளுக்காகக் கடையை விட்டு இறங்கிச் செல்லும்போதெல்லாம், பக்கத்தில் எப்பொழுதும் இருக்கும் ஹான்ஸ்ராஜையோ அல்லது அவனுடைய தம்பியையோ அழைத்து, கடைமீது ஒரு கண்வை என்று சொல்லிச் செல்வார். கடையில் பணப் பெட்டி எப்போதும் திறந்தேயிருக்கும்; அதன் மீது அவர் அவ்வளவு கவனம் செலுத்துவதில்லை. "சித்தப்பாவின் முதுகு மறைந்த உடனேயே குரங்குபோல் பணப் பெட்டி மீது தாவி, கையளவு காசை வாரிக் கொள்வேன்" என்று எழுதுகிறார் நானக்சிங். "இது ஓராண்டுக்குமேல் தொடர்ந்து நடந்தது. சித்தப்பா கடுகளவும் சந்தேகப்பட்டதேயில்லை. என் தம்பிக்கும் கடைசி வரை இது தெரியாது" என்கிறார்.

அதிர்ஷ்டவசமாக நேர்ந்ததொரு சூழ்நிலையில் ஹான்ஸ்ராஜ் இந்தச் சழக்கினின்று விடுபட்டான் என்று தெரிகிறது. அவர் எழுதுகிறார்: 'லோஹ்ரி' திருவிழாவின் [ஜனவரி 12 ஆம் தேதி] இரவு அது. ராணுவ உணவுச் சாலை ஒன்றில் குமாஸ்தாவாக வேலை பார்த்த பிரம்மச்சாரி வீணன் ஒருவன். அவனுடைய அறையில் குடித்துக் கும்மாளம் போடும் கேளிக்கை நடந்துகொண்டிருந்தது. நாங்கள் அழைக்காமலேயே, ஏதோ காரியமாக முதியவர் ஒருவர் திடீரென்று உள்ளே வந்தார்." அவர் பெயர் கியானி பாக்சிங்; உள்ளூர் சிங் சபாவைச் சார்ந்த குருத்வாராவில் அர்ச்சகர் அவர். ஹானஸ்ராஜின் கடையிருந்த மார்க்கெட் பகுதியிலேயே அந்தச் சபா இருந்தது. நானக்சிங் எழுதுகிறார்: "எங்களுக்கிடையே தொடர்பு எப்படித் தொடங்கிற்று என்று எனக்கு நினைவில்லை. நான் எழுதிய பாடல்களுக்கு இசை அமைப்பதற்கு ஆர்மோனியம் பயின்ற போது எங்களிடையே பிணைப்பு ஏற்பட்டது என்ற அளவில் குறிப்பிட்டுச் சொல்ல முடியும். சில சமயங்களில் இந்தப் பாடல்களை நான் அவருக்குப் பாடிக் காட்டுவது உண்டு."

இந்த நிலையில், கியானி பாக்சிங்குக்கும் ஹான்ஸ் ராஜூக்குமிடையே ஒன்றும் நிகழவில்லை. பெஷாவர் ரயில் நிலையத்தில தலைமைப் போர்ட்டராக வேலைபார்த்த பிரதாப்சிங் என்பவர் குருத்வாராவில சுக்மானி என்னும் பக்திப் பாடலைப் பாடுவது உண்டு. முன்பெல்லாம் அதைக் கேட்பதற்காக அடிககடி அங்குப் போய்க்கொண்டிருந்த ஹான்ஸ்ராஜ், தொடர்ந்து செல்வதைக் கைவிட்டான. குருத்வாராவுக்குப் பின்புறம் இருந்த பூங்காவில் உலாவிவிட்டு ஒருநாள் ஹான்ஸ்ராஜ் கடைக்குத் திரும்பிக்கொண்டிருந்த போது, கியானிபாக்சிங்கை நேருக்கு நேராகக் கண்டான். கியானி அவனை இயல்பாக வரவேற்றார். அது அவருடைய எல்லையற்ற நாகரிகத்தைப் புலப்படுத்தியது. நானக்சிங் நினைத்துப் பார்த்துச் சொல்கிறார். "இப்பொழுதெல்லாம் நீ குருதவாராவில் நாள் கணக்காகக் காணப்படுவதில்லை. பெஷாவரிலிருந்து கொஞ்சகாலம் வெளியூர் சென்றிருந்தாயா?" அங்கிருந்து மார்கெட் வரை இருவரும் ஒன்றாக நடந்து சென்றார்கள். ஹானஸ்ராஜ் கடையை நோக்கித் திரும்பியபோது, மறுநாள் காலை குருத்வாராவுக்கு வருவாயா என்று அவனைக் கேட்டார்

மறுநாள் ஹானஸ்ராஜ் குருத்வாரா சென்றபோது, கியானி பாகசிங்

அவனைத் தம்முடைய அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கு அவன கண்ட காட்சி அவனுடைய ஒழுங்கீனத்தைப் புலப்படுத்தி அடுத்து என்ன நிகழுமோ என்று அஞ்சும்படி இருந்தது. கியானி பாக்சிங், முதல் சந்திப்புப் பற்றி எதுவுமே குறிப்பிடவில்லை. வேறுபலவற்றைப் பற்றிப் பேசினார். அவர்கள் பிரிந்து சென்ற போது கியானி கூறினார்: "எனக்குத் தெரிந்தவரை குருத்வாரா இசை நிகழ்ச்சியில் உளங்குவிந்த ஆர்வங் காட்டுகிறாய். பாடல் இயற்றும் திறமையும் உன்னிடம் உள்ளது. உனககே உரிய இசைக்குழு ஒன்றை நீ ஏன் அமைகககக் கூடாது?" "கியானிஜி, தங்கட்கு ஒவ்வொன்றும் நன்றாகத் தெரியும்; அப்படியிருந்தும் என் பாவங்களைப் பாராமல் ஏன் கண்ணை மூடிக்கொள்கிறீர்கள்? என்போன்ற பாவியிடமிருந்து, அத்தகைய ஒன்றை எப்படி நம்பி எதிர்ப்பார்க்க முடியும்?" கியானி, ஹானஸ்ராஜின் தலையைத் தம்முடைய மார்பில் அணைத்துக் கொண்டு கூறினார், "உன்னைச் சீர்ப்படுத்தும் பேராற்றல் குருவுக்கு உண்டு; நீ மனம் சோரத் தேவையில்லை".

மறுநாள் மார்கெட் கடைக்காரர்களின் பிள்ளைகள அறுவரை கியானி அழைத்துவந்து அவர்களிடம் கூறினார், "இளைஞர்களே, கவனியுங்கள். இன்று முதல் லாலாஜி [ஹான்ஸ்ராஜ்] குருமார்கள் பற்றிய பக்திப் பாடல்களைப் பாடுவதற்குப் பயிற்சி கொடுப்பார். இந்த ஆண்டு குரு பூர்வ இசையில உங்கள் குழுவே தலை சிறந்ததாக இருக்கும் எனறு ஜோஸ்யம் கூறுகிறேன்". ஜோஸ்யம் உண்மையாயிற்று என்று கூறத்தேவை இலலை. பழைய பழக்கங்களை விட்டுவிட்டுப் புதிய கதை தொடங்குமாறு ஒரு முறைக்குப் பலமுறை கியானி கேட்டுக் கொண்டார். அந்த ஆண்டிலேயே ஹான்ஸ்ராஜ் சீக்கிய சமயம் சார்ந்து நானக்சிங் ஆனான். அப்பொழுது அவனுக்கு வயது பதினெட்டு. தம் வாழ்வில் நிகழ்ந்த இநத மாறுதலுக்குரிய காரணங்களை ஆராய்ந்தறிந்து நானக்சிங் பெரிதும் அடக்கத்துடன் கூறுகிறார்: "நான் அதை நுணுகி நோக்கி கியானி சிங் என்னை நடத்திய விதத்திற்கு வேறாகப் பல காரணங்களைக காண்கிறேன். அவற்றுள் குறிப்பிடததக்கது எனது புகழ்வேட்கை. காலஞ்சென்ற கியானி ஹொர்சிங்கின் செல்வாககு அந்நாளில் என்பால மிகுதியும படிந்ததும் காரணமாகலாம். அவர் பெஷாவரில சமயப பிரச்சாரம் செய்து கொண்டிருநதார். ஆரிய சமாஜப் பிரசாரகர்களுடன் சுவையான விவாதங்கள் நடததுவார். அவை காரசாரமாக உருவெடுத்தலும உண்டு. கியானி ஹொர்சிங், என்னைச் சீக்கியனாகுமாறு அடிக்கடி கேட்டார். அதன் விளைவாக,

ஒரு புறம் எனக்குக் கைகொடுத்து உதவிய அவர் என் மனமாயைகளிலிருந்து என்னை விடுவித்தார். இந்த விடுதலை ஒரு தனிககதை. அதை "பூசாரி" என்னும் எனது நாவலின் முன்னுரையில் சற்று விளக்கமாக விவரித்திருக்கிறேன்."

கியானி பாக்சிங்கின் திருவடிக்கீழ், பலவற்றைக் கற்றுப் பயன்பெற்றதாக நானக்சிங் கூறுகிறார். 1918—ஆம் ஆண்டில் முதல் உலகப்போர் முடிந்தபோது, உலகெங்கும் இன்புளுயன்ஸாக் காய்ச்சல் பரவி பீடித்தபோது, அவர் மீது எனறும் மாறாத நல்லெண்ணம் உண்டாயிற்று. மக்கள் பூச்சிகளைப்போல எங்கெங்கும் மாண்டு மடிந்தனர். பிற இடங்களைவிடப் பெஷாவரில நிறையப்பேர் மாய்ந்தனர். நோயுற்றவர்களைப் பேணுதற்கும், மாண்டு போனவர்களுக்கு இறுதிக் கடன புரிதற்கும் நாற்பது பேரடங்கிய குழு ஒன்றை கியானிபாக்சிங் ஏற்பாடு செய்திருந்தார். அவர்களுள் பதினைநது பேர்தான் உயிர்தப்பினர். அந்த அதிர்ஷ்டக்காரர்களுள் நானக்சிங்கும் ஒருவர்.

அத் கிரியா பூல் [பாதி சிதைந்த மலர்] என்னும நாவலில் வரும் சிதபாபா இநத கியானி பாக் சிங்தான். வேறு சில நாவல்களிலும் இநத சித்பாபா வாசகர்களுக்குக காட்சி தருவார். நானக்சிங் கூறுகிறார்: "என்னுடைய இநத பாபா, அல்லது அவரை நீங்கள் எப்பெயரிட்டு அழைத்தாலும் சரி, என்னுடைய ஒவ்வொரு படைப்பிலும காணப்படுவார் என்று கூறுவதில உள்ளபடியே எனககுத் தயக்கமே கிடையாது."

நானக்சிங் கூறியுள்ள இநத சித்பாபா அல்லது கியானி பாக்சிங்கைப் பற்றிய இன்னொரு நிகழ்ச்சி இங்கே குறிப்பிடத்தக்கது. 1920—1921 வாக்கில், சீக்கிய குருத்வாரா சீர்த்திருதத இயக்கம் நடநத நாட்களில [நானக்சிங் தம் கதையில் தேதி குறிப்படவில்லை] ராவல பிண்டி, பெஷாவர், மேற்கு பஞ்சாபின வேறு சில நகரங்கள் ஆகியவற்றில் இநதுக்களுக்கும் சீககியர்களுக்குமிடையே பதட்டம் நிலவியது. ஒருநாள் நள்ளிரவு வேளையில் நானகசிங்கும் அவருடைய தோழர்கள் சிலரும் எங்கோ இருநது வந்து தான் போக வேண்டிய இடத்திற்கு வழிகேட்ட இந்த இளைஞனை நையப்புடைத்துக கடுமையாகக காயபபடுத்திவிட்டார்கள். பிறகு முற்றிலும் நினைவு இழந்து ரத்தம் சொட்டிய நிலையில் ஓர் ஒதுக்கிடததில் அவனைப் போட்டு

விட்டார்கள். கியானி, நானக்சிங்கைக் கூப்பிட்டு அனுப்பி, அந்த இளைஞனின் காயங்களைக் குணப்படுத்துவதற்காக டாக்டரை அழைத்து வரச் சொன்னார். பெரிதும் வருத்தம் நிரம்பிய கண்ணீரை கியான் சிங்கின் கண்களில் கண்டார் நானகசிங். தனது தகாத செயலுக்காக கியானி அவரைத் திட்டி அடித்திருந்தால்கூட அதைத் தாம் விரும்பியிருக்கக் கூடும் என்று அவர் கூறுகிறார்.

# 2

## எதிர்கால நிலை குறித்த கவலை

அவருடைய தாயின மறைவிற்குப் பிறகு, அதனை ஒட்டிய நாட்களில், அவர் தன்னநதனியராகி அஞ்ஞாதவாசியாகிவிட எண்ணினார். கியானிபாக்சிங், அவரை ஓராண்டுப் பொறுத்திருககுமாறு வேண்டி, தமது இளஞ்சீடர்க்குத் திருமண ஏற்பாட்டிற்கு ஆயத்தம் செய்யலானார். எனினும் நானக்சிங் அதற்கு உடன்படவில்லை. ஆயின, தமது மறுப்பைப் பற்றிய வருத்தத்தினைக் கியானி சிறிதும் காட்டிக் கொள்ளவிலலை என்று குறிப்பிடுகிறார் அவர்.

இநநிலையில் நானக்கிங் கடையை நம்பி வாழும் பிழைப்பையும் விட்டவரானார். ஆயின, "உலகில் நிலை கொள்ளுதற் பொருட்டு" ஏதேனும் ஒரு பணி அவர்க்குத் தேவையாயிற்று. கியானி ஹொர்சிங் புதிதாகத தொடங்கியிருந்த அச்சகத்தில பணியாற்றுமாறு கூறி அவரை ராவல் பிண்டிக்கு அனுப்பி வைகக இநநிலையையும் கியானி பாக்சிங் சமாளித்தார். உரிமையாளர்கள் கைமாறி அச்சகம் அமிர்தசரஸுக்கு மாறும் வரை, ஒன்றரையாண்டுக்காலம் நானக்சிங் அதில் காலம் கழித்தார். எனினும் இந்தக காலகட்டமும் அவர்க்கு மன அமைதியையும் உலகியலோடு இயைநது செல்லும் திறததையும் நல்கவிலலை.

அச்சகம் அமிர்தசரஸுக்கு மாறியது, அதனால் அவர் வேலை இழகக நேர்நதது ஆகியவை, அஞ்ஞாதவாச எண்ணத்தைக் கிளைத்தெழச் செய்தற்குரிய சந்தர்ப்பத்தை உண்டாக்கிவிட்டன. அமிர்தசரஸிலிருந்து ராவலபிண்டிக்கு வந்து, குருத்வாரா ஒன்றில், வேதநூல்களைப் பயிற்றிக் கொண்டிருந்த நிர்மலசாது ஒருவரைப் பற்றிக கேள்விபபடலானார். அமிர்தசரஸில் அவர் இருந்தபோது அங்கேயே அவருடைய தொடர்பினைப் பெறுவது பற்றிச் சிந்தித்தார். ஆனால், அவரைப் பற்றி அமிர்தரசஸில் அவர் கொண்டிருந்த எண்ணததிற்கு நேர் எதிர்மாறானவராக அநதச சாது இருந்தார். அதன விளைவாக, எல்லாச் சாதுக்களின் மீதும், தூயவர்போல்

நடிப்பவரிடத்தும், மிகுந்த வெறுப்புடையவர் ஆனார். சாது வாழ்ந்த இடத்திலிருந்து வெளியேறினார். பிராமணப் பூசாரி ஒருவர்தம் அன்பினால் "பெஷாவரியன் தா குருதவாரா" என்றும் "காசிநாதர் கோவில்" என்றும் பெயர் பெற்ற குருத்வாராவில் மாடியில் ஒரு அறை இவர்க்குக் கிடைத்தது.

இந்த வேளையில், எவ்வளவு கடுமையாக முயன்றும் தம் உள்ளத்தை தியானத்திலும் வழிபாட்டிலும் திருப்ப முடியவில்லை என்று நானக்சிங் எழுதுகிறார். டிசம்பர், ஜனவரி மாதக் கடுங்குளிரில் விடியற்காலம் மூன்று மணிக்கே எழுந்து நீராடி, தியானத்திலும் வழிபாட்டிலும் மணிக்கணக்காக ஈடுபட்டுப் பழகிவிட்ட அந்த நாட்களெல்லாம் ஓடி மறைந்தன. இப்பொழுது விடிந்து பத்து மணி வரை படுக்கையில கிடந்து, கணத்துக்குக் கணம் தம் வாழ்வு இத்தகையது என்று உணரும் நிலை உற்றார்.

இந்நிலையில், குருமார்களின் மீது பக்தி புலப்படுததும பாடல்களும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆதரவோடு, தத்தம் ஈடுபாடுகளுக்கேற்ப நடநத பூசாரிகளின் ஒழுங்கீனத்திற்கு இலக்காகியிருந்த குருத்வாராக்களைத் தூய்மைபபடுத்தும் போராட்டத்தில் சீக்கியர்களைச் சேருமாறு மேற்கொணட தூண்டுதலும், இவரைப்பேணிக் காக்கத் தலைபபட்டன. இவற்றையெலலாம், பெஷாவரிலிருந்தபோது இவர் சாவித்திரிககாக எழுதியிருநதார். சத்குரு மகிமை எனனும் பெயர் கொணட பாட்டு நூல் ஒன்றின் மூன்று பதிப்புககளை அவர் ஏற்கெனவே வெளியிட்டிருந்தார். ஒனறு பெஷாவரிலும், இனனொன்று ராவல்பிண்டியிலும் வெளியாயின. ஒவ்வொரு புதிய பதிப்பிலும் மேலும் சில பாடல்களைச் சேர்த்திருந்தார். முதல பதிப்பின விலை ஒரு பைசா; இரண்டாவது பதிப்பின் விலை ஒரு அணா; [நான்கு பைசா]; மூன்றாவது இரண்டணாவும், நான்காவது மூனறணாவாகவும் விலை பெற்றன. அடுத்து, நான்கணா விலையுள்ள பெரிய பதிபபு ஒன்றினை அமிர்தசரசில் வெளியிட்டார். முதலில் அச்சிட்ட 2000 படிகளை உள்ளூர் விற்பனையாளர்களே வாங்கிவிட்டனர். இவ்வெற்றி நானக்சிங் கிர்பல்சிங் என்னும் இருவர் பெயருங் கொண்ட புதிய கம்பெனி ஒன்றின் பங்குதாரராக வருமாறு, கிர்பல்சிங் என்பவர் இவரை அழைக்கச் செய்தது. இவ்வாணிகம், மொத்தமாக ஆயிரத்தொண்ணூறு ரூபாய் நிகர லாபம கொடுத்தது

எனறாலும், வாணிகத்தின் மீதிருநத வெறும் பங்குதாரர் நிலையினினறு தம்மை விலக்கிக்கொளளுமாறு செய்தது.

1922 ஆம ஆணடில துண்டு வெளியீட்டின முழு உரிமையை முழுதுமாக ஆயிரம் ரூபாய்க்குத் தமக்கு விற்றுவிடுமாறு முன்னாள் பங்குதாரா யோசனை கூறியபோது, கியானிபாக்சிங்கின் அறிவுரையின்பேரில் அதை நிறுத்தி வைத்தார். புத்தகங்களின வருவாய் மொத்தமாக இருபதினாயிரம் ரூபாயை ஈட்டித் தந்தது எனறும் அதிலிருந்து அடுத்தடுத்து ஆண்டுகளில் ஐந்நூறு ரூபாய் வருமானம் வந்தது என்றும் 1959—இல நானக்சிங் குறிப்பிட்டார்.

சத்குரு மகிமை என்னும் நூலின உரிமையை விற்பது குறித்த யோசனை கேட்பதற்காக நானக்சிங் கியானிசிங்கிடம் செல்லவிலலை. மன அமைதி இன்மை குறித்து அவருடைய அறிவுரையைப் பெறுவதற்காகவே அவரை அணுகினார். அகாலி இயக்கத்திற் கலந்துகொண்டு சிறை செல்லுமாறு கியானி அவர்க்கு யோசனை கூறினார். நானக்சிங் அதிர்ச்சியுறறார் எனினும் அவருடைய அறிவுரையை ஏற்று நடப்பதெனத் தீர்மானித்தார்.

அமிர்தசரஸ் சென்று ஐநதாறு நாட்களுக்குப் பிறகு, குரு காபாக் சென்ற அகாலி சத்யாக்கிரக அணி ஒன்றில் சேர்ந்து கொண்டார். லாகூரிலுள்ள பார்ஸடால சிறைக்கு அவர் அனுபபபபட்டார். அங்கு ஏறகெனவே இரண்டாயிரம்பேர் இருந்தனர். தொடர்ந்து ஒவ்வொரு நாளும பலர் வந்த வண்ணமிருநதனர்.

சிறையிலிருந்தபோது, நானகசிங், புறத்தில் அமைதி காணுதலை விடுத்து அகத்தில அதைக் காணும் வாய்ப்பு ஒன்றைப் பெற்றார். அவர் தமககுள் ஆழ்நது சென்று, தியானத்தில் ஈடுபடுதற்குரிய தமது பழைய ஆறறலை மீண்டும் பெற்றார்.

இங்கு, தம்மை ஆட்கொண்ட ஜகந்நாத் என்பவரைக் கண்டார். சிறப்புப பிரிவில் இருந்த கைதி அவர்; காசநோயினால் அல்லலுற்றவராயிருந்தார். இந்தி, வங்காள மொழிச் சிறுகதைத் தொகுதிகள், நாவல்கள் ஆகியவற்றை வெளியிலிருந்து பெறுதற்கும் படிபபதற்கும அவர்க்கு அனுமதி இருநதது. இவற்றில் பெரும்பாலானவை முன்ஷி பிரேம் சநத் இயற்றியவை. நானக்சிங் சில வேளைகளில் அவற்றை வாங்கிப் படித்தார். முன்ஷி பிரேம்

சந்தின் நூல்களைப் படிக்கப் படிக்க அவை தம் வாழ்வில் ஒரு புதிய திருப்பம் தந்ததாகவும், புதிய பாதையைக் காட்டியதாகவும் நானக் சிங் கூறுகிறார். பிரேம் சந்தைப் போல் தாமும் ஒரு சிறந்த நோக்கத்துடன் எழுத்தாளராவது என்று உறுதிபூண்டார். இரண்டு மாதங்களில், தொடக்கநிலை எழுத்தாளர்கள் செய்வதுபோல், சுய சரிதை நாவல் ஒன்று எழுதினார். சாவித்திரி, கியானி பாக் சிங், அமிர்தசரஸ் நிர்மல சாது, பார்ஸ்டால் சிறையிற் பணிபுரிந்த முஸ்லிம் வார்டன் ஆகியவர்களெல்லாம் அதில் பாத்திரங்களாக உருப்பெற்றனர். ஆயின், அதன் கையெழுத்துப் பிரதி சிறையதிகாரிகள் கண்ணில் ஒருநாள் பட்டது. நானக்சிங் அதற்குப் பிறகு அதைப் பார்க்கவேயில்லை 'அத்கிரி காலி' [பாதி மலர்ந்த மொட்டு] என்பது அதன் தலைப்பு.

அவருடைய புகழ் வாய்ந்த நாவல்களுள் ஒன்றான 'அத்கிர்கா பூல்' [பாதி மலர்ந்த மலர்] என்பதன் முதற் படிவம் என்று கருதத்தக்கது அது. மன அமைதியின்மைக்குரிய தீர்வு, சிறை வாழ்வுதான் என்று கியானி பாக்சிங் போட்ட புதிர் இவ்வேளையில் தான் எனக்குத் தெளிவாயிற்று எனறு நானக் சிங் கூறுகிறார்:— "இதுமட்டுமன்று, இந்த ஒன்பது மாதச் சிறைவாழ்வுதான் என் எதிர்காலத்தை உருவாக்கியது என்பதும் அறுதியாயிற்று. ஆண்டில் முக்கால் பங்குக் காலம் சிறையில் கழிந்து வெளிவந்த பிறகே, என் உள்ளம் முற்றிலும் நலம் பெற்றது என்பதை நான் உணரலானேன். நெகிழ்ந்துகிடந்த என் ஒழுங்கும் அதன் முழு உச்சியை எட்டிற்று" எனினும் அவருடைய உடல் நலம் சிறைவாச நாட்களில் குறிப்பிடத்தக்க வகையில் பாதிக்கப்பட்டிருந்தது.

சிறையிலிருந்து வெளிவந்ததும், முன்னாள் பங்குதாரர் கிர்பால் சிங்கும் அவருடைய மனைவியும் அவருக்கு மிக இனிய வரவேற்பளித்தனர். அவர்கள் இருவகை வியப்புச் செய்திகளை கொண்டுவந்திருந்தனர். சத்குரு மகிமை என்னும் நூலின் இன்னொரு பதிப்பைப் புத்தக விற்பனையாளர்களுக்கு விற்று அதன் முழு வருவாயில் ஐந்நூற்றைம்பது ரூபாயை அவரிடம் அளித்தனர். அடுத்த வியப்புச் செய்தி அதனைவிடப் பெரியது. மணம் முடிக்க அவர்கள் இருவரும் செய்திருந்த ஏற்பாடு அது. அவர்களுக்கிடையே பங்குதாரர் நிலை அவர் சிறை செல்லும் முன்னரே குலைந்துபோயினும், கம்பெனி அவருக்கே உரியது என்று கூறி, கிர்பால்சிங் அதை அவரிடம் ஒப்படைத்துத் தாம் அவருடைய

ஏஜண்ட் தான் என்றும் குறிப்பிட்டார். இந்த எதார்த்த நடவடிக்கை, நானகசிஙகைப் பெரிதும் ஆட்படுத்தி, எதிர்கால மாமனார்க்கு மாப்பிள்ளையாக ஆவதற்கு ஒப்புதல் தருமாறு செய்திருக்கக் கூடும்.

•

நானக்சிங் தம் மனைவியைப் பெரிதும் புகழ்கிறார். வாழ்நாளெல்லாம் அவள் அதற்குத் தகுதியானவள் என்று நிருபித்தது பெரிய அதிர்ஷ்டம் என்றும், கணவனின் மறைவுக்குப் பிறகும் அவள் அவ்வாறே இருப்பாள் என்பது அவர்க்கு முன்னரே நிருபணமாகிவிடடது என்றும் குறிப்பிடுகிறார். "என் மனைவிக்கு இப்பொழுது பதின்மூன்று அல்லது பதினான்கு வயது இருக்கும்". "எனனைவிடப் பன்னிரண்டு ஆண்டு இளையவள்" என்று எழுதுகிறார். அந்த நிலையில் அவள் இளமைக் குரிய முழுமலர்ச்சி பெறவில்லை எனினும் அவளுடைய அங்க நலன்கள் என் மீது ஒரு விசித்திர ஆற்றலைக் காட்டிக கொண்டிருந்தன; அந்த அங்க நலனகளை என்னுடைய நாவல்களில் தீட்டிக் காட்டியுள்ளேன்' என்கிறார்.

நானக்சிங் மேலும் எழுதுகிறார், "திருமண விஷயத்தில் நான் பெரிதும் விழிப்புடன் இருந்தேன். அமிர்தசரஸ் பெண்ணொருத்தியோடு என் வாழ்வு இணையப்போகிறது என்ற செய்தியை முதலில் கேள்விப்பட்டபோது, என் விழிப்புணர்வு அச்சமாக மாறிற்று. அமிர்தசரஸ் பெண்களைப் பற்றி நான் நிறையக் கேள்விபபட்டிருக்கிறேன். விரல் நுணிகளின் அசைவால் தம் கணவனமாரை ஆட்டிவைக்கிறவர்கள் தலைக்கனம் பிடித்தவர்கள் என்றெல்லாம் கூறுவார்கள். தமக்கு உறுதி செய்யப்பட்டவளைத் திருமணத்திற்கு முன்னரே காணவேண்டும் என்ற கவலையை முனனரே அவர்பால் அந்தச் செய்தி தோற்றுவித்தது. அதற்காகத் தாமே ஒரு வாய்ப்பினை உண்டாக்கினார். சௌக்பாசியன் என்னும் பகுதியில உள்ள பெண்கள் பள்ளியின் மாணவி என்பதை அவர் அறிவார். அவளுடைய தோற்றம் எத்தகையது என்பதை அவர் அறிந்திருந்தார். எனவே ஒருநாள் அவள் பள்ளியிலிருந்து திரும்பும் போது, அவளைக் காண முடிநதது. அமிர்தசரஸ் பெண்களைப் பற்றி அவர் கேளவிப்பட்டிருந்த புத்திசாலிததனம் ஒனறும் அவளிடத்தில் புலப்படவிலலை. இன்னொரு புறம் அவள் மிகவும் எதார்த்தமாகத் தோன்றினாள். "இநத அப்பாவிப் பெண் தன விரலசைவில் என்னை ஆடடிவைக்க முடியாது என்று தோன்றிற்று. ஆயின் அவளுடைய எதார்ததமான அன்பு என்னை நடம்புரியச செய்யும் என்பது உறுதி".

விதியின் பிடியிலிருந்து தப்புவது பற்றி நண்பர்களிடையே விவாதிக்கும் போதெல்லாம், தெய்வம் தமக்கென்று வகுத்தளித்த விலையுயர்ந்த வெகுமதிகள் இரண்டனுள் ஒன்று என் அன்னை; இன்னொன்று என் பிள்ளைகளின் அன்னை!! என்கிறார் நானக் சிங்.

அடுத்து என்ன செய்வது என்று முடிவெடுக்க வேண்டியவரானார் நானக் சிங். பெஷாவர் நண்பர் ராம் சிங் என்பவரோடு கலந்து கொண்டு அவரையும் பங்குதாரராக ஏற்று லாகூரில் அச்சகம் அமைப்பது எனறு முடிவு செய்தார். ராம்சிங்கின் தந்தையார், தம் மகன் சார்பில மூவாயிரம் ரூபாயைத் தொடக்க முதலீடாகக் கொடுத்தார். இநதக கூட்டுறவு ஓராண்டு அளவிற்கே நிலைத்திருந்தது. அகாலி கட்சிப் பத்திரிகையை அச்சிடும்பணியை நானக்சிங் ஏற்றுக் கொண்டார். அது விரைவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கவனத்தைக் கவர்நதது. சம்பந்தமில்லாத அச்சிடுவோர் இந்தர்சிங என்பவர் மூன்றாண்டுகள் சிறைதண்டனை பெற்றார். சிறையிலிருந்த காலம் வரை, ஆண்டொன்றுக்கு முந்நூறு ரூபாய் வீதம் இந்தர்சிங் குடும்பத்திற்கு பென்ஷன் கொடுக்க விரும்பினார் நானக்சிங். ராம்சிங் இதை அனுமதிக்கவில்லை. அதனால் பங்குதாரர் நிலை சிதைந்தது. நானக்சிங் அச்சகத்தை ஏற்றுக்கொண்டு மூவாயிரம் ரூபாய்க்கும் அதற்குரிய வட்டிக்கும் சீட்டு [பாண்ட்டு] எழுதிக் கொடுத்தார்.

அரசியல் பத்திரிகைகளை அச்சிடுவது ஆபத்தாக இருந்தது; முககியமாக அதனாலேயே அச்சகத்தை நானக்சிங் நடத்த முடியவில்லை. அப்பத்திரிகைகளே லாபகரமாக இருநதன. சம்பந்தமில்லாத அச்சிடுவோர் ஒருவரை நானக்சிங் நியமிக்க விரும்பவில்லை. அதற்கேற்ப அச்சகம் நஷ்டத்தொகைக்கு விற்கப்பட்டது. அந்தத் தொகை ராம்சிங்குக்குத் தந்த சீட்டின் பெரும்பகுதிக் கடனைத் தீர்ப்பதற்காக அவருக்குத் தரப்பட்டது. இந்தர்சிங் சிறையில் இருந்தவரை மாதம் இருபத்தைந்து ரூபாயை அவர் குடும்பத்திற்குத் தொடர்ந்து உதவினார்.

இவற்றால் எல்லாம், விரைவில் நானக்சிங் ஆறாயிரம் ரூபாய்வரை கடனுக்குரியவரானார். ஆயின் சத்குரு மகிமை எனனும பாடல்நூல் நன்கு விலைபோயிற்று. அதன வருவாய் கொண்டு பெரும் பகுதிக்கடனை அடைத்தார். மனைவியின் நகைகளை விற்று எஞ்சிய தொகையைச் செலுத்தினார். மனைவியைப் பொறுத்தவரை

அது பெருந்தியாகம் என்று கூறி அவனை எப்பொழுதும் பாராட்டினர்.

இந்நிலையில், நாவல்கள் எழுதுவதை முழுநேரத் தொழிலாக மேற்கொண்டார் நானக்சிங். புத்தக வியாபாரிகளிடமிருந்து, நூல் விற்று வரும் வருவாயைப் பாடுபட்டுப் பெறும் அனுபவமே தொடக்க நிலையில் அவர்க்கு உண்டாயிற்று. மிகச்சிறிய முதல் நாவல் 'மற்றை மா [மாற்றாந்தாய்] என்பது பதிப்புரிமை வகையில் பத்து ரூபாய் வருமானமே தந்தது. அவ்வாறே 'கால் சக்கர்' [காலச்சக்கரம்] என்னும் இரண்டாவது நாவல் பதினைந்து ரூபாய்க்கு விலை போயிற்று. நானக்சிங் எழுதுகிறார்: "அவை இரண்டும் ஓராண்டிற்குள்ளேயே, வெளியிட்டோர்க்குச் சில நூறு ரூபாய்கள் ஈட்டித் தந்தது அறிந்து வருத்தமும் பொறாமையும் கொண்டேன்". அடுத்தடுத்து வெளியிட்ட நாவல்களைப்போல மூன்றாவது நாவலைத் தாமே வெளியிட்டார். அவை நன்கு விலைபோயின; ஆயின் புததக வியாபாரிகள் முறையாக நடந்துகொள்ளவில்லை. நூல்களைக் கடனுக்குத் தந்து, தமக்குரியதைப் பெற வெகுகாலம் காத்துக் கிடந்தார்.

அநத நாளில் படைப்பிலக்கியம் இயற்றி வெளியிடும் நிலைமைககு, இச்சந்தர்ப்பத்தில் அவர் கூறிய கருத்துக்கள் நல்லதொரு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. அவர் எழுதுகிறார்: "ஆண்டுக்கணக்கில் இந்த மாதிரி நடப்புத்தான் தொடர்ந்தது. நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு விற்பனையாளர் கடைகளில் கொண்டுபோய்ப போட்டுவிடடு எனக்குரியதைப் பெறுவதற்கு அவர்களுடைய வாசலில் சினத்தோடு அல்லல்பட்டுக் கொண்டிருந்தேன. அதில் மரியாதையோ அல்லது கௌரவமோ இலலை. அவனவனுக்கு மகிழ்ச்சி ஏறபடும் வகையில் எவனும் எனனை இழிவுபடுத்துவது உண்டு. இத்தகைய தகாத நடத்தைகளால, நஞ்சுண்டு மாய்ந்து போகலாம் என்று அடிக்கடி உணருமளவிற்கு வெறுமை உறறேன்."

முன்பணம பெறறுக்கொணடு, வெளியிடுவோர்ககு நூல்களைத் தரும் பிறிதொரு முறையை நானக்சிங கூறினார். ஆயின இதுவும் திருபதி தராத மாற்று ஏறபாடு என்பது நிருபணமாயிற்று. வாழ்வதற்காகப்படும் இநதப்பாடு பல ஆண்டுகள் தொடர்ந்தது. ஐம்பது வயதில், தன் வளர்ச்சி நிலையின் இறுதியில், நூல் வெளியிடும நல்லதொரு நண்பரை அவர் பெற்றார். பிரிட்லாரி

[அன்புச் சங்கிலி] என்னும பத்திரிகையின் பதிப்புக்குழு உறுப்பினருள் ஒருவர் அவர். பெயர் பிரதமசிங்; டெல்லி நவயுக வெளியீட்டாருள் ஒருவர்.

1933—41 இந்தச் சில ஆண்டுகளில் பிரிட்நகர் என்னும் காலனியில் நானக்சிங் வாழ்ந்தார். எழுத்தாளர்களும் கலைஞர்களும் வாழும் அப்பகுதியைத் தோற்றுவித்தவர் புகழ்வாய்நத பஞ்சாபி எழுத்தாளர் குருபக்ஷ் சிங் எனபவர்.

குருபக்ஷ் சிங் பிரிட்லாரி [அன்புச்சங்கிலி] எனனும் தமது மாதப் பத்திரிகையைப் ı படிப்பவர் என்று நானக்சிஙகுககுத் தெரிய வந்தது. 1937—இல, பிரிட்சேனா [அன்புப் படை] வைத் தோற்றுவித்து வளர்க்கும் திடடத்தை அவர் வெளிபபடுத்தியபோது நானகசிங் அதில் முதல்வராகச் சேர்ந்தார். அமிர்தசரஸ் மாவட்டத்தைச் சார்நத பிரிட்நகர் காலனி "அன்பு உலகம" உருவாக்குவது பறறிய திட்டததின ஒரு பகுதியாக இருநதது.

உறுபபினரானதும் லாகூரில உள்ள மாடல டவுனில முதல் பத்து மாதங்களைக் கழிததார். 'பிரிட்லாரி' தனக்குரிய அச்சகத்தில் அச்சாகி அங்கிருந்துதான் வெளியாயிற்று. நானக்சிங் அசசகத்தின் உறுப்பினர் பொறுப்பாளராக அமர்ந்தார்.

1938 ஜூன் 7—ஆம் நாள் "அன்புபபடை" பிரிட் நகரில் உள்ள தனது நிலையான தலைமை அகததிற்கு மாற்றப்படடது. லட்சியவாதியான நானக்சிஙகிறகு விரைவில் அங்கொரு போலித்தனம் வந்துற்றது படை உறுப்பினர்ககுக் கடடபபட்ட வீடுகள், வசதியாக இருந்தன. ஒவ்வொன்றிலும் ஒரு ஹால், ஒரு படிப்பறை, படுக்கை அறை. நவீனக்கழிவறையோடு கூடிய குளியலறை, ஒரு வராண்டா முன்னால அகன்ற புல்வெளி ஆகியவை இருந்தன. இநத வீடுகளிலிருந்து சிறிது தள்ளி, ஊழியர் இருப்பிடங்கள் இருந்தன. ஒவ்வொன்றும, இரண்டு படுக்கைகளுக்கும போதாத களிமண்ணால் ஆகிய அறையும அதிற் பாதியளவுள்ள சமையலறையும் கொண்டது. இதுவும் இதுபோனற பிறவும், நானகசிங்கைப் பொறுததவரை 'பிரிடசேனா' பிரகடனத்திற்கு மாறாக இருநதன. இநநிலை தொடக்கத்தில் எரிச்சலூட்டியது எனினும் பின்னால் அந்தச் சூழ்நிலைக்கு இயைந்து நின்று அதில் இன்பங் காணலானார். அதன விளைவாக அவருடைய

எழுத்துப் பணி வளம் பெறலாயிற்று.

குருபக்ஷ் சிங்கின் லட்சியத்திட்டங்கள் நன்கு நடைபெறவில்லை. நானக்சிங்கினுடைய சலிப்பும் அதிருப்தியும் பலபட வளர்ந்தன. முடிவாக 1945—இல் பிரிட் நகரிலிருந்து வெளியேறினார். நானக் சிங் எழுதுகிறார்:— "இந்த மண்ணில் அந்தச் சிறு பகுதியின் மீது நான் கொண்ட காதல் இன்னும் மங்காமல் உள்ளது".

# 3

## தொடக்க முயற்சிகள்

குடியாட்சி முறையைப் பாதுகாத்தற்பொருட்டு முதல் உலகப்போர் அப்பட்டமாக நடந்தது. ஐரோப்பாவில் அநதந்த நாடடு மக்கள் தம் நாடுகளில் சுய ஆட்சியை நிறுவுதல தொடர்பான சுதந்திரப் போராட்டத்திற்கு ஒரு முடிவுங் கண்டனர். ஆயின், இந்தியாவிலோ பிரிட்டிஷ் ஆட்சி, சுய ஆடசி பற்றிய அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்த இந்திய மக்கட்கு, அநத உரிமையை நல்குவதில் சங்கடம் கொண்டிருந்ததனோடும்கூட, 1919—ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட ரௌலட் சட்டம் போனற அடக்குமுறைச் சட்டங்கள் மூலம், தம்மை நோககி வந்த எநத நேரிய இயக்கத்தையும் முன் கூட்டியே தடுத்து நிறுத்தவும் செய்தது. அடக்கு முறைக்கு எதிரான வன்முறை பல இடங்களில் தலை எடுத்தது. மத்திய பஞ்சாபில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் கோரமான திருப்பத்தை உண்டாக்கின. பஞ்சாபில் பல இடங்களில் ஊரடங்கு உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன; அவற்றின் உச்சகட்டமாக 1919—ஆம் ஆண்டு ஏப்ரல் 13—ஆம் தேதி அமிர்தசரஸில் ஜாலியன்வாலாபாக் படுகொலை எனப்படும் படுகொலை நடந்தது. ஊரடங்கு உத்தரவை அமிர்தசரஸில் அமுல்படுத்திய ஜெனரல் டயர் என்பவனுடைய ஆணையின்பேரில், ஜாலியன் வாலாபாக்கில் நடந்த பொதுக்கூட்டம் ஒன்றின் மீது பிரிட்டிஷ் துருப்புகள் யந்திரத் துப்பாக்கிகளால் தாக்குதல் நடத்தி ஆயிரம பேரைக் கொனறொழித்து எததனையோபேரைக் காயபபடுத்தியது.

நானகசிங் அப்பொழுது மிகவும இளையவராய் அனுபவமற்றவராய் இருந்திருத்தல் கூடும். ஆனால், இடையிற் சிதைந்துபோன தேசியப் போராட்டத்தின் பின் விளைவாக எழுந்து, அகாலி போராட்டம் என்று பரவலாக அறியப்பெற்ற 1920—22—இல் நடைபெறற குருத்வாரா சீரமைப்பு இயக்கம அவரைக் கவர்ந்திழுத்தது. முன்னர் குறிப்பிட்டது போல், குருகாபாக் போராட்டத்தில் கலநதுகொண்டு, சததியாகிரகியாகச் சிறை புகுநதார். அதன் வாயிலாக, அவர் தேசியவாதியாகவும்,

பிரேம்சந்தினிடம் ஈடுபாடுடையவராகவும் மகாத்மா காந்தியின் சீடராகவும் உருப்பெற்றார். குருமார்களைப் புகழ்ந்து போற்றும் பாட்டெழுதும் நிலையிலிருந்து, அந்நியர் ஆட்சியை எதிர்க்கும் தேசியப் பாடல்களை இயற்றுபவராகவும் சமூக சீர்திருத்த நாவல்களை இயற்றும் ஆசிரியராகவும் வளர்ந்தார். தொடக்க கால நாவல் முயற்சிகளில் பக்குவம் முதிர்ச்சியுமற்றவராக அவரை அறிகிறோம்.

மாட்ராய் மா[மாற்றாந்தாய்] என்னும் தம்முடைய முதல் நாவலைப் பற்றி அவர் எழுதுகிறார்: "கதை எளியது; நேரானது. மாற்றாந்தாய் மாற்றாள் குழந்தைகளைக் கொடுமைப்படுத்தும் நிலையே அதன் பின்னணி. குழந்தைப் பருவத்திலிருந்து ஒன்றாக வளர்ந்த இருவர், நாடகத்தில் வருவதுபோல் காதலர்களாக மாறித்திருமணத்தில் ஒன்றாகின்றனர். அவர்களுடைய நட்புத்தான் கதையின் வளர்ச்சி. கதை என்னவோ இவ்வளவுதான். புதுமை எதுவும் இல்லை. அசாதாரணமான கற்பனைக் காதலும் இல்லை. மொழியும் நடையும் மிக எளியவை."

இடைக்கால இந்தியாவின் காதற் கதைகளில், வயது சென்றவரை மணந்த இளவயதுடைய மாற்றாந்தாய் தன்னை ஒத்த வயதுடைய மூத்தாள் மகனைத் தன் விருப்பத்திற்கு இணங்க வைப்பது என்பது பொதுவாக இருந்தது. இந்தப் போக்கு இழிந்தது; துயர் தருவது. அசோகரின் மகன் குணாளனும் பூர்ண பக்தையும் ருபனும் — பசந்தும் பற்றிய பழங்கால இடைக்கால இந்தியக் கதைகளும் பத்ராவும் *மெடியாவும் பற்றிய பழைய* கிரேக்க நாட்டுக் கதையும் இந்தப் போக்கைப் புலப்படுத்துவன. ஆனால் நானக்சிங்கின் கதைப்போக்கு வேறுவிதமானது. இநதியாவில பெரும்பாலான வீடுகளில் மூத்தாள் மக்களை முறை கேடாக நடத்தும் சிற்றன்னை கொடுமையின் மீது அவர் ஆழ்ந்த கவனம் செலுததுகிறார். முதல் இருபது பக்கங்களில் தியாளி என்னும் மாற்றாநதாய் மோகன் என்னும் சிறுவனை முறைகேடாக நடத்துவது பற்றி விவரிக்கிறார். மதன் வீட்டை விட்டு வெளியேறுகிறான். மதனின் தந்தை பக்கத்து விட்டுக்காரரான பிரதாப்சிங்கிடம் அவனை ஒப்படைக்கிறார். பிரதாப்சிங்கும் தியாளியின் சினத்திற்கு இலக்காகிறார். எனவே, அலகாபாத்திலுள்ள பிள்ளைவளர்ப்பு இல்லத்திற்கு அவனை அழைத்துச் செல்ல வேண்டியவரானார். மதனுக்குப் புதியதொரு குழலை நல்குவதற்கென்று வேண்டுமென்றே இவ்வாறு திட்டமிடப்பட்டது. மதன் இல்லத்து அன்பும் அமைதியும உடைய

சூழ்நிலையில் வளர்க்கப்படுகிறான். உற்ற வயதில் வளர்ப்புத்தந்தை அவனைச் சட்டப் படிப்பு படிப்பதற்காக இங்கிலாந்துக்கு அனுப்புகிறார். வளர்ப்புப் பிள்ளை வளர்ப்புத் தந்தையிடமிருந்து எதிர்ப்பார்ப்பதைவிட இது சற்று அதிகமானதுதான். இதற்கிடையில் மதனுக்கும் பிரதாப்சிங்கின் மகள் சாந்திக்கும் இடையே ஏற்பட்ட பிள்ளைமை அன்புத் தொடர்பு காதல் திருமணமாக முதிர்கிறது. இத்திருமணத்திற்கு நானக்சிங் அநாவசியமான ரகசியத்தைத் தருகிறார்.

மதன் அம்பாலாவில் பப்ளிக் பிராசிகியூட்டராகப் பணியிலமர்கின்றான். அவனுடைய கோர்டிலேயே தியாளி குற்றவாளியாகக் கொண்டுவந்து நிறுத்தப்படுகிறாள். அவளுடைய சொந்த மகன் ஜிடாவின் கையாலேயே தனக்கு முடிவு வருவதைத் தாங்கிக் கொள்ள முடியாமல் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்துகொள்ள முயல்கிறாள். மதன் அவளை இன்னார் எனத் தெரிந்து கொள்கிறான். குற்றச்சாட்டுகளைக் கேட்பதை மறு நாளைக்கு ஒத்திவைத்து சிறையில் அவளைக் காணச் செல்கிறான். பப்ளிக் பிராசிகியூடர் தன் மாற்றாள் மகன் மதன் எனத் தெரிந்துகொண்டதும், அதிர்ச்சியினால் அவள் மாண்டு போகிறாள். அவள் வயிற்றிற் பிறந்த மகன ஜிடா, கொள்ளை, கொலை காரணமாக ஆயுள் கைதியாய் அந்தமானுக்கு அனுப்பப்படுகிறான். இவ்வாறு பிற எல்லாப் புது எழுத்தாளர்களையும் போல், நானக்சிங், கலைத்துறைக்குரிய முழு வரம்பினை நன்கு தீட்டிக்காட்டுகிறார். மாற்றாந்தாய் மதனுக்குச் செய்த கொடுமை உண்மையாக வேற்று வடிவில் வந்த நன்மை என்றே தோன்றுகின்றது.

பழங்காலத்திலும் இடைக்காலத்திலும் பெரும்பாலான காதற்கதைகளில முதல் மனைவி வாழும்போதே கணவன் இரண்டாவது மனைவியை மணந்திருப்பதாகத் தீட்டியிருக்க, இந்தக் கதையில் மதனின் தந்தை மோகிந்தர்சிங் முதல் மனைவி மறைந்தபிறகே மறுமணம் செய்து கொள்கிறார். முதல் மனைவி மூலம் குழந்தை இருந்தால் ஒருவன் மறுமணம் புரியலாகாது என்பதுவே, மறுமணம் பற்றிய கதை உணர்த்தும் நீதியாகும்.

மித்த மகுரா [இனிய விஷம்] வில் சூழ்நிலை சற்று வேறுபட்டதாக உள்ளது. ஜோகிந்தர்சிங் தமது மனைவி சகுந்தலாவின் மீது அன்பு செலுத்துகிறார். ஆனால், பன்னிரண்டாண்டுகள் குழந்தை

இல்லாமல் காலம் கழிகிறது. நாட்டுப்புறக் கதைகளில் வரும் மாந்தர் அல்லற்படுவதுபோல் இந்தக கால வரையறைக்குப் பின்னர் தாலிப் கௌர் எனபவளை சகுநதலாவின அனுமதியுடன் மறுமணம் புரிகிறார். ஆயின், சகுந்தலா, தாலிப் கௌர் மீது பொறாமை கொளளாமல் இருக்க முடியவில்லை. ஜோகிந்தர் சிங்கின் அன்பைத் தொடர்ந்து பெறுவதறகாக, பிச்சைக்காரன் ஒருவனிடமிருந்து வசிய முறை ஒன்றைக கற்கிறாள். தாலிப்கௌரின் புகார் மூலம் உயிர் போகும் அளவில் கணவனிடம் அடிவாங்கிப் பெற்றோர் வீட்டுக்கு அனுப்பப் பெறுகிறாள். ஆயின, தாலிப்கௌரும் உண்மை நமபிககைக்குரிய மனைவியாக நடந்து கொள்ளவில்லை. தன் நகைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு ஹெம்ராஜ் என்பவனோடு ஓடி விடுகிறாள். எனினும, கல்கத்தாவில் ஒரு ஹோட்டலில் அவளும் ஹெமராஜூம கைது செய்யப்படுகின்றனர். சகுந்தலாவுக்கு இழைத்த கொடுமைக்குப பரிகாரந்தேடுவது போல், சகுந்தலாவின் சகோதரனிடம் தன் நகைகளை ஒப்படைத்து, சிறிது காலத்தில் பைத்தியம் பிடித்து இறந்து போகிறாள் தாலிப்கௌர். சகுநதலா கணவனிடம் வந்து சேர்வது மட்டுமன்றி ஒரு மகனையும் பெறுகிறாள. எனினும், ஜோகிந்தர் சிங்குக்கு இது ஏற்ற பரிகாரமாகவில்லை. வேலையை இழந்து அல்லல்களுக்கு ஆளாகி அவனும் பைததியம ஆனான். பினனர் அவன் இழந்த வேலையையும் உடல் நலத்தையும் பெறுகிறான

இங்கும், கதைக்கரு, சமூக சீர்திருத்த எலலைகளின் வரம்புகடந்து நிற்கிறது. தீமைக்குத் தண்டனையும் நன்மைக்கு வெகுமதியும் என்னுமளவில் கதை அமைகிறது. ஜோகிந்தர் சிங்குககும் சகுந்தலாவுக்கும் ஏற்பட்டது போனற சூழ்நிலை இநதியாவில அசாதாரணமானது அன்று. ஆயின் கதையில் வரும் சிக்கலகள, அததகைய சூழ்நிலைககு ஏற்றனவாக அறுதியிடப் பெறவிலலை.

கால் சககர் [காலச் சககரம்] என்னுங் கதை மேலும் நடபபியலுககு உகந்ததாக இல்லை. ராம்நாத் எனனும் ஜவுளி வியாபாரி ராம்லாபியா எனனும் தையல்காரன் ஒருவன் மனைவி கௌசல்யா எனபவளின் கவர்ச்சிக்கு ஆட்படுகிறான். ஹரிததுவாருக்குப் புனித யாத்திரை செல்லுதற்பொருட்டு, இருவரையும் தன்னோடு வருமாறு வற்புறுத்துகிறான். பயணத்தினபோது, வழியில் ஒரு ரயில் நிலையத்தில் ராம் லாபியாவைத் தநதிரம் செய்து விலக்கிவிட்டு கௌசல்யாவோடு

தனிமையில் இன்பம் நுகர்கிறான். ஆயின் ராம்லாபியாவை அவ்வளவு எளிதில் விலக்க முடியவில்லை. அவன் ஹரித்வார் வரை அவர்களைப் பின் தொடர்ந்து சென்று, ராமநாத் மக்களின் சாடுதலுக்கு இலக்காகி, உயிருக்கு அஞ்சி ஓடி ஒளியும் நிலையில், அவனுடைய அயோக்கியத்தனத்தை அம்பலப்படுத்துகிறான். இடையில், ராம்லாபியா குடிப்பழக்கத்திற்கு ஆளாகி, திருட்டுக்குற்றத்திற்காக வாடகை வீட்டிலிருந்து விரட்டப்படுகிறான். சியால்கோட்டுக்கு வேலைதேடிச் செல்கிறான்; அதேசமயம், கௌசல்யா தன் குழந்தையோடு தாய்மாமன் ஒருவன் வீட்டுக்குப் போகிறாள். ஆயின் தாய் மாமனுடைய விரைந்த மறைவு, அவளை மீண்டும் வீடற்றவளாக்கி விடுகிறது. இங்குமங்காக அலைந்து ஒருநாள் இரவு, செல்வர் ஒருவரின் வீட்டு ஜன்னல் திறந்திருப்பதைக் கண்டு, தன் குழந்தையை அங்கே விட்டு விடுகிறாள். கதைப்போக்குக்கு ஏற்ப, வீட்டுக்குரியவரான பிரபுதயாள் குழந்தையில்லாதவராக உள்ளார். குழந்தையைக் கண்டு மகிழ்ந்து தத்தெடுத்துக் கொள்கிறார். ராம்லாபியா மனைவியைக் காண முடியாமற்போய், லீலாபூர் மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் ராம்நாத்தைக் கண்டு அவனைக் கொலைசெய்து விடுகிறான; அதன் விளைவாக நீண்டகாலச் சிறைதண்டனை பெறுகிறான். சிறைதண்டனை முடிந்து வீடுநோககி வரும வழியில், மழையும் புயலும் காரணமாகப் பிரபுதயாள் வீட்டில ஒதுங்குகிறான். இங்கு மனோகர் என்னும் பெயருடைய தன்மகனை எதிர்ப்படுகிறான; சநநியாசினிக் கோலததில வாழந்த தன மனைவியையும் காணகிறான.

கதை வரம்பு நெறி பிறழநததாக உள்ளது; ராம்நாத் தன் தீச்செயலுக்காக இருமுறை தண்டனை பெறுகிறான். அது முறையில்லை. இன்னொருபுறம், குடிகாரனும் கொலைகாரனுமாகிய ராம்லாபியா மகிழ்ச்சியும் நலமும் பெறுகிறான் என்பது ஏற்புடையதாக இல்லை.

பிரேம சங்கீதம் [காதல் இசை] என்னுங் கதை சிக்கலும் கற்பனையும் மிகுநதுள்ளது. குடிப்பழக்கமும் பிற குற்றங்களும் உடைய தயாள்சிங், தன் மனைவியைக கைக்குழந்தை மாயாவுடன் வீட்டை விட்டுத் துரத்துகிறான். அவள் விபசாரியாகிறாள். சாவதற்கு முன மகளைப் பாடகியாக்கி மறைகிறாள். தயாள்சிங்கின் மகன் ஜக்ஜித் ஒருநாள் பள்ளியிலிருந்து திரும்பும்போது, தெரு முனை

ஒன்றில் பெண்ணொருத்தி இனிமையாகப் பாடிக்கொண்டிருப்பதைப் பார்த்து அவளருகே செல்கிறான். மாயா என்னும் தன் சகோதரியே இப்போது லஜ்ஜி என்னும் பெயர் கொண்டிருக்கிறாள் என்பது அவனுக்குத் தெரியாது. மோகத்திற்கு இலக்காகி, ஒன்றன் பின் ஒன்றாக அவளைப் பற்றிப் படம் வரைந்து தள்ளுகிறான். ஒருகோடையில் சந்நியாசிக் கோலத்தில் அவன் முசோரிக்குப் போகிறான். ஜோகிந்தர் சிங் என்பவரின் மகள் பல்வந்த்கௌர் என்பவள் அவன் நன்கு பாடுவதை அறிந்து அவனுக்கு ஆட்படுகிறாள். ஜக்ஜீத்சிங்கின் நண்பன், ஜஸ்வந்த்சிங் அவனுடைய மோக உணர்வை அறிந்தவனாதலால் அவனுக்காகக் கல்கத்தாவிற்குத் தூது போகிறான். ஒருநாள் மாலை ஒரு வீட்டைத் தாண்டிச் செலலும் போது, கடுஞ்சுரத்தால் நடுங்கும் மனிதர் ஒருவரை எதிர்ப்படுகிறான். இந்த மனிதர் லஜ்ஜிக்கு மாமா உறவு உடையவர்; அவரோடு தான் அவள் வாழ்கிறாள். இந்த மாமா சில நாட்களில் மறைகிறார்; ஜஸ்வந்த் லஜ்ஜிக்காக அவருடைய பொறுப்பை ஏற்கிறான். அவனும் அவளிடத்தில் ஈடுபாடுடையவன் எனறாலும், நண்பனின் நம்பிக்கைக்கு ஆட்பட்டவன். அவன் தன் நண்பனைக் கல்கத்தாவிற்கு வரவழைக்கிறான். ஜக்ஜீத்சிங் லஜஜியை அமிர்தசரசுக்குத் திரும்ப அழைத்து வருகிறான். அவள் வேறுயாரும் இல்லை; தன் தங்கை மாயாதான் என்று தந்தையின் மூலம் அறிகிறான். இதற்குப் பிறகு, லஜ்ஜி ஜஸ்வந்துக்கு வாழ்க்கைப்படுகிறாள்.

இவ்வாறு, நானக்சிங் தம் வரம்பு நெறி பிறழ்ந்த கதைகளை இன்பியலாக முடிக்கிறார். இதற்காக அவர் கதைக்கருவையும் பாத்திரங்களையும் தட்டிக் கொட்டிச் சமன் செய்வதற்குத் தயங்கவில்லை.

# 4

## சீர்திருத்தக்கனல்

நானக்சிங்கின் முதல் நான்கு நாவல்கள் கற்பனையியல் நிரம்பிக்கிடந்தன; அதனால், சமுதாய நோக்கு முற்றிலும் மறைக்கப்பட்டிருந்தது. நானக்சிங்கின் சித்தாலாகு [வெண்குருதி 1932] என்பதும் கற்பனையில் ஊற்றம் உடையதாயினும் அதனோடுதான் அவருடைய சமுதாய நோக்கு நாவல் தொடங்குகிறது.

முன்ஷி பிரேம்சந்தைத் தம் கண்ணெதிரே தனக்கு முன் மாதிரியாகக் கொண்டிருந்தார் அவர். "பிரேம்சந்த் தீட்டிய அஞ்சி நடுங்கவைக்கும் சமுதாய ஓவியங்களையும் இதயத்தை ஊடுருவுமாறு கையாண்ட நெறியையும் நான் பின்பற்ற விழைந்தேன்" என்று அவர் எழுதுகிறார்.

தன் வரலாற்று நாவல் பண்பு அவ்வளவு தெளிவாக இல்லை எனினும் சித்தலாகு அவருடைய கொடிய அனுபவங்களின் வடிவமாகும். சமுதாயத்தைத் திருத்துவதற்காக வாழ்வதையே குறிக்கோளாகக்கொண்ட ஒருவனைக் கதைத்தலைவனாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டார். நானக்சிங் தம்முடைய நாவல்களில் பிரசாரஞ் செய்ததையே பச்சன்சிங் வாழ்க்கையில் கடைப்பிடிக்கிறான்.

தீங்கிழைத்தல், சமுதாயக் கொடுமை ஆகிய மத்தியதர வகுப்புப் பற்றிய இயல்புகளைப் புலப்படுத்தும் விவரங்கள் எல்லாவற்றையும் நானக்சிங் ஒரு வரம்புக்குள் விளக்க விரும்பியதால் நாவலின் கதைப்போக்கு மிகவும் சிக்கல் உடையதாக இருக்கிறது.

மிக்க இளமையிலேயே குருதேய் முதியவர் ஒருவருக்கு வாழ்க்கைப்படுகிறாள். விரைவில் முதியவர் காலமாகிறார். மூத்தாளின் வயதுவந்த பிள்ளைகள் கணவரின் சொத்திலிருந்து

குருதேய்க்கு எந்தவிதப் பங்கும் கொடுக்க மறுக்கிறார்கள். மாறாக, அவளுடைய வாழ்க்கையைப் பல வழிகளிலும் அல்லல்படுத்துகிறார்கள. கொடிய குளிர்கால இரவில் அவளை ட்டைவிட்டுத் துரத்துகிறார்கள். இந்திய மத்தியதரக் குடும்பத்தில் ஏழை விதவைக்கு இழைக்கப்படும் அவலநிலைக்கு இது ஒரு தலையான எடுத்துக்காட்டு. பாச உள்ளம் கொண்ட முஸ்லிம் மாது ஒருத்தி அவளுக்கு அன்றிரவு தங்க இடம் கொடுக்கிறாள். இந்து சனாதன முறைகளின் படி அது ஒரு நிலை பிறழ்ச்சி ஆதலால், குருதேய் கடும் விளைவுகளுக்கு ஈடுகொடுக்க வேண்டியதாகின்றது.

சீக்கிய இந்து சமூகத் தலைவர்களான பாபாதாராசிங்கும் பண்டிட் ராதாகிருஷ்ணனும் அவளைச் சமூகத்திலிருந்து விலக்கிவைக்கிறார்கள். குருதேயியின் திக்கற்ற நிலையைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் ராதாகிஷன் தூண்டுதலுக்காளாகிறுர். தாராசந்த் என்பவனோடு வாழ்வதற்காக, தமக்குத் தெரிந்த ஒருவருடன் அவளை சியால் கோட்டுக்கு அவர் அனுப்பிவைக்கிறார். தாராசந்த் அவளிடத்தில் முறைகேடாக நடந்து கொள்ளுகிறான். குழந்தையுடன் அவளை ஏற்றுக் கொண்டு பிறகு அவள் நோய்ப்படுக்கையில் கிடந்தபோது, அவளைக் கைவிடுகிறான். [இந்த தாராசநத் தான் பின்னால் ஸ்டேஷன் மாஸ்டராகிக் கழிவிரக்கமுற்று இந்தக் கதையை எழுதுகிறான்] இடையில் முஸ்லிம் மாது ஒருத்தி அவள் நோயுற்ற வேளையிலும் அடுத்து ஓய்வுற்றுக் கிடந்த போதும் அவளைக் கவனித்துக் கொள்ளுகிறாள். சில நாட்களுக்குப் பிறகு அவளுடையது என்று சொல்லப்பட்ட வீட்டுக்குச் செல்கிறாள். அங்கே அவளுக்கென்று சொந்தம் கொண்டாட யாரும் இல்லை. தீயவன் ஒருவன், ஆதரவு நல்குவதுபோல் நடித்து, விபசார விடுதியில் விலைகூறுவதற்காக டில்லிக்கு அழைத்துச் செல்கிறான். [அந்த நாளைய வங்காள இந்தி நாவல் மரபில் விதவை விபசாரஞ் செய்யும் நிலைக்கு ஆளாக வேண்டும். நானக்சிங்கினுடைய பெரும்பாலான நாவல்களில், இளம் இந்து விதவையின் தலையெழுத்து விபசாரந்தான்] கைக்குழந்தை அவள் விலைபோவதற்கு இடையூறாகும் என்று கருதி அதை விட்டொழிக்க விரும்புகிறான். குழந்தையைப் புதர் ஒன்றின் அடியில் கிடத்தி விட்டால், அதன் தலைவிதிக்கேற்ப யாராவது அதை எடுத்துப் போகக்கூடும் என்று அவளுக்கு எடுத்துச் சொல்கிறான். அவ்வாறே நடக்கிறது. ஜாலவித்தைக்காரன் ஒருவன் [ரோது என்று பெயர்] அங்கே வந்து குழந்தையை எடுத்துக்கொண்டு போய்த் தன் குழந்தைபோல் வளர்த்து சுந்தரி என்று பெயரும் வைக்கிறான்.

ஜாலவித்தைக்காரனின் தத்துக்குழந்தையாகிவிட்ட சுந்தரி நாட்டியக்காரி ஆகிறாள். ஊர் சுற்றும் பயணத்தில், பிள்ளைகள் குருதேயைத் துரத்திய அதே கிராமத்திற்கு ரோது வருகிறான். மிகவும் சாதகமான 'சந்தர்ப்ப நிகழ்ச்சி இது. அவர்கள் பச்சன்சிங் என்பவரோடு தங்குகிறார்கள். அவர் சுந்தரியை அன்போடு வரவேற்கிறார். அங்கே பச்சன்சிங்கின் நண்பரான கியானிதிதார்சிங்கினுடன் கல்வி பயிலத் தொடங்குகிறாள் சுந்தரி.

பச்சன்சிங் கல்வியை ஆழ்ந்த பிடிப்புடன் மதித்துப் போற்றுபவர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்க வருஷங்களில் குருத்வாரா சீர்திருத்த இயக்கத்தின் எதிரொலியால், அர்ச்சகர்களின் முறைகேடான வாழ்வால் பாழ்பட்டுக்கிடந்த கோயில்களின் நிலை தூய்மை பெற்றது. கோயில்களின் புனிதத்தன்மையைப் பேணிக்காப்பதில் கருத்துச் செலுத்துபவர். பச்சன் சிங்கின் விழுமிய நெறிகளுக்காக அவரை எல்லோரும் புகழ்கிறார்கள். ஆனால், நல்லமனமில்லாத விவசாயி பாலாசிங்கும் குருத்வாராவின் அர்ச்சகர் தசுந்தாசிங்கும் அவருக்கு எதிராக இரகசியமாகச் செயற்படுகிறார்கள். பச்சன்சிங் சுந்தரியை மணந்துகொண்டபோது, அவர்கள் இருவரும் சந்தர்ப்பம்பார்த்து, கிராம சமூகத்திலிருந்து அவரைத் தள்ளிவைக்கிறார்கள்.

இதற்கிடையில், குருதேயும் நாட்டியம் கற்றுக் கொள்கிறாள். விலைமாதுக்கு மதிப்புத் தேடித்தரும் சாதனம் அது. அதனால் அன்வார் என்னும் பெயரும் பெற்று, வட இந்திய விலைமாதர் பலரையும் போல் இஸ்லாத்தில் தஞ்சம் புகுகிறாள். தன் சொந்த மூத்தாள் மகள் திருமணத்திலேயே பலரையும் மகிழ்விக்கும் கடமையில் ஈடுபடுகிறாள். தன்னைத் தள்ளி வைத்த ராதாகிஷனுக்கும் கரம்சந்த் என்னும் பெயருடைய இன்னொருவர்க்கும் அவள் உடலின்பம் நல்க வேண்டியவளாகிறாள். அன்வார் என்னும் குருதேய் அவ்விருவரையும் குத்திக் கொன்று தன்னையும் மாய்த்துக் கொள்ளுகிறாள். பாலாசிங்கும் அவனைச் சார்ந்தோரும் இவ்விரு கொலைகட்கும் பச்சன்சிங் காரணமென்று குற்றம் சாட்டி வழக்குத் தொடுத்துத் தூக்கு தண்டனையும் பெற்றுத்தந்து சதியில் வெற்றி பெறுகின்றனர். சுந்தரி, பாலாசிங்கையும் அவனுடைய நண்பர்களையும் தீக்கிரையாக்கித் தன் கணவனின் மறைவுக்காகப் பழிவாங்குகிறாள். பிறகு தன்னையும் மாய்த்துக் கொள்ளுகிறாள்.

நானக்சிங் தமது நாவலின் முன்னுரையில் பற்பல சிக்கல்களுக்கிடையே அப்போதைய சமூகச் சூழலை ஆராய்ந்து பின்வரும் பொல்லாங்குகளைச் சுட்டிக்காட்டுகிறார். அதன் தலைவர்கள், நன்மைகளை விலக்கித் தீமையைப் பேணுவதையே தமது கடமை எனக் கருதுகிறார்கள். கோயில்களிலும் புனித நிலையங்களிலும் சமயம் என்னும் போர்வையில் போதைப் பொருளை வழிபடுவதும் கோஷ்டிப் பூசலும் அன்றி வேறு எதுவும் இல்லை. பஞ்ச நதிபாயும் இந்த நாட்டில் சமுதாயத்தைத் திருத்தும் ஆர்வமும் எழுதுகோலில் புரட்சித் திறமும் கொண்ட நல்லவர்கள் சிறிதளவு வருவாய் பெறுதற்குங் கூடக் கடும்பாடு பட வேண்டியுள்ளது. சமுதாயத்திற்காக எல்லா இன்பங்களையும் நலன்களையும் விட்டுவிட்டு இந்த நாட்டு நம்பிக்கைக்குரிய இளைஞர்கள் வெறுப்பும் சலிப்புமே அடைகிறார்கள்; கடைசியில் தூக்கில் தொங்குவதற்காக ஒரு கயிறுதான் அவர்களுக்குக் கிடைக்கிறது.

நமது சமுதாயத்தின் குருதியோட்டத்தில் சிவப்புச் சத்தே மறைந்துபோயிற்று என்று நாவலின் தலைப்பின் வாயிலாக நானக்சிங் கருதுகிறார் போலும். சுந்தரி பச்சன் சிங்குக்கு உரிய கடிதத்தில் எழுதுகிறாள்: "இந்த மண்ணில் உள்ள இப்படிப்பட்ட மாநதரின் நரம்புகளிலிருந்து குருதியைச் சிந்தும் வரையில் வருங்காலத் தலைமுறைகள் பொல்லாங்கின் விளைவுகளிலிருந்து தப்ப முடியாது. பிரச்சனைகளுககுத் தீர்வாக மூர்க்கப் புரட்சியை நானக்சிங் பேணுகிறார் என்பது அல்ல. நானக்சிங்கைப் பொறுத்தவரை, அத்தகு நெறிமுறைகள் மூலம் சமுதாயத்தில் சீர்திருத்தப் பயன் காண்பதென்பது வெறிபிடித்த நாய் கடித்த மனிதனைக் குளிப்பாட்டிச் சரி செய்வது போலாகும்.

நானக்சிங் எழுதுகிறார், "என்னுடைய நினைவுக்கெட்டியவரையில் 1910–1930 ஆண்டுகளில தீண்டாமை, மகளிரைத் திருமணச் சநதையில் விற்றல், குடி, ஆடல் பாடலபுரியும் பரத்தையரை விற்றல், இவற்றிலும் மட்டமாகப் பலதார மணம், முதியோர் மணம், விபசாரம் அவைபோலும் தொடர்ந்து நடமாடிய சமுதாயத் தீமைகள் ஆகியவறறைத் தீவிரமாகச் சாடும் இயக்கங்கள் பஞ்சாபில் நிகழ்ந்த காலகட்டம் அது. இத்தீமைகளை ஒழிப்பதில ஆரிய சமாஜமும் சிஙசபாவும் மிகத் தீவிரமாகப் பணிபுரிநதன."

இநதத் தீமைகளின் மையப பிரசசனையாக இருப்பது "இந்தியப்

பெண்மையின் வீழ்ச்சிநிலையே" என்கிறார் நானக்சிங். ஆடவனுக்குத் தாயாகும் பெண் அவனுடைய காலடியிலேயே நசுங்கி, அவனால் புறக்கணிக்கப்படும் இந்தநோய் மருந்து காண முடியாத ஒன்று. பெண்ணின் தாழ்நிலை, அவளை அடக்கி வைத்தல் சுரண்டல் ஆகியவை என்று எல்லா நாவல்களிலும் ஏதேனும் ஒருவடிவில் தோற்றம் பெற்றே நிற்கும் என்கிறார். மறந்துவிட முடியாத துன்பியல் நாவலான சிததலாகுவுக்குப் பின்னர், ஆசிரியரின் உணர்ச்சிகள் ஒருவகை ஓய்வு வேண்டினபோல், ஃபாலாடிபுல் [இரும்பு மலர் 1934] என்னும் நாவலில் குறிப்பிடத்தக்க வகையில் அழுத்தம் குறைந்தனவாக உள்ளன. கதைத்தலைவி சரளா என்னும் பாத்திரத்தின் இயல்பைப் புலப்படுத்துவதுபோல இந்த நாவலின் தலைப்பு உள்ளது. அவள் மலரின் மென்மையும் இரும்பின் வன்மையும் வாய்ந்தவள்.

பிரேம்சிங் பாடாலாவின் வசதி மிக்க வணிகர். முதல் மனைவியின் மறைவுக்குப் பிறகு சரளா என்னும் சிறுமியோடு தன்னந்தனியரானார். இரண்டாவது மனைவி அவளைக் கொடுமையாக நடத்துகிறாள். பக்கத்து வீட்டு மோகன் சரளாவின் வயதுடையவன். அவனுடைய சகோதரி சாந்தியும் சரளாவும் தோழிகள். சரளா பருவமுற்றபோது, அவள் மோகன் மீது கொண்ட பாசம் காதலாக முதிர்கிறது. ஆனால், அவள் திரிலோகசிங் என்னும் ஐம்பது வயதுடைய ஒருவருக்கு மணஞ் செய்யப்படுகிறாள். அவன் தன் முதல் மனைவி கர்தர் கௌர் என்பவளை விஷம் வைத்துக் கொன்றவன். குல்சார் என்ற விபசாரியிடம் பேரம்பேசி, அவளுடைய பிடியில் அகப்பட்டுக் கொண்டவன். உள்ளபடியே, சரளா, இந்தத் திருமண ஏற்பாட்டில் மகிழ்ச்சியாக இல்லை. இருந்தபோதிலும் மோகனுடைய உண்மை அன்பின் விழைவுகளையும் அறைகூவல்களையும் சமாளிக்கிறாள்.

மோகனுககும் பிரச்சனைகள்; அவன் லாகூரில் ஒரு பத்திரிகையின் ஆசிரியர். ஒருபுறம் இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும், பிறிதொருபுறம் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே பிளவு உண்டாக்குவதுதான் அதன் கொள்கை. பத்திரிகையின் சொந்தக்காரரான உத்தம் சிங்கும் இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளிடம் தகிடுதத்தம் செய்கிறார். மோகன் பதவியை விட்டுவிட்டு சினிமாவிற்குக் கதைகள் எழுதி ஓரளவு வருவாய் பெறுகிறான். சரளா பிரியத்தின்பேரில், யாருக்கும்

தெரியாமல் கொடுத்த ஐந்நூறு ரூபாயைக் கொண்டு, உத்தம் சிங்கிடமிருந்து விலகி ஒரு சிறு வீட்டில் வாழ்வதற்காக ஸ்ரீநகர் வருகிறான்.

திருலோக் சிங்கின் குமாஸ்தா இளம்பெண் சரளாவின்மீது ஒரு கண் வைக்கிறான். அவளுடைய கணவனின் உள்ளத்தில் அவளைப் பற்றிய சந்தேக விதைகளைத் தூவுகிறான். மோகன் காஷ்மீர் புறப்படும்போது, சரளாவிடம் விடைபெறுவதற்காக இரவில் வருகிறான். திரிலோக்சிங் அவனைக் காண்கிறான். குடிபோதையில், சரளா மூர்ச்சையாகும்படி அடிக்கிறான். அவள் இறந்துவிட்டாள் என்று அஞ்சி விஷங்குடித்து உயிர் விடுகிறான்.

திரிலோகசிங்கை சரளாவே கொன்றிருக்கக் கூடும் என்று ஐயம் எழுகிறது. நீதிபதி அவளுக்கு தண்டனை விதிக்கும் நேரத்தில், மனசாட்சியின் போராட்டத்திற்கு ஆளாகிய ஜகத்சிங், எல்லாக் குற்றத்தையும் தன்மேல் இட்டுக்கொள்ள முன் வருகிறான். முதல் மனைவி கர்தர் கௌருக்கு விஷமூட்டிக் கொல்வதற்காகத் திரிலோக் சிங்குக்குத் தானே விஷம் கொண்டு வந்ததாகவும் அவன் ஒப்புக் கொள்ளுகிறான். ஜகத்சிங் விஷங்குடித்து அந்த இடத்திலேயே மாய்கிறான். சரளா விடுதலையாகிக் காஷ்மீரில் மோகனைச் சந்தித்து அவனோடு வாழ்கிறாள்.

இந்த நாவலுக்கும் சித்தலாகுவுக்கும் வேறுபாடு உண்டு. ஒடுக்கப்பட்டவள் விபசாரி ஆகவில்லை; அல்லது இறுதியில் தற்கொலை புரிந்துகொள்ளவில்லை. இந்த நாவலில்கூட ஒரு விபசாரி வருகிறாள்; ஆனால் அவள் ஒரு துணைப்பாத்திரந்தான். இந்து விதவை அல்ல அவள். கஞ்சர் மரபு அல்லது விபசார சமூகத்தைச் சார்ந்தவளாக அவள் இருக்கக் கூடும். கழிவிரக்கமும் தறகொலையும் இந்த நாவலில் மிகுதிதான்; இந்தக் கதையில் இரண்டும் விடுபடவில்லை.

டாக்டர் மோகன்சிங் பத்திரிகையாளர் உத்தம்சிங் ஆகிய இருவரும் இதில் வரும் போலிச் சமயவாதிகள், எனினும், சித்தலாகுவில் வரும் கிரந்தி என்பவனைப்போல், பூசைசெய்து பிழைப்பவர்கள் அல்லர்.

சித்தலாகுவில் வரும் தாராசிங்கைப்போலவே இந்த நாவலில்

வரும் கொடியோர்களில் ஒருவனான ஜகத்சிங்கும் கழிவிரக்கம் கொள்கிறான். தாராசிங் வாழ்க்கையில் மகிழ்ச்சி இல்லை என்றாலும் அவன் உயிர் வாழ்ந்து அரசு ஊழியம் புரிகிறான். மாறாக, ஜகத்சிங் விஷங் குடித்து மாய்கிறான்.

இரும்பு மலர், காகித ஓடம் எனனும் இரண்டு நாவல்களும் 1934—இல் வெளியிடப்பட்டன. இரும்பு மலரில் வரும் கதைத் தலைவனும் தலைவியுமான மோகனும், சரளாவும் காகித ஓடத்தில் துணைநிலை பாத்திரமாக வருகின்றனர். இருந்தாலும் அவர்கள் அந்தக் கதையில் வேண்டப்படவில்லை. மோகனுடைய சகோதரி சாந்தி இரும்பு மலரில் துணைப்பாத்திரமாக வருகிறாள். காகித ஓடத்தில் வரும் கதைத்தலைவன் பிரேமுக்கு அவள் மணம் ஆகிறாள். கதையில் அதிக வேறுபாடு செய்யாத வகையில், பிரேமின் மனைவி மோகனுக்கு உறவல்லாத வேறு எந்த ஒரு பெண்ணாகவும் இருந்திருக்கலாம்.

காகித ஓடத்தின் கதைத் தலைவன் [அல்லது கொடியவன்] பிரேம், அமிர்தசரசில் ராலாராம் என்னும் ஒரு பெரிய பணக்கார வணிகரின் மகன். கோபால்சிங் என்பவனின் தீய நெறிக்கு இலக்காகி ஜமுனா என்னும் விபசாரியின் பிடியில் சிக்கிக்கொள்கிறான். கதையின் தொடக்கமே, அவனுடைய சொத்தில் பாதியை விற்று ஜமுனாவுக்கும் கோபால்சிங்குக்கும் செலவு செய்துவிட்ட நிலை. பிரேமை மணந்த மோகனின் சகோதரி, கணவன வீட்டில் மகிழ்ச்சிகொள்ள முடியவில்லை.

சாந்தியின பக்கத்து வீட்டுக்காரனின் பெண் சுசீலா, காந்தியவாதியான சுந்தரதாசை மணந்தவள். அவரை அவள் விரும்பாமல் பிரேமோடு தொடர்பு கொள்ளுகிறாள். ஆனால், அவள் மோகத்துக்கு இடங்கொடுக்காதவள். உள்ளபடி, அவள்தான் சாந்தியின் மீது இரக்கம் கொண்டு ஜமுனாவைப் பற்றி எச்சரிக்கை செய்கிறாள். இது பற்றி பிரேமோடு சண்டையும் போடுகிறாள்.

பிரேம் தன் சொத்துக்கள் உடைமைகள் எல்லாவற்றையும் தொலைத்த பிறகு, அவனுடைய மனைவி மிகவும் வருந்திப் புலம்புகிறாள். ஜமுனாவும் கோபால் சிங்கும் அவள் மீது பரிதாபங்கொண்டு, பிரேமை ஏமாற்றிக் கவர்ந்த நகைகளையெலலாம் திருப்பித் தருகின்றனர். பிரேம் அவர்கள்மேல் கோபங்கொண்டு

ஜமுனாவைத் துப்பாக்கியால் சுட முயல்கிறான். ஆனால், குண்டு ஜமுனாவை விட்டுத் தவறிப்போய் சாந்தியைத் தீர்த்துவிடுகிறது.

பிரேம் சட்டத்திற்குத் தப்பித்தலைமறைவாகிறான். கோபால் சிங்கும் ஜமுனாவும் தங்களுடைய பாவங்களுக்காக வருந்தி மனம்மாறி சாதுக்களாகி, திக்கற்ற பெண்களுக்காகப் பாதுகாப்பு இல்லம் அமைக்கின்றனர். பாதுகாப்பு இல்லத்தின் வாசலில், பிரேம் ஒரு பக்கிரி கோலத்தில் பிச்சை வேண்டி நிற்கிறான். பசிக்கொடுமையாலும் குளிரினாலும் அங்கேயே இறந்துவிடுகிறான். அவன் இன்னார் என்று தெரிந்ததும் ஜமுனாவும் கோபால்சிங்கும் துயரத்திற்கு ஆளாகினார்கள்.

பிரேமின் ஆடம்பரமும் பாவமும் உடைய வாழ்க்கை விரைவிலோ அல்லது அடுத்தாற்போலவோ, அமிழ்ந்துவிட வேண்டிய காகித ஓடமாக நானக்சிங் சித்தரித்துள்ளார். ஆனால், சமுதாயம் பற்றிய நோக்கு இங்கு வலுவற்றதாக உள்ளது. கதை பெரிதும் ஒழுக்கநெறி புகட்டுவதாக உள்ளது. கோபால்சிங் ஜமுனாவைப் பற்றிக் கூறுவதை நம்புவதாக இருந்தால் அடக்கி ஒடுக்கப்பட்டவள் மீண்டும் அடக்கி ஒடுக்குபவளாக மாறி இருந்து வரும் பழைய பல்லவிதான். கோபால் சிங் ஏன் கொடியவனாக ஆகிறான்; அதற்குச் சமுதாய நியதி எப்படிப் பொறுப்பாகும் என்பது பறறி நானக்சிங் விவரங் கொடுக்கவிலலை.

அடுத்த சில ஆண்டுகளில் வெளிவந்த பியார் கி துனியா [காதல் உலகம்] கரீப் கி துனியா [ஏழைகள் உலகம்] துத்தி வீணா, அத்கிரியா பூல, கங்கா ஜலிவிச் ஷரப் முதலிய ஆறு நாவல்கள் முனனைய நாவல்களைப் போல ஒரே பின்னணி உடையன என்று எழுதுகிறார் நானக்சிங். ஆயின் காங்கிரஸ் கட்சி சோஷலிஸக்கட்சி, எதேச்சாதிகாரக் கட்சி ஆகியவை நடத்திய இயக்கங்களின் செல்வாக்கை அவை தெளிவாகப் புலப்படுத்துகின்றன. எதேச்சாதிகாரக் கட்சி என்று அவர் கருதுவது அநேகமாகக் கம்யூனிஸ்ட் கட்சியாக இருக்கலாம்.

ப்யார் கி துனியாவில் மையக்கதை சுந்தர்தாஸ் புஷ்பா ஆகிய இருவர்தம் காதல் பற்றியது. சோகன்சிங் என்னும் கொடியவனும் புஷ்பாவைக் காதலிக்கிறான். அவளுடைய அன்பைப் பெறுவதற்காக அவளுடைய சகோதரன் ப்ரிதம் சிங்குக்கு சப்—இன்ஸ்பெக்டர்

வேலை வாங்கித் தருகிறான்.

இந்து முஸ்லீம் பூசல் கட்டவிழ்ந்தபோது, பிரிதம்சிங்கின் நண்பன் சாதிக், சுந்தர் தாஸைக் குத்தி விடுகிறான். சுந்தர்தாஸ் சாதிக்கை வேண்டுமென்றே அடையாளம் கண்டு கொள்ளவில்லை. அதன் விளைவால் சாதிக் விடுதலை பெறுகிறான். இதனால், சாதிக் ஆழ்ந்த வருத்தமுற்று ப்ரிதம் சிங்குக்கு மன்னிப்புக்கோரிக் கடிதம் எழுதுகிறான். ஆஸ்பத்திரியிலிருந்து சுந்தர்தாஸை ப்ரிதம் சிங் வீட்டிற்குக் கொண்டு வருகிறார்கள். அங்கு அவனும் புஷ்பாவும் ஒருவர் மீது ஒருவர் கொள்ளும் அன்பின் மீது சபதம் செய்கிறார்கள். புஷ்பா, சோகன் சிங்கின் காதலைப் புறக்கணிக்கிறாள்.

பிலாரில் பயிற்சி முடிந்ததும், ப்ரிதம்சிங் அமிர்தசரஸில் பதவி ஏற்கிறான். அங்கு, நகர்ப் பெரும்புள்ளிகள் சிலரையும் காவல் துறை அலுவலர் சிலரையும் ஊழல் காரணமாகக் கைது செய்கிறான். இதனால் அவனுக்கு நல்ல பெயர் உண்டாகிறது. ஒரு கொடிய குற்றத்தை விசாரிப்பதற்காக அவன் டெல்லிக்கு அனுப்பப்படுகிறான்.

இடையில் சுந்தர்தாஸும் டெல்லி வருகிறான். ஒருநாள், சாது ஓம்கார்நாத், சேத்பிராப்தயால் என்னும் இரண்டு கொடியவர்களின் சதித்திட்டத்திலிருந்து தப்புவதற்காக யமுனையில் குதித்த மனோரமா என்னும் இளம் பெணணைக் காப்பாற்றுகிறான். போலீஸில் இந்த விவகாரத்தைப் புகார் செய்வதற்காகச் சென்றபோது ப்ரிதம்சிங்கைச் சந்திக்கிறான். அவனும் இவனைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சி அடைகிறான்.

விசாரணைகளின் போது, மனநிலை இழந்த பெண் ஒருத்தியைச் சந்திக்கிறான். அவள் சோகன்சிங்கின் மாற்றாந்தாய் கங்காதேய், கணவன் கொலையுண்ட பிறகு சாது ஓம்கார்நாத்துடன் ஓடிப்போனவள் அவள். எனினும், இப்போது ஓம்காருடன் சலிப்போடுதான் வாழ்கிறாள். சேத்பிராப்தயால் அவனுடைய குமாஸ்தா முல்க்ராஜ், பிராப்தியாலின் பேச்சைக் கேட்டு ரூப்லால் என்பவருக்குக் கொடிய நஞ்சு ஊட்டிய டாக்டர் ஒருவர் ஆகியவர்கள் கைதாகிறார்கள். ஓம்கார்நாத்தும் ப்ரிதம்சிங்கின் சொந்தத் தகப்பனாரும்கூட இந்த வழக்கில் சம்பந்தப்பட்டபடியால், ப்ரிதம்சிங் கொடுதத வாரண்ட் பேரில் கைதாகிறார்கள். பிராப்தியால், மரணதண்டனை தவிர்க்க முடியாதது என்று தெரிந்து, தன் அறையிலேயே தூக்கு போட்டுக் கொள்கிறான். தன் சொத்து முழுவதும் அறச் செயல்களுக்குப் பயன்பட வேண்டும் என்று உயில்

எழுதி ப்ரிதம்சிங்கை அதற்கு டிரஸ்டியாக்கிவிட்டுப் போகிறான். ஓம்கார்நாத்தும் நசீர் அகமதும் தூக்கிலிடப்படுகிறார்கள். ப்ரிதம்சிங்கின் தகப்பனார் ஆயிரம் ரூபாய் அபராதத்துடன் விடுதலையாகிறார்.

இந்த நிலையில் வாழ்நாள் முழுதும் தூய்மை காப்பது என்று சபதம் செய்து புஷ்பா நாட்டுப் பணியில் ஈடுபட்டு உழைக்கிறாள். பாதர புத்ரி என்னும் பெயரில் பயங்கரவாதக் குழு ஒன்றில் சேர்கிறாள. அதன் தலைவன் பாபாஜி என்பவன்; அவன் லாகூர் சதி வழக்கில அப்ரூவராக மாறி ஒருவனைக் கொன்றுவிடுகிறான்.

புஷபாவையும் உள்ளிட்ட இந்தக் குழுவைக் கைது செய்வதற்கு ப்ரிதம்சிங் லாகூருக்கு வருகிறான். அவள்தான் சொந்த சகோதரி என்பது அவனுக்குத தெரியாது. புஷ்பா இதைத்தன் குழுவிற்குத் தெரிவித்து ப்ரிதம்சிங்கைக் கொல்வதற்கு அஃப்டாப் என்பவனை நியமிக்கிறுர்கள். இதை பரிதம் சிங்கிற்குத் தெரிவித்த சோகன்சிங் ஒரு ஓட்டலில் கொல்லப்படுகிறான்.

இருப்பினும், சுந்தர்தாசின செல்வாககினால், வன்முறையைக் கைவிடுவதென்று புஷ்பா தீர்மானிக்கிறாள். இது பற்றி பாபாஜியிடம் உரையாடுகிறாள். இதனால் குழுவினர் அவளைக் கண்டிக்கினறனர். அவள் சகோதரன் ப்ரிதம் சிங்கையும காதலன் சுந்தர்தாசையும் கொன்றால்தான் மனனிக்க முடியும் என்கின்றனர். ஆனால், மாறாக அவள் பாபாஜியைக கொன்றுவிடுகிறாள்.

இறுதியில் புஷ்பா சுந்தரதாசுக்கு மணமாகிறாள். ப்ரிதம் சிங் மனோரமாவை மணக்கிறான். காதல் உலகம் என்னும் இந்த நாவலில், தான் சார்ந்திருந்த பயங்கரவாதக் குழுவின் தலைவனைக் கொன்ற பிறகு, கதைத்தலைவி அகிம்சையில் நம்பிகைகயுடையவளாகிறாள்.

இந்தப் போககில நானக்சிங், நான்கு வகை அன்பை வரம்பு செய்துகாட்டுகிறார் ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள அன்பு திருமண வாழ்வுக்கு அடித்தளக் காரணமாகிறது. சமுதாயம் அல்லது இனத்தின் மீது கொள்ளும் அன்பு ஒன்று; தாய்நாட்டின் மீது கொள்ளும் பற்று ஒன்று. நண்பர் இருவர்களிடையே உள்ள நட்பினால் விளையும் அன்பு ஒன்று. நானக்சிங் முதலாவதையும்

நான்காவதையும் மகிழ்ந்து வரவேற்கிறார். குழு அல்லது இனத்தின் மீது கொண்ட பற்றையும், வன்முறை ஆயின் நாட்டுப்பற்றையும் தயக்கமின்றிக் கண்டிக்கிறார்.

இந்திய தேசிய காங்கிரசின் கனவுலக சோஷலிசத்தின் செல்வாக்கினால், கரிப் கி துனியாவை எழுதியதாக அவரே கூறுகிறார். முதலாளி தொழிலாளிப் போராட்டத்தை, விட்டுக் கொடுக்கும் லட்சிய நெறியில் தீர்த்து வைப்பது பற்றி அதில் விளக்கியுள்ளார். லாகூரில் உள்ள லாலா அமர்நாத்தின் தொழிற்சாலையில் பணிபுரியும் நாற்பது தொழிலாளர், பெரிய சிறை போன்ற கட்டிடத்தில் கூரையில் ஒழுகும் நாற்பது அறைகளில் வசிக்கின்றனர். இந்து, முஸ்லீம் ஆகிய இருதரப்பைச் சார்ந்த தொழிலாளர்களுக்கு மூன்று மாதக் கூலி கொடுக்கப்படவில்லை. சங்கர், தரம்தீன் என்னும் இருவர் தலைமையில், கூலி வேண்டிப் போராட்டம் நடத்துகிறார்கள். லாலா அமர்நாத் சங்கரைச் சிறைப்படுத்துகிறார். சங்கரின் மனைவி காலமாகிவிடுகிறாள். அவன் மகள் மாலதி தன்னந் தனியாளாகி தந்தையின் அறையில் வசிக்க நேரிடுகிறது. அங்கு, மிக விரைவில் கொடிய ஜுரத்திற்கு ஆளாகிறாள். கரம்தீன், அவனுடைய மனைவி சலிமா ஆகிய இருவரும் அவளைத் தங்கள் அறைக்கு அழைத்துச் செல்கின்றனர்.

லாலா அமர்நாத்தின் மகன் பலதேவ் தொழிலாளர் மீது இரக்கம் காட்டுகிறான். தொழிலாளர்களை அப்புறப்படுத்திப் பிடுங்கிக் கொண்ட அறைகளை அவர்களுக்குத் திரும்பக் கொடுத்து, மாலதியை டாக்டரிடம் அழைத்துச் செல்கிறான். அவள் நலமுற்றதும், இருவரும் சிறையிலிருந்த சங்கரைக் காணச் செல்கின்றனர்.

உள்ளபடி, பலதேவ் அப்பாவோடு அதே வீட்டில் தொடர்ந்து வாழ முடியவில்லை. அப்பாவிடமிருந்து விலகித் தனியே வாழத் தொடங்குகிறான்; தொழிலாளர் யூனியன் ஒன்றையும் அமைக்கிறான். வயிறு பிழைப்பதற்காக சேத் பான்சிலாலின் மகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறான்.

பலதேவின் அன்னை மகனைக் காணத் துடிக்கிறாள்; மாலதியின் அறையில் பலதேவ் அன்னையைச் சந்திக்கிறான். மாலதியைத் தன் வருங்கால மருமகளாக ஏற்றுக்கொண்டு அதற்கு அடையாளமாகத் தன் நெக்லசை அவளுக்குக் கொடுக்கிறாள்.

இதற்கிடையில், அமர்நாத்தைக் கலந்து கொண்டு, கரீம்தின் மாலதியை முஸ்லிம் ஆக்கிவிட்டான் என்று டாக்டர் சர்மா பத்திரிகையில் செய்தி வெளியிடுகிறார். பஞ்சாப் பிரிவினைக்கு உட்படுவதற்கு முன் அடிக்கடி நிகழ்ந்ததுபோல், இந்தச் செய்தியால் ஒரு இனக்கலவரம் நடக்கிறது. கரம்தின்னும் பலதேவும், சர்மாவுங்கூட, இனக்கலவரம் காரணமாகக் கைது செய்யப்படுகின்றனர்.

தன்னால்தான் இனக்கலவரம் மூண்டதென்று தெரிந்ததும் மாலதி ஓடும்ரயிலில் தலையைக் கொடுக்க முற்படுகிறாள். அனுபவம் மிக்க ரயில்வே கார்டு அவளைக் காப்பாற்றுவதற்காகத் தக்க தருணத்தில் ரயிலை நிறுத்திவிடுகிறார். இனக்கலவரம் மூண்டதற்குத் தன் தந்தையின் பங்கும் உள்ளது என்று தெரிந்து சிறையில் இருந்த பலதேவ் இதனைப் போலீசுக்குத் தெரிவிக்கிறான். இதன் விளைவால் அமர்நாத்தும் கைதாகிறார்.

லாலா அமர்நாத் கழிவிரக்கத்தால் நீதி மன்றத்திலேயே உயிர் விடுகிறார். சங்கரும் அவனுடைய தோழர்களும் விடுதலை பெறுகிறார்கள். பலதேவன் ஆலைக்குச் சொந்தக்காரனாகி தொழிலாளர்களோடு சமாதானம் செய்துகொண்டு மாலதியை மணந்து கொள்கிறான். பாவம் சங்கர் உடல் நலம் குன்றி இந்த இனிய முடிவைக் காணாமலேயே மறைந்து விடுகிறான்.

இனக்கலவரத்தில் அன்பு எவ்வாறு வெற்றி பெறுகிறது என்பதை நானக் தெள்ளத் தெளிவாகக் காட்டுகிறார். எவ்விதப் புரட்சி நடவடிக்கையிலும் ஈடுபடாமல தொழிலாளி—முதலாளி பூசலை உண்மை அன்பினால் வென்றுவிடலாம் என்று புலப்படுத்துகிறார். முதலாளி—மகன் தொழிலாளி மகளை மணத்தல் என்னும் வகையில் இங்கு அன்பின் நியதி அமைகின்றது.

அத் கிரா ஃபூல், பவித்தர் பாபி [கொடியபாவி] என்பன சமூக நாவல்கள் என்பதைவிட தனிமனிதத் துன்பியல் நாவல்கள் எனலாம். 'அத்கிரா ஃபூல்'லில் வரும் கதைத் தலைவன் குல்திப் சிங் சத்வந்த் என்பவளை மணக்கிறான். அவர்களுக்கு ஒரு குழந்தை. சிறு வயதில் விதவையாகிவிட்ட சரோஜா அவனைக் காதலிக்கிறாள். அவனும் அவள் காதலுக்கு ஈடு கொடுக்கிறான். அதனால் குல்திப் சிங்குக்கும் அவனுடைய மனைவிக்குமிடையே பிளவு உண்டாகிறது. அதன்

விளைவாக, குல்திப் சிங் குருகாபாக் சத்தியாகிரகத்தில் சேர்ந்து சிறை புகுகிறான். அவனுடைய தாய் கியான் கௌர்க்கு இரண்டே வேலைகள் கடவுள் நாமத்தை உச்சரிப்பது. மருமகள் சத்வந்த்தைச் சபிப்பது. குல்திப் சிங் சிறையிலிருந்து வெளிவரும்போது சத்வந் மறைந்து விடுகிறாள். ஆனால், அவன் சரோஜாவை மணக்கவில்லை. காரணம் வாழ்க்கையில் ஏற்பட்ட விரக்திதான்.

இந்நிலையில், சந்நியாச தர்மம் மேற்கொண்ட வார்யம் சிங் என்பவரால் கொடுந்துன்பத்திலிருந்து காப்பாற்றப்பட்ட விபசாரி ஒருத்தி தன் நெறிகளை மாற்றிக் கொள்வதாக உறுதி கூறி, பிரகாஷ் என்னும் பெயரில் குல்திப்சிங்கின் மகனுக்குச் செவிலியாகப் பணிபுரிகிறாள். விரைவில் குல்திப் சிங்கின் இதயத்தில் இடம் பெறுகிறாள். சரோஜாவின் காதலைப் புறக்கணித்து அவளை மணக்கிறான் குல்திப்சிங்.

ஒருநாள் அமிர்தசரஸிலிருந்து தனது கடைக்குரிய துணிகளை வாங்கிக் கொண்டு திரும்பி வந்தபோது, பிரகாஷ் குடிப்பதையும் புகைப்பிடிப்பதையும் காண்கிறான். அவளை வீட்டைவிட்டுத் துரத்துகிறான். இதற்கிடையே அவனுடைய பெற்றோர் இருவரும் மறைகின்றனர். குல்திப் உலகவாழ்வின் மீதும் வெறுப்படைகின்றான். தான் இன்னும் அன்பு கொண்டிருந்த சரோஜா கபட சந்நியாசி வைரம் சிங்குடன் கள்ளத் தொடர்பு கொண்டிருப்பதாகச் சந்தேகப்படுகிறான்.

இதற்கிடையே அகமத்கான் என்னும் முஸ்லீம் நண்பன் குல்திப்சிங்கின் தாயற்ற குழந்தையைத் தன் மனைவியின் பராமரிப்பில் விடுவதற்காக லாகூருக்கு அழைத்து வருகிறான். அந்தக் குழந்தை இருக்குமிடத்திற்கே எப்படியோ பிரகாஷும் வந்து சேர்கிறாள். அங்கே அவளைப் பார்த்ததும் மகிழ்ச்சியடைந்து அவளுடைய குறையை மன்னித்து மீண்டும் மணக்கிறான்.

குல்திப் சிங்கைத் தேடிக்கொண்டு, வார்யம் சிங்கும் சரோஜாவும் கூட லாகூருக்கு வருகிறார்கள். லாகூர் ரயில் நிலையத்தில் வந்து இறங்கியதும், குல்திப், பிரகாஷ், அகமதுதீன் அவன் மனைவி ஆகிய எல்லோரும் இன்னொரு வண்டியில் ஏறியதைக் காண்கிறார்கள். சரோஜா அதிர்ச்சியுற்று பிளாட்பாரத்தில் மூர்ச்சையுற்று விழுந்துவிடுகிறாள்.

இதுவரை எழுதிய பிறநாவல்களைவிட இந்த நாவல் நன்கு திட்டமிடப்பட்டு, நன்றாக அமைந்துவிடுகிறது. தன் பள்ளிப் பருவத்தில் காதலித்த சாவித்திரியை சரோஜாவாக நானக்சிங் வரைந்து காட்டுகிறார் என்பது குறிப்பிடத்தக்கது. கியானி பாங்சிங்கை வார்யம் சிங் வடிவத்தில் காட்டுகிறார். சரோஜாவின் நெகிழ்ச்சியில்லாத அன்பில் ஒருவகை உயர்ந்த பிடிப்புக் காணப்படுகிறது. ஆனால் குல்திப்சிங் அதற்குத் தகுதியற்றவனாக இருக்கிறான்.

இவ்வாறே பவித்திரபாவி என்பதுவும், தன்னையறியாமல் தன்னால் தீங்குற்ற ஒரு குடும்பத்திற்காக இணையற்ற தியாகம் செய்த இளைஞனின் கதைதான்.

கிதார்நாத் என்னும் பட்டதாரி, வயது முதிர்ந்த பெற்றோரையும் உடன்பிறந்த சிறுவர் சிறுமியரையும் விட்டுவிட்டு, கடிகார வியாபாரி அடர்சிங்கிடம் குமாஸ்தாவாகப் பணிபுரிதற்காக ராவல்பிண்டிக்கு வருகிறான். குற்றம் செய்து பதவி நீக்கம் செய்யப்பெற்ற பன்னாலால் என்பவனுடைய வேலையில் அவன் அமர்கிறான். இந்த அவமானம் தாங்க முடியாமல், மனைவியையும் குழந்தைகளையும் புறக்கணித்துவிட்டுத் தற்கொலை செய்துகொள்வதென்று முடிவெடுத்துத் தலைமறைவாக யாருக்கும் தெரியாத இடத்திற்குப் போகிறான். அவ்வாறு செய்ய முடியாமல் தன் அவல நிலை பற்றிக் கிதார்நாத்துக்குத் தெரிவிக்கிறான்.

கிதார் பன்னாலால் வீட்டிற்குச் சென்று, பன்னாலால் தன் எஜமானருக்குரிய காரியம் பற்றி பம்பாய் சென்றுள்ளதாக அவனுடைய மனைவியிடம் கூறுகிறான். பக்கத்தில் ஒரு அறையை வாடகைககு அமர்ததிக் குடியேறுகிறான். தனக்கு உணவளிப்பதற்கு பதில் உதவியாக பன்னாலாவின் பெண் வீணாவுக்குப் பாடம் சொல்லித் தருகிறான. ஒவ்வொரு மாதமும், பன்னாலால் அனுப்பியதாக அவனுடைய மனைவி மாயா நம்பும்படி அவளுக்கு சிறிது பணம் கொடுக்கிறான். வீணாவின் திருமணத்திற்கு உதவுவதற்காக கேதாரும் தன் முன்னோர் வீட்டை அடமானம் வைக்கிறான். மாயாவை, அடர்சிங்கின் கொடுமையிலிருந்து காப்பாற்றுவதற்காக, பன்னாலால் களவாடிய தொகையை மாதத் தவணையில் திருப்பித் தருவதாகப் பொறுப்பேற்கிறான். அதன் பிறகு ராவல்பிண்டியை விட்டுச் செல்கிறான். அடார்சிங்கிடமிருந்தே

இவை எல்லாவற்றையும மாயா தெரிந்துகொள்கிறாள். கிதார்நாத்துக்கு பன்னாலால் எழுதிய கடிதம் ஒன்றை வீணா அவனுடைய அறையில் பார்க்கிறாள். அதிலிருந்து பன்னாலாலின் உண்மைக் கதையைக் தெரிந்து கொள்கிறாள்.

கிதார்நாத் அமிர்தசரஸ் சென்று, மறுபடியும் ஒரு கடிகார வியாபாரியிடம் வேலை பெறுகிறான. மாயாவுக்குப் பணம் அனுப்புவதற்காகவும், அடார் சிங்கின் கடனைத் திரும்பக் கட்டுவதற்காகவும் அதிக நேரம் வேலை செய்து பட்டினி கிடக்கிறான்.

பன்னாலால் ஹரித்துவாரத்திற்குத்தான் போயிருந்தான். கொஞ்ச காலத்திற்குப்பிறகு ராவல்பிண்டிக்குத் திரும்பி வந்து கிதார் நாத்தைப் பற்றித் தெரிநது கொள்ளுகிறான். அதிக நேர வேலையாலும் போதுமான பராமரிப்பு இல்லாததாலும் கிதார் காசநோய் உறுகிறான். உயிர் ஊசலாடும் நிலையில் பன்னாலாலுக்கு வநத தந்தி ஒன்று அவன் கையில் கிடைக்கிறது. பன்னாலாலும் மாயாவும் அமிர்தசரஸ் செலகிறார்கள். முதல் நாள் இரவு கிதார் மறைந்துவிட்டான் என்ற செய்தி கிடைக்கிறது. கிதாரின் மறைவைப் பற்றிக் கேள்விப் பட்டதும் வீணா வேதனைதாங்காமல் உயிர் துறக்கிறாள்.

நானக்சிங்கிடம் பெரிதும் ஈடுபாடு கொண்ட பால்ராஜ் சஹ்னி என்பவர் இதைப் படமாககினார். பொதுவாக இந்தியப் படங்களிற்காண்பது போல், இந்த நாவலில் உணர்ச்சிமிக்க நாடகக் கூறுகள் அமைந்துள்ளன. வேலையில்லாத் திண்டாட்டம், நகர்ப்புறப் போராட்டம், நகரத்து ஏழைகளின் அவலநிலை ஆகியவற்றை மறைமுகமாக இந்த நாவல் விளக்குகிறது.

ஜீவன சங்க்ரம் [வாழ்கககைப போராடடம்] துந்தலி பார்ச்சவன் [புதிர் நிழல்கள்] ஆகிய இரண்டும தம காலத்துச் சமூக விஷயங்கள் மிகுதியும் உடையவை. முலதான மாவட்டத்தைச் சேர்ந்த தேவராஜ் என்னும் பணக்கார மிராசுதாரின் ஒரே மகள் உஷா புராண் சந்த் என்பவனுக்கு வாழ்க்கைப் படுகிறாள். உஷா அப்பட்டமான வெகுளி. புராண்சந்துக்கு அவளைக் காதலிக்க முடியவில்லை. மாமனார் நில புலன்கள் மீதும், அவருடைய வேலையாள் துர்காதாஸின் மகள் சம்பாவின் அழகிலும் அவன் ஒருகண் வைக்கிறான்.

புராண்சந்தும் உஷாவும் காஷ்மீர் செல்கின்றனர். சமுதாய சீர்திருத்தவாதி ஒருவரின் ஆற்றலுக்கு இலக்காகி, அற்பத் திருட்டுக் குற்றத்தால் அனாதையாகிவிட்ட பண்டா என்பவனைப் பேணிக்காக்கும் பொறுப்பை ஏற்கிறாள் உஷா. பண்டா திறமைசாலி என்று நிருபிககிறான். உஷா தந்த ஊக்கத்தால் சங்கீதம் கற்று அந்தக் கலையில் விந்தைமிக்க திறமை அடைகிறான். மாஸ்டர் பலவந்த் என்று பெயரும் பெறுகிறான்.

உஷாவின் கவனம் பண்டாவின் விஷயத்தில் திரும்பியிருந்த வேளையில் அவளோடு காஷ்மீர் வந்திருந்த சம்பாவை, சாமர்த்தியமாகக கெடுத்துவிடுகிறான். உஷா இதைத் தெரிநதுகொண்டதும் சூழ்நிலை மிகவும் அசம்பாவிதமாகிவிடுகிறது. சம்பா ஆழ்ந்த மனவேதனையால் தூக்கில் தொங்குகிறாள். உஷா மனச் சஞ்சலமும வேதனையும் பெருகி உச்சி ஒன்றிலிருந்து தடுமாறி விழுந்து மாய்கிறாள். என்றாலும், மறைவதற்கு முன்னால் தன தந்தையிடம் புராண் சந்தை மனனிக்கும்படி வேண்டுகிறாள். *இந்தியப பாரம்பரியததில் வரும் கற்புடைய மனைவியின் நல்லியல்பு இது.*

நில உடைமையாளர்க்குரிய சமூக அநீதி பற்றி கவனம் கொள்ளும்படி நானக்சிங் ஒன்றும் குறிப்பிடவிலலை என்றாலும், அந்தப் போககில் பெரிதும் கருதிப் பார்க்கும்படி சூழ்நிலை உள்ளது. பாத்திர இயல்புக்கு ஏற்றபடி தேவராஜூம் முதலில் சம்பாவின் தாய் கங்காவோடு நெருங்கிய பிணைப்புக் கொள்கிறான். உஷாவின் மறைவுககுப் பினனர், லஜ்வந்தி என்பவளை மணக்கிறான். அவனுடைய சொத்தில் ஏதாவது ஒரு பகுதி புராண் சந்துக்குக் கிடைக்குமா கிடைக்காதா என்பது பற்றி நானக்சிங் குறிப்பிடவில்லை.

இன்னொரு கொடியவன் தேவராஜூவினுடைய எஸ்டேட் மேனேஜர். அவன புராண்சந்துககு ஊழியனாகவும் இருந்து கொண்டு, அவனைப் பிரிப்பதற்கும் நிறைய வேலை செய்கிறான்.

துந்தலி பர்ச்சவனில் வரும் தேவீநதர்சிங் என்னும் இன்னொரு கொடியவன், வாணிக—தொழிற்துறை மத்திய வகுப்பைச் சார்ந்தவனின் பிரதிநிதியாவான. அவன் ஒரு நாதியற்றவன். *அச்சகத் தொழிலாளி ஒருவனின் மனைவியான* விதவை தாமோதரி என்பவளை வைபபாட்டியாககிக கொண்டவன். அவளுடைய பெண்

சுபத்ராவையும் கெடுத்தவன். தேவேந்திரசிங்கின் வெறித்தனத்திலிருந்து காப்பாற்றுவதற்காக தாமோதரி சுபத்ராவை டெல்லிக்கு அழைத்துச் செல்கிறாள். ஆனால் அவள் சீக்கிரம் மாண்டு போகிறாள். திக்கற்ற மகள் சொகுசுச் சூழல்களிற் சிக்கி விபசார வாழ்வு மேறகொள்கிறாள். கொஞ்சகாலம் கழித்து அவளுக்கு ஒரு மகன் பிறக்கிறான். அவன் தோற்றத்தில் தேவேந்திரசிங்கைப்போலவே இருக்கிறான்.

தேவேந்திர சிங்குக்கு ஒரே மகள் ரமீந்தர். லாகூர் மருத்துவக் கல்லூரி மாணவியாகக் கதையின் தொடக்கத்தில் தோன்றுகிறாள். ஒருமுறை அமிர்தசரஸில் உள்ள சொந்த வீட்டுக்கு வந்தபோது, தாமோதரி மகன் வண்டிக்கார ராதனாவின் மூலம், தாமோதரி சுபத்ரா இருவர்தம் கதையைக் கேள்விப்படுகிறாள். ராதனாவை அழைத்துக்கொண்டு, ஏழை சுபத்ராவைக் காப்பாற்றும் எண்ணத்துடன் டெல்லி செல்கிறாள். இதற்கிடையே, நானக்சிங்கின் கதையில் வழக்கமாக வருவதுபோல், விசித்திர நிகழ்ச்சியாக தாமோதரியைக் கொடுமைப்படுத்திய சுபத்ராவின பெரியப்பன், இரவுக் கேளிக்கைக்காக சுபத்ராவிடம் வருகிறான. நள்ளிரவு வேளையில், சுபத்ரா அவனை அடையாளம் கண்டு, குத்திக் கொன்று விடுகிறாள். குற்ற விசாரணையில் தூக்குத் தண்டனை பெறுகிறாள். ரமீந்தரும், ராதனாவும் சுபத்ராவின் பையன் கிஷோரை அமிர்தசரசுக்கு அழைத்து வருகிறார்கள. குற்ற உணர்வோடு தேவேந்தர்சிங் மகனை ஏற்றுக் கொள்கிறான.

இநத நாட்களில் ராதனாவுக்கு ரமீநதர் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்துவிடுகிறாள். குடும்பத்தில் இன்னொரு ஊழியனான பஞ்சுவின மகள் லீலாவைத் திருமணம செய்துவைக்க ஏறபாடு செய்கிறாள். கதையில் ஒரு லட்சியத் திருப்பம் இருக்க வேண்டும் என்பதை மறக்கலாகாது என்ற வகையில், வாழ்நாள் முழுவதும் தூய கற்பு வாழ்வு மேற்கொண்டு தாய் நாட்டுத் தொண்டுக்கு அர்ப்பணம் செய்துகொண்டவளாக ரமீந்தரைப் புனைந்து காட்டுகிறார் நானக்சிங்.

காதல் திருமணம் என்னும் இன்னொரு நாவலில், தலைப்பே விளக்குவதுபோல, இந்த நூற்றாண்டின் மத்திய வகுப்பு வட்டாரங்களில் பெரிதும் பேசப்பட்ட செய்திதான் கதையின் கரு. நானக்சிங் தமது கண்ணோட்டத்தை விரிவுபடுத்தி பாரம்பரியத் திருமணங்களிலிருந்து வேறுபட்டனவாக மூனறு வகைக்காதல

திருமணங்களைச் சித்தரிக்கிறார். இந்த நாவலின் முன்னுரையில் நானக்சிங் எழுதுகிறார்: "வாழ்வு மேடையில் காதல் திருமண விளையாட்டில் தலைப்பட்ட மூன்று ஜோடிகளை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். முடிவில் ஒருவகைக்காதல் திருமணமே மரியாதைக்குரியது என்றும் பிற எதுவும் கண்டிக்கத்தக்கது என்றும் உங்களுடைய அறிவே உங்களுக்குப் புலப்படுத்தும். விரிந்த சொற்களில் கூறினால், முதலாவது மிக உயர்ந்த லட்சியத் திருமணம், நடுவில் நிற்பது பாரம்பரியத் திருமணம்; மூன்றாவது மட்டமான ஒன்று [இச்சை பற்றியது].

இந்திரபால்—அரவிந்த் திருமணம் மிக உயர்ந்த லட்சிய வகைத் திருமணம். வறிய குடும்பத்தில் பிறந்த இந்திரபால் மெட்ரிகுலேஷன் தேறியபின் தன் அன்னையின் சகோதரி மாயாவின் வீட்டுக்கு போகிறான். அங்கு மாயாவின் இளைய மைத்துனர் மகள் ராஜ்குமாரி என்னும் எதார்த்தம் மிக்க பெண்ணைக் கண்டு அவளிடத்தில் ஈடுபாடு கொள்கிறான். என்றாலும் பிழைப்புக்கருதித் தன் சிற்றன்னை வீட்டிலிருந்து புறப்பட வேண்டியதாகின்றது. விரைவில் பெஷாவர் சென்றுசேர்ந்து, அக்டர்ஹுசேன் என்னும் இளம் பஞ்சாபி முஸ்லிம் ஓவியன் ஒருவனின் நட்பைப் பெறுகிறான். அக்டர் தன் அத்தை மகள் சலேகாவைக் காதலித்து மணக்கிறான். இது, சமுதாய நியதிகளின்படி அமைந்த இரண்டாவது வகைக் காதல் திருமணம் ஆகும்.

தினநகரில் தன் சகோதரியைக் காணச் சென்ற இந்திரபால் நூலகம் ஒன்றில் நவஜீவன் என்னும் தலைப்புடைய இந்திக் கவிதை நூல் ஒன்றைப் பயில நேரிடுகிறது. அதன் ஆசிரியை ஒரு பெண் என்று தெரிந்து அவள் லாகூர் வாசி என அறிந்துகொண்டு அவளைக் காண லாகூர் செல்கிறான். எதிர்பார்த்தவாறே அவள் இவன் மீது நல்லெண்ணம் கொள்ளுமாறு நடந்து கொள்ளுகிறாள்.

இதற்கிடையே ராஜ்குமாரியின் அன்னை வறுமையின் நெருக்கடிக்கு ஆளாகி சௌதர்போலாநாத் என்பவரின் இல்லத்தில் சமையல்காரியாகப் பணி ஏற்கிறாள். அவருடைய மகன் ரகுநாத் ராஜகுமாரியைக் கெடுத்துக் கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்கிறான். ராஜ்குமாரி ரகுநாத்துடன் தகாதவகையில் ஓடிப்போன செய்தியை இந்திரபால் பத்திரிகையொன்றில் காண்கிறான். ராஜ்குமாரியைக் காணலாம் என்று ஏதோ ஒரு சிந்தனையில் காஷ்மீர் செல்கிறான்.

அரவிந்தும் அவனோடு உடன் செல்கிறான். ராஜ்குமாரியைக் கல்கத்தாவுக்கு அழைத்து வந்தது, அவள் ஏமாற்றமடைந்து ஹோட்டலில் ஜன்னல் வழியாகக் குதித்துச் சாலை எதிர்நோக்கிக் கிடப்பது ஆகிய எல்லாவற்றையும் கழிவிரக்கத்தோடு புலப்படுத்திய ரகுநாத் எழுதியகடிதம் ஸ்ரீநகரில் இந்திரபாலுக்குக் கிடைக்கிறது.

இந்திரபால் கல்கத்தா சென்று ராஜ்குமாரியை ஆஸ்பத்திரியில் சந்திக்கிறான். அரவிந்துக்கு அவன் கடிதம் எழுதுகிறான். அவள் தன் தந்தையுடன் கல்கத்தா செல்கிறாள். ராஜ்குமாரி மாயும் வேளையில் அவள் விரும்பியது / இந்திரபாலும் அரவிந்தும் மணந்துகொள்ள வேண்டும் என்பதுதான். நானக்சிங்கின் லட்சியமாந்தர்கள் பொதுவாக வாழ்வின் இருபுறத்திலும் நலம் பெறுபவர்களாக உள்ளனர். ரகுநாத் ராஜ்குமாரியைத் தன்வசப்படுத்தி வைத்திருந்தது மூன்றாவதுவகைத் திருமணம்.

தூர் கினாரா [தூரத்து எல்லை/கரை] என்பதுவும் சமுதாயத் தொடர்பு இல்லாத தனிமனிதத்துன்பியல் வரலாறாகும். மாதுரியின் தந்தை கான்பூரில் வேலை செய்ததாலும் அவளுடைய தாய்மாமா/தக்கர் கிருஷ்ணன் தேவ்சிங்குக்கு வாரிசு இல்லாததாலும், கதைத் தலைவி மாதுரியும், அவளுடைய அன்னையும் தாய்மாமா வீட்டிலேயே வாழ்கிறார்கள்.

மாதுரியின் அன்னை வயிற்றில் கட்டி வளர்ந்ததால் அறுவைச் சிகிச்சைக்காக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்படுகிறாள். விஷங்குடித்த பிரிதிபால்சிங் என்னும் இளைஞன் ஒருவனும் அதே ஆஸ்பத்திரியில் இருக்கிறான். அவன் மாதுரியின் இதயத்தைக் கவர்ந்து கொள்கிறான்.

மிக்ரம்சிங் மனைவியைப் பார்க்க ஆஸ்பத்திரிக்கு வருகிறார். மாதுரிக்கு ஒரு புத்தகம் படிக்கக் கொடுக்கிறார். புத்தகத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்ட மாதுரி, அதன் ஆசிரியர் சக்ரவர்த்தி என்பவர்க்குப் பாராட்டுக் கடிதம் எழுதுகிறாள். சக்ரவர்த்தி தன் ஒரே மகள் ஜியோட்சனாவுக்கு ஈமச்சடங்கு செய்துவிட்டு காஷ்மீரிலிருந்து திரும்புவதாக பதில் போடுகிறார். இந்திரகுமார் என்னும் இளைஞன் ஒருவனால் ஏற்பட்ட காதல் ஏமாற்றம் அவளுக்கு எமனாக வந்து சேர்ந்தது.

மாதுரி சக்கரவர்த்தியின் வளர்ப்பு மகள் ஆகிறாள். பிரதிபால் சிங் என்னும் இளைஞனை மணப்பதற்கு முடிவு செய்திருந்ததாகவும், ஆனால் அவன் ஒரு அற்பன் என்று தெரிந்து மறுத்துவிட்டதாகவும் அவரிடம் கூறுகிறாள்.

கண்ணியமும் அழகும் கடும் உழைப்பும் உடைய அமர்சிங் என்பவனுக்கு மாதுரி வாழ்க்கைப்படுகிறாள். அவன் பொதுப்பணித்துறையில் மேஸ்திரியாகப் பணியாற்றுகிறான். ஒருநாள் சக்கரவர்த்தி மாதுரிக்கு எழுதிய கடிதத்தைப் படிக்கிறான். அதன்பேரில் சக்கரவர்த்தியே மாதுரியின் காதலராய் இருத்தல்கூடும் என்று சந்தேகப்படுகிறான். பதான்கோட் போஸ்ட்மாஸ்டர் அமர்சிங்கின் நண்பர். பிரிதிபால் சிங்கும் சக்கரவர்த்தியும் மாதுரியின் காதலர் என்று முன்னமேயே அவர் அமர்சிங்கிடம் கூறியுள்ளார். மாதுரிக்கு நேர்ந்த மானக்குலைவால் அவள் எதையும் கூற மறுக்கிறாள்.

மாதுரி பிறகு சக்கரவர்த்திக்கு எழுதி, தனக்கு மேற்கொண்டு எதுவும் தெரிவிக்கலாகாது என்கிறாள். சக்கரவர்த்தி மாதுரியின் வீட்டிற்கு வந்து வேலையாளாகப் பணி ஏற்கிறான். அமர்சிங் மாதுரி இருவர்க்குமிடையே சமாதானம் செய்துவைக்க முயல்கிறான்; ஆயின் அது பலனளிக்கவில்லை.

இதற்கிடையே, மாதுரியின் திருமணத்திற்கு முன்னர்த் தான் அவளுக்கு எழுதிய கடிதங்களைக் கொண்டு ஒரு நாவல் எழுதி விடுகிறான். நாவலின் கையெழுத்துப் பிரதியையும் அமர்சிங்குக்கு ஒரு கடிதத்தையும் எழுதிவைத்துவிட்டு, காஷ்மீரில் தன் மகளைத் தகனம் செய்த கிர்பவானி என்னும் இடத்திற்குச் செல்கிறான்.

அமர்சிங் நாவலையும் சக்கரவர்த்தியின் கடிதத்தையும் படித்து விட்டு உண்மை உணர்கிறான. மாதுரியிடம் மன்னிப்பு வேண்டியதோடு, சக்கரவர்த்தியைக் காண அவளோடு கிர்பவானிக்குச் செல்கிறான். மாதுரிக்கும் அமர்சிங்குக்கும் ஜியோத்சனாவின் துன்பக் கதையை விவரித்தபோதுதான், இந்திரகுமார், பிரதிபால் சிங் என்பன விஸ்வநாத் என்னும் அயோக்கியனின் பொய்ப் பெயர்கள் என்று தெரிகிறது.

ஜியோத்சனாவில தன தாயையும, சககரவர்த்தியாகத்

தன்னையும் படைத்துள்ளதாக நானக்சிங் கூறுகிறார். ஆயின் இந்த மாற்றுப்படைப்பில் புலப்படுத்தியுள்ள தன் தாயின் உண்மை வரலாறு எதற்கும் ஈடானது அன்று.

துத்தி வீணா [சிதைந்த வீணை] கங்கா ஜலிவிச் ஷரப் [தீர்த்தத்தின் சாறு] இரண்டும் இணை நாவல்கள். துத்தி வீணாவில் கங்கா ராம் என்னும் இளைஞனொருவன், சீர்த்திருத்த வேட்கையால் சத்யா என்னும் விபசாரியை மணக்கிறான். ஏற்கனவே அவளுக்குப் ப்ரதிமா என்னும் பத்து வயதுடைய மகள் இருக்கிறாள். தன்னுடைய இழிதொழிலிலிருந்து அவளைக் காப்பாற்ற விரும்புகிறாள் அவள். பதினைந்து வயதில் நடுநிலைப்பள்ளித் தேர்வில் ப்ரதிமா வெற்றி பெறுகிறாள். ஆயினும், அவளுடைய தாயின் தொழில் காரணமாக, கௌரமுள்ள எந்த இளைஞனும் அவளை மணக்க முன்வரவில்லை. இதன் விளைவாக சத்யா கால்வாய் ஒன்றில் விழுந்து முழுகித் தற்கொலை புரிந்து கொள்கிறாள்.

ப்ரதிமா கவிதை எழுதுகிறாள்; காங்கிரஸ் கட்சி ஏற்பாடு செய்யுங் கூட்டங்களில் கலந்துகொள்கிறாள். இந்நிலையில் டாக்டர் சேது என்னும் ஹரிஜனின் மகன் உதயசங்கர் என்னும் காங்கிரஸ் தொண்டனைக் காதலிக்கிறாள். காங்கிரஸ் சத்தியாக்கிரகியாகச் சிறை புகுகிறான். அங்கு, காதார் இயக்கத்தைச் சார்ந்த சுதேசி ஒருவரின் செல்வாக்குக்கு இலக்காகிக் காதலையும் பிரதிமாவையும் மறந்துவிடுகிறான். உதயசங்கர் சிறையிலிருந்து வெளிவந்ததும், அவனுடைய மனப்பான்மையில் ஏற்பட்ட மாறுதலைத் தெரிந்து, ப்ரதிமாவும் அவளுடைய வளர்ப்புத் தந்தையும் அதிர்ச்சியடைகிறார்கள். பிழைப்புக்காக ப்ரதிமா தையற்காரியாகிறாள்.

ஏற்கனவே, மனைவியும் மூன்று பெண்களும் உள்ள படேசந்த் என்னும் வயதான ஒருவனுக்கு ப்ரதிமா மனைவியாக நேரிடுகிறது. ஓராண்டுக்காலத்தில், ப்ரதிமா குழந்தை பெற்று சீதா என்று பெயர் வைக்கிறாள். எவ்வளவோ எதார்த்தமாக இருந்தாலும், ப்ரதிமாவுக்கு உதயசங்கரோடு இருந்த தொடர்பைப்படேசந்தால் தாங்கிக் கொள்ள முடியவில்லை; அவளை வீட்டை விட்டுத் துரத்துகிறான். இடையில் உதயசங்கர் சிறையில் காசநோய்க்கு இரையாகி மறைந்து போகிறான்.

வளர்ப்புத் தந்தை கங்காராமுடன் வாழ்வதற்காகக் கிராமத்துக்குப் போகிறாள். கங்காராம், பிரதிமாவின் தீவினைகளைக் கேட்டுத் துயர் தாங்காமல் மாண்டுபோகிறான். வேசியின் மகள் என்பதற்காகக் கிராமத்தார் அனைவரும் அவளை ஊரை விட்டுத் துரத்துகிறார்கள். தன் மகளை அவள் லாகூருக்கு அழைத்துப் போகிறாள். மகள் கௌரவமான வாழ்வு வாழ்வதற்காகப் பணம் சேர்க்க வேண்டி, அவள் விபசாரம் மேற்கொள்ளுகிறாள்.

பிரதிமாவின் மகிழ்ச்சியற்ற திருமணத்திலும் அவள் விபசாரி ஆகும் நிலையிலும் கொண்டுபோய்விட்ட உதய சங்கரின் லட்சிய போக்கை நானக்சிங் முன்யோசனை இல்லாமலேயே கண்டித்திருக்கிறார்.

லியால்பூரில் வீடுவாங்கி அங்கே பிரதிமா வாழத் தலைப்படுவதற்காகப் போதிய பணம் சேர்த்திருக்கும் நிலையிலிருந்து நாவல் தொடங்குகிறது. தன்னைப் பிரபாதேவி என்றும் சீதாவை ஊர்வசி என்றும் பெயர் மாற்றம் செய்கிறாள். படேசந்த் தன்னுடைய போக்குகளை மாற்றிக் கொண்டு, அமர்பாரதி என்று பெயர் வைத்துக் கொண்டு லாகூரில் பத்திரிகை ஒன்று தொடங்குகிறான்.

லியால்பூரில் மதன் என்னும் கண்ணியமிக்க இளைஞன் ஊர்வசிக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடாகிறது. இருவரும் காதலிக்கின்றனர். இதற்கிடையில், மதனுக்கு நண்பனான பிரகாஷ் என்னும் இளைஞன், தன்னுடைய பணவசதியைப் பிரபாதேவிக்குக் காட்டி, ஊர்வசியைத் தனக்குக் கட்டிக் கொடுக்கும்படி செய்து விடுகிறான். மிஸ்செளரி போன்ற இடங்களில் பணிப் பெண்களை அமர்த்தித் தருவதுதான் பிரகாஷின் தொழில். பிரபாதேவியையும் ஊர்வசியையும் மிஸ்ஸெளரிக்கு அழைதததுச் செல்லுகிறான். அங்கே ஊர்வசி பிரகாஷின் கெட்ட நடவடிக்கைகளைத் தன் தாய்க்கு அம்பலப்படுத்துகிறாள். அவ்வள் அதிர்ச்சியுற்றுக் கீழேவிழுந்து படுகாயம் அடைகிறாள்.

ஊர்வசி உடனே மதனுக்குத தந்தி கொடுத்துத் தனக்கு உதவும் படி கேட்கிறாள். அவன் தறபோது அமர்பாரதியின் பத்திரிகையின் மானேஜராக உள்ளான். அவனும் அமர்பாரதியும் மிஸெளரி போகிறார்கள். ஆனால், அவர்கள் இருவரும் பிரபாதேவியைக்

காப்பாற்ற முடியவில்லை. ஊர்வசி தன் தந்தையோடு ஊர் திரும்புகிறாள். இவ்வாறு சத்யாவின் வாரிசு, மூன்றாவது தலைமுறையில் விபசாரத்திலிருந்து விடுதலை அடைகிறாள். எவ்வளவு சீர்திருந்தினாலும், முன்னோர்களுடைய இழிந்த வெட்கப்படத்தக்க வாழ்வினின்றும் விடுபட்டு வாழ்வது, கள்ளங்கபடமற்றவர்களுக்கும் அரியதொரு செயல் என்று நானக்சிங் இந்த நாவலில் நிதர்சனமாகக் காட்ட விழைகிறார்.

# 5

## சுதந்திரத்திற்குப் பிறகு

சுதந்திரத்திற்குப் பிறகு, நானக்சிங்கின் சமுதாயம் பற்றிய பிடிப்பில் குறிப்படத்தக்க மாறுதல் காணப்படுகிறது. சுதந்திரத்திற்கு முன்னர், சமூக அமைப்பில உள்ள பொருளாதாரக் காரணம் பற்றிய கவனம் அவரிடம குறைவாகவே இருந்தது. அரசியல் நிர்வாக அதிகாரங்களுககுரிய பொறுப்புக்கள் பற்றியும் அதே நிலைதான். தனிமனித நிலை பற்றிய காரணத்தின் மீதும், நன்மை தீமை பற்றிய தொன்றுதொட்டு வரும் கருததுக்களின மீதும் அவர்க்குப் பெரிதும் பிடிப்பு இருந்தது. சான்றாக, இளம் விதவை ஒருத்தி, மறைந்த அவளுடைய கணவன் வீட்டாரின் கொடுமைகளுக்கு ஆளாகிக் காமுகர், விபசாரத்திற்குத் துணைபோவோர், விலைபகர்வோர் ஆகியோர் கையில் அகப்படுவது என்னும் வகையில்தான் பெண்களின் நிலை உள்ளது. கதாநாயகன், தன்னைத் தியாகம் செய்து, பெண்களைப் காப்பாற்றி வருவது அல்லது அவள் நிலையை உயர்த்துவது என்னும் அளவில் லட்சிய புருஷனாக இருப்பான். ப்யார் கி துனியா, கரிப் கி துனியா போன்ற நாவல்களில், முதலாளி தொழிலாளிப் பூசல், இனக்கலவரங்கள் போன்ற தற்காலப் பிரச்சனைகளை எடுத்துக் கொண்டாலும், அவற்றிற்குரிய பொருளாதாரக் காரணங்களைக் கூர்ந்து நோக்குவதில்லை. பொறுப்பை நழுவவிட்டுவிட்டுச் சமயத்தலைவர்கள் பூசாரிகள் பிரிட்டிஷ் அரசு ஆகியோரின் போலித்தனத்தைக் குறை கூறுவதே வேலையாக இருந்த மத்தியதர வகுப்பாரின் சமுதாயத் தலைமை பற்றிய வாய்பாடுகளை வெறுமனே கூறிக்கொண்டிருந்தார் அவர். சமுதாயக்கோட்பாடு என்பது அவருடைய கவனத்திற்கு எட்டாததாகவே இருந்தது.

சமூக, அரசியல, பொருளாதாரக் காரணங்களின் கட்டமைப்பு அவை செயல்படும் ஆற்றல் ஆகியவை பற்றிய அவருடைய அறிவு மேலெழுந்த வாரியானது; குறைபாடுடையது எனினும் அவை பற்றிய கவனம், சுதந்திரத்திறகுப் பிறகு அவர் எழுதிய நாவல்களில்

அதிகமாகக் காணப்பட்டது.

அவருடைய அறிவில் நிகழ்ந்த மாறுதலை வரையறை செய்துகொள்வதற்கு முன்னரே, பஞ்சாப் துண்டாடப்பட்டதும் விளைந்த கொடிய நிகழ்ச்சிகள் அவருடைய கவனத்திற்கு ஊறு விளைத்துவிடுகின்றன. பழைய பல்லவியைத் திரும்பத் திரும்பப் பாடுவதைத் தவிர அதற்குமேல் அவரால் ஒன்றும் செய்ய இயலவில்லை. பிரிவினையின் கொடுமைகளை விளக்குதற்கென இயற்றிய இரண்டு நாவல்களில் முதலாவதாகிய கூன் டி சொகிலி [குருதி வெறிப் பாடல்கள்] யின் முன்னுரையில் எழுதுகிறார், "விலங்கு நீர்மையும் கற்பழிப்பும் நிலைபெற்றவிட்ட தீவினை மிக்க ஆண்டாகிய 1947—ல் நிகழ்ந்தவைகளெல்லாம், எந்த இந்துவையும் முஸ்லீமையும் சீக்கியனையும் நிலைகுலைக்காமல் விடவில்லை".

மேற்கு பஞ்சாபில் அட்டாக் மாவட்டத்தில் உள்ள சக்ரி என்னும் கிராமத்தில் லேவாதேவி செய்து கொண்டும் கடைவைத்தும் பிழைக்கும் பானேஷா என்னும் இந்து, இந்துக்கள் மீது முஸ்லீம்கள் நடத்திய பூசலில் சிக்கிக் கொள்கிறான். தன்னுடைய குடும்பத்தோடு, முஸ்லீம் குடியானவன் ரஹிம்பக்ஷா அவனுடைய மனைவி, மகள் நசீம், மகன் அஜிஸ் ஆகியோரை உள்ளிட்ட இன்னொரு குடும்பமும் அவன் பராமரிப்பில் இருந்தது; முஸ்லீம் குடும்பத்தைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பு எப்படி வந்தது என்பது பற்றிய போதிய விளக்கம் இல்லை. ரஹீம் பக்ஷா வீட்டுக்குத் தொலைவில் வேலைபார்க்கிறான் என்பதொன்றே தெரிகிறது. அந்த கிராமத்தில் ரஹீம் பக்ஷாவின் உறவினர் எப்படி அவனுடைய மனைவி குழந்தைகளைப் பற்றிய நினைவில்லாமலிருந்தார்கள் என்பது பற்றிய செயற்கைச் சூழலை குறித்து நானக்சிங் கவலைப்படவில்லை. சூறையாடலுக்குத் தப்பி இந்தியாவுக்கு ஓடிவந்தபோது, தன் குடும்பத்துக் பெண்களை அழைத்துவராமல், நசீமை அழைத்துவந்து, தன மகள் என்று வெளியில் சொல்லிக்கொள்கிறான்.

ஆங் கீ கேல் [தீயின் விளையாட்டு] என்னும் அடுத்த நாவலிலும் கதை தொடர்கிறது. மேற்கு பஞ்சாபின் பகுதியாகிய ராவல்பிண்டியைச் சார்ந்த பொதாஹர் என்னும் ஊரிலிருந்து வந்த அகதிகளாக, அமிர்தசரஸ் பொற்கோவில் எல்லைக்குள் பானேஷா நசீமுடன் தஞ்சம் புகுந்திருக்கிறான். உணவு, துணி ஆகிய

வகைகளில் மக்கள் அவர்களுக்கு உதவிபுரிகின்றனர். அவர்களுக்கிடையில்தான் பிரிஜிந்தர் உள்ளான். அவனும் அவனுடைய அன்னை கேசர்கௌரும் பானேஷருக்கும் கிருஷ்ணா என்கிற பெயரில் உள்ள மகள் நசிமுக்கு அறிமுகம் ஆகிறார்கள்.

பிரிஜிந்தர் இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காக அமைக்கப்பட்ட உள்ளூர்க் கமிட்டியின் உறுப்பினர். பானேஷா தன் குடும்பத்தாருக்கு நேர்ந்த கதியை மயிர்க்கூச்செறியும் வகையில் கூறிய வரலாறு பிரிஜிந்தாரை உணர்ச்சியடையதாக்கவே இந்துக் கலகக்காரர்களுடன் சேர்ந்து முஸ்லீம்களை அலைக்கழிப்பதிலும் கொன்று தீர்ப்பதிலும் அவன் ஈடுபடுகிறான். கிருஷ்ணாவினிடம் இவன் ஈடுபாடு கொண்டதும் இவனிடம் கிருஷ்ணா ஈடுபாடு கொண்டதும் இயற்கையே. கிருஷ்ணா பிரிஜிந்தருடன் அவன் சார்ந்திருந்த கலகக்காரர் கூட்டம் ஒன்றில் பேசுகிறாள். முஸ்லிம்லீக்கின் தூண்டுதலால் முஸ்லீம்கள் கலவரங்களையும் கொலைகளையும் செய்யத் தொடங்கினாலும், இந்துக்களும் சிக்கியர்களும் அவற்றைச் சமாளிப்பதற்காக மேற்கொண்ட நெறி தக்க பரிகாரமாக அமையவில்லை. ரத்தத்தைக்கொண்டு ரத்தத்தைக் கழுவுவது போன்றது அது.

எல்லையின் மற்றொரு பக்கம், யூசுப் என்ற முஸ்லீம் இளைஞன், இந்துக்கள் மீது தன் சமயத்தார் இழைத்த இம்சைகளைக்கண்டு பெரிதும் நெகிழ்ந்து, பானேஷாவின் குடும்பத்திற்கு உதவிபுரிய முன் வருகிறான். பானேஷாவின் மருமகள் ருக்மணியை, முப்பதாயிரம் ருபாய் மதிப்புள்ள நகைகளுடன் அமிர்தசரஸிலிருந்த பானேஷாவிடம் அழைத்து வருகிறான்.

அற்புதநவிற்சிப் பாங்கிலான சிக்கல்கள் பல நிகழ்கின்றன. இறுதியில் இந்துக கலகக்காரர்களுள் ஒருவனாகிய சுதர்சன். கிருஷ்ணா என்னும் பெயர் கொண்டவள் ஒரு முஸ்லிம் பெண் என்று தெரிந்ததும அவளைச் சுட்டுக் கொன்றுவிடுகிறான். ஷபா என்னும் உண்மைப் பெயர் கொண்ட யூசுப் தன்னையே சுட்டுக் கொள்கிறான்.

அடுத்த நாவலான மஞ்ஸ்தார் [நடு ஓடை] என்பதில் சுதந்திரம் பெற்று நாடு பிரிவினை உற்றகாலத்தில் நிகழ்ந்த சமுதாய நிகழ்ச்சிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. இந்த வேளையில், எல்லைப்புறத்தின் இரு பக்கங்களிலும் விவரிக்க ஒண்ணாத

வகையில் ஐந்து லட்சம் பேருக்குக் குறையாமல் கொல்லப்பட்டனர். மனித தர்மத்திற்குப் பெருங்கேடு நிகழ்ந்தது. முக்கியமாகப் பெண்களின் கௌரவம் பாதிக்கப்பட்டது. இந்துக்களும், சீக்கியர்களுமாக இருபது லட்சம்பேர், புதிதாகக் குடியமர்த்துதல் என்னும் முறையில் இங்குமங்கும் அலைக்கழிக்கப்பட்டனர். ஊழலும், சீர்கேடுகளும் தலை எடுத்தன. தேசத்திற்காகப் பெருந்தியாகம் கொண்டனர். காங்கிரஸ் தலைவர்கள் ஏறிய ஒழுக்கமும் உறுதியும் கொண்ட கப்பல் நடு ஓடையில் தத்தளிப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. அதற்கு ஒரே ஒரு வழிதான் புலப்பட்டது. அது கழிவிரக்கம் கொள்வதும் தவம் புரிவதுந்தான்.

கதைத்தலைவன் டாக்டர் ஆனந்த் முன்பிருந்தே தன்னலமற்ற காங்கிரஸ் தொண்டன். யாருமற்ற சொத்துக்களை முடிந்த அளவு கொள்ளை கொள்வது அரசியல் லாபம் கொள்வது முதலிய சபலத்தில் அவன் அப்போது சிக்கிக் கொண்டான். பத்திரிகையாளன் சுக்லாவும் வணிகர்களும் அரசு ஊழியர்களும் ஆகிய வேறுபலர் அவனுக்கு உடந்தையாகவும் பங்குதாரர்களாகவும் ஆயினர்.

கதைத் தலைவி புண்யா ஒரு அகதி. அழகான மாது. மிக எளிய வாழ்வு மேற்கொண்டவள்; கலவரத்தில் அவளுடைய குடும்பத்தார் அனைவரும் கொல்லப்பட்டனர்.

டாக்டர் ஆனந்திடம் புண்யா ஒரு வேலை பெறுகிறாள். விளைவு காதலாக வளர்கிறது. ஆனால் ஆனந்தினுடைய பண வெறியையும் அதிகார வெறியையும் வெறுக்கிறாள். இறுதியில் ஆனந்தை மாற்றி அவனுடைய கண்ணியமிக்க பழைய வாழ்க்கைக்குத் திரும்பக் கொணர்வதில் வெற்றி பெறுகிறாள். சுதந்திரத்திற்குப் பிந்தைய நிலை சமூக ஊழல்கள் சீர்கேடுகள் ஆகியவை பற்றிய நானக்சிங்கின் ஓவியம் பயன் தரத்தக்கதாக உள்ளது. ஆயின் அவருடைய லட்சிய நிலை ஏற்கத் தக்கதாக இல்லை.

நுண்கலைகள், சமூகத்தொண்டு, நெறிப்பட்ட காம வாழ்வு, பணம், பொருளாதாரம் ஆகியவைப்பற்றியும் அவை பற்றிய தொல்லைகளிலிருந்து விடுபடுவது குறித்த போராட்டத்திற்குரிய நெறியைப் பற்றியும் சுதந்திரத்திற்குப் பிறகு அவை பற்றித் தாம் காண விழைந்த சமூக நிலையைத் தமது கவனத்திற்கு எட்டிய

வரையில் சித்திரகார் [ஓவியன்] என்பதில் நன்கு புலப்படுத்தியுள்ளார் நானக்சிங்.

நாவலில் முதற்பகுதி, துவாரகாதாஸ் என்ற பண வெறி பிடித்தவனின் கதையைச் சொல்லுகிறது. அவன் காஷ்மீர் இளம் பெண் ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டான். ஆனால், அவளைக் கொடுமைப்படுத்தியதால் சாதனா, குசும் என்று இரண்டு பெண்களை விட்டு விட்டுக் கண்ணை மூடுகிறாள். குசும் பருவமுற்றபோது, வினோத் என்பவன் அவளை ஆசை காட்டி நெறிதவறச் செய்து, கருவுற்ற நிலையில் கைவிடுகிறான். டல்ஹௌசியில் வாழ்வை முடித்துக்கொள்ள முனைந்த வேளையில் ஓவியன் பிரபாகர் அவளைக் காப்பாற்ற முன் வருகிறான்.

இரண்டாவது பகுதி பிரபாகரனின் கதையையும் அவனுடைய குடும்ப நிலையையும் விளக்குகிறது. அவன் மிகவும் ஏழை. பிழைப்புத் தேடி, பம்பாய் செல்கிறான். அவன் ஊரில் இல்லாதபோது, அவனுடைய மனைவி ஷியாமாவும், மகன் சுபாஷிம் மகள் ஷஷியும், மிகக் கொடிய வறுமையில் தங்களுடைய நாட்களைக் கழிக்கின்றனர். 1947—இல அவர்கள் ராவல்பிண்டியை விட்டு நீங்கி டெல்லியில் புகலிடந்தேட வேண்டியவராகின்றனர் சுபாஷ் நாடோடியாக மாறி, ஒவ்வொரு கெட்ட பழக்கமாகக் கற்றுக் கொள்ளுகிறான். தனது அடிப்படைத் தேவைக்காக, மகளைத் துவாரகதாசின் ஆசைநாயகி ஆக்குவதற்கு ஷியாமா உடன்படுகிறாள்.

இடையே பிரபாகர் பம்பாயில் முன்னேறுகிறான். எனினும், லட்சிய வேட்கைக்கு ஆளாகி, கௌதமபுததரின் மனைவி யசோதரையின் வடிவத்தைத் தீட்டும பேராசையில் அதே நினைவாக இருந்து வருகிறான். மாதிரி வடிவம் ஒன்றைத் தேடி ஸ்ரீநகர் போகிறான். ரவீந்திராவினிடம் அதைக் காண்கிறான். ஓவியம் நிறைவடையும் நிலையில் ரவீந்திராவிடம் கொண்ட வேட்கையால் அலைக்கழிப்பு உறுகிறான். அவனுடைய துரிகை இயங்காமல் நின்று விடுகிறது. ஸ்ரீநகரைவிட்டு ராவல்பிண்டிக்குத் திரும்புகிறான். அங்கே தன் குடும்பம் பற்றிய எந்த ஆதாரமும் அவனுக்குக் கிடைக்கவில்லை. எல்லோரும் கலவரத்தில் மாண்டுபோயிருக்கக்கூடும் என்று நினைக்கிறான். அதனால் டல்ஹௌசிக்குத் திரும்பிவருகிறான். அங்கே, குசும் என்பவள்

உச்சி ஒன்றிலிருந்து கீழே குதிக்கவிருந்த நிலையில் அவளைச் சந்திக்கிறான். அவளைக் காப்பாற்றி அவளிடத்தில், யசோதரையின் வடிவந் தீட்டுதற்குரிய இன்னொரு மாதிரியையும் காண்கிறான்.

குசுமின் நல்ல பெயரைக் காப்பாற்றுவதற்காக, பிரபாகர் முறைப்படி அவளை ஊரறிய மணந்து கொள்கிறான். பிரபாகருடைய குருவின் மனைவி குழந்தைப் பேறில்லாதவள்; அவள் குசுமின் குழந்தையைத் தத்தெடுத்துக் கொள்ளுகிறாள்.

திருட்டுக் குற்றத்தால் சிறைசென்ற சுபாஷ், தன்னை வெளியிட வேண்டிச் சிறைக் காவலன் ஒருவனைத் தன் வழிக்குக் கொண்டு வருகிறான். துவாரகதாசைக் கொல்லும் எண்ணத்துடன் இரவில் அவன் வீட்டுக்குப் போகிறான். ஆனால், அந்த நேரத்தில் பிரபாகர் எதிர்ப்பட, அதனால் துவாரகதாஸ் காப்பாற்றப்படுகிறான்.

பிரபாகரின் கண்ணியத்தை உணர்ந்துகொண்ட துவாரகதாஸ் தன் பாவங்களுக்காக வருந்துகிறான். பலகோடி மதிப்புடைய தன் சொத்துக்களைப் பிரபாகருக்கு வைத்து, தராதரமில்லாத அவனுடைய மகனுக்கு குசுமைக் கொடுப்பதற்கு அவனை இணங்க வைக்கிறான். உள்ளபடியே குசும் இணங்குவான் என்று தானே கருதிக் கொள்ளுகிறான். உலகத்தார் பார்வையில் தனக்கு மனைவியானவளை, அதனால் சுபாஷிக்கு மாற்றாந்தாய் ஆன ஒருத்தியைத் தன் மகன் மணப்பதுபற்றிப் பிரபாகர் கிலேசம் கொள்ளவில்லை.

கலைஞன் விழுமிய மனிதனாக இருக்க வேண்டுமென்று இச்சந்தர்ப்பத்தில் நானக்சிங் கூறுகிறார். கலைஞனின் ஆன்மா, உலகியல் நிலையின்று விடுபட்டு மேம்பட்டுயர்ந்து ஞானியின் நிலையை எட்டாதவரை கலைஞன் என்ற சொல்லுக்குரிய நேரிய கலைஞனாக அவன் இருக்கமாட்டான். அத்தகைய நிறைநிலை உற்ற கலைஞனின் ஒவ்வொரு சொல்லும் பார்வையும் இராமனுடைய அம்புபோல் ஆற்றல் மிக்கனவாய் இருக்கும். பிரபாகரன் செலுத்திய அம்பு துவாரகதாஸின் இயல்புக்கேற்ப அவனை வீழ்த்தியிருததல் கூடும். சுதாவுக்கும் ஷஷிக்கும் அடுத்து என்ன நடந்தது என்பது பற்றி நாவல் ஒன்றும் கூறவில்லை.

1951—இல் வெளியான கடிஹோய் படங் [பறிபோன படடம்]

எனபதில் பெண்ணை ஆண்பறக்க விடும் பட்டத்திற்கு ஒப்பிடுகிறார். இநதப பட்டத்திற்குரிய மூன்று சூழல்களை, கேசரி, சம்பலி, காமினி என்ற மூன்று பெண்களின் வடிவததில் காட்டுகிறார். கேசரி நடுவானிலிருந்து அறுந்து விழுந்து விடும் பட்டம்; பட்டம் திருடுவோர் கையில் விழுந்து விடுகிறாள். அதாவது விலைப்பெண்ணாக மாறுகிறாள். சம்பலி இன்னொரு வகைப் பட்டம். அஸ்ஸாமிலிருந்து வந்த தோட்டக்காரனின் மகள். தந்தைக்கு வேலை கொடுத்த குடும்பத்தாரின் மகன் சுக்பிர் என்பவனை அவள் காதலிக்கிறாள். அவனும் அவள் அன்பிற்கு ஈடுகொடுக்கிறான். எனினும் அவனுடைய பெற்றோர் அவனை மணப்பதற்கு அனுமதிக்கவில்லை. அவன் பிறந்த வீட்டை விட்டு வெளியேறி அமிர்தசரஸ் போகிறான். அங்கே எழுத்தாளனாக—பாடலாசிரியனாகப் பலர் அறிந்த நிலை உறுகிறான். காதலில் ஏமாற்றமடைந்த சம்பிலியைக் காசநோய் பீடிக்கிறது. அவள் தந்தை, பீகானீரில் ஒரு வறட்சியான சீதோஷ்ண நிலை உள்ள கிராமத்திற்கு அழைத்துச் செல்கிறார். கொஞ்ச காலத்திற்குப் பிறகு, சுக்பிர் இதைக் கேள்விப்பட்டு, காமினியின் தந்தை, தன்னினும் வயதில் மூத்த நண்பர் கோசல் சந்துடன் சென்று சம்பிலியை அமிர்தசரஸுக்கு அழைத்து வருகிறான். இவ்வாறு சம்பிலி வலுவான நூலுடன் இணைந்த பட்டமாக உள்ளாள் தன் காதலாகிய நூல் தன்னைக் கட்டிக் காப்பதால் அவள் தன்னை இழக்கவில்லை.

ஆனால், நாவலில், கதாநாயகி சாமினிதான் முற்றிலும் வேறுபட்ட ஒருவகைப்பட்டம். அது வானத்தில் தானாகவே பறக்கக் கூடிய பட்டம். பிரிட்ஜ்மோகன் என்பவனை மணக்கிறாள்; அவன் சில ஆண்டுகள் அவளை மகிழ்ச்சியாக வைத்திருக்கிறான். ஆனால், இரண்டு பிள்ளைகளுக்குத் தாயான பிறகு, பிரிட்ஜ் மோகனிடமிருந்த கவர்ச்சி போய்விடுகிறது. முன்னர்க்கூறிய கேசரியின் காதலன் ஆகிறான் அவன். கேசரி கருவுற்ற நிலையில், கருச்சிதைவு செய்துகொள்ளுமாறு வேண்டுகிறான். அது போலீசுக்குத் தெரிய வருகிறது. அதிலிருந்து தப்புவதற்காக பிரிட்ஜ் மோகன் காமினியின் நகைகளைக் கேட்கிறான். அவள் மறுத்ததால், வெளியேற்றப்படுகிறாள்.

காமினி தன் அப்பாவிடம போகிறாள். அவர் சுக்பிரின் பக்கத்து வீட்டுக்காரர், அவளும் சுக்பிரும் நட்புரிமையால் அன்பு

பூணுகிறார்கள். சுக்பிரை முன் மாதிரியாகக் கொண்டு, எழுத்தாளராகவும், பாடகியாகவும் புகழ் பெறுகிறாள். பிறகு படத்துறையில் செல்கிறாள். நல்ல நடிகையாகிறாள். அதே சமயம் எழுத்தும் பாட்டும் தொடர்கின்றன. ஏராளமாகப் பணம் சம்பாதித்து பம்பாயில் மலபார் ஹில்லில் வீடுவாங்கிக் குடிபோகிறாள். சுக்பிரின் செல்வாக்கினால் பிரிட்ஜ் மோகன் தன் வழிகளை மாற்றிக் கொள்ளுகிறான். தொழிலாளர் தலைவன் ஆகிறான்; காமினியின் மன்னிப்பையும் பெறுகிறான்.

படத்துறைக்குச் சென்றது பணம் திரட்டுவதற்காக அல்ல என்று காமினி தெளிவுபடுத்துகிறாள். நம் சமுதாயத்திலுள்ள ஏராளமான பெண்களின் நலம் கருதித் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள விரும்புகிறாள் அவள். தார்மீக நோக்கு மட்டும் போதாது; முழுப்புரட்சி தேவை என்று சுக்பீர் காமினிக்குக் கூறுகிறான். சம்பிலி தற்போதைய சூழ்நிலையை விளக்குகிறாள். சுதந்திரத்திற்கு முன்னர் நாட்டை ஆங்கிலேயர்கள் ஆண்டனர் என்கிறாள். "அவர்கள் இங்கே கொள்ளையடிக்கத்தான் வந்தார்கள். இதை அவர்கள் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுது, அரசாங்கத்தின் கடிவாளம் நம் கையில் இருப்பதால், சுரண்டலைத் தீர்க்க ஒரு வழி கண்டிருக்க வேண்டும் ஆனால், இன்னொருபுறம் சுரண்டல் அதிகமாயிருக்கிறது. புதிய ஆளும் வர்க்கத்தார் மக்களின் கஷ்டங்களை முடிவுக்குக் கொண்டு வருவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அவர்கள் சுரண்டல்காரர்களுக்கு ஒப்பந்ததாரர்களாகவும் ஏஜண்டுகளாகவும் ஆகிவிட்டனர்.

காமினி பெரிதும் தெளிவுற்று, தொழிலாளர் குடியிருப்பில் வாழ்வது என்று சிந்திக்கத் தொடங்குகிறாள். அவர்களுடைய வாழ்க்கைப் போராட்டங்களைத்தன் படங்களில் சித்தரிக்கிறாள். இதற்கிடையே ஒருவர்க்கொருவர் அனுசரணையாகி அவளும் பிரிஜ்மோகனும் மீண்டும் ஒன்று படுகின்றனர்.

நானக்சிங்கின் தத்துவத்திற்கேற்ப, காமினிக்கு வன்முறையான புரட்சியில் நம்பிக்கை இல்லை. அவள் சுக்பிரிடம் கூறுகிறாள்: "வேண்டுமென்றே கலவரம் செய்பவர்களையும் குண்டு வீசுபவர்களையும் பற்றிப் பேசுகிறாயே அவர்கள்தான் மக்களின் எதிரிகள் என்று நிரூபிக்கிறார்கள். உண்மையான புரட்சிக்காரன்

சாதாரண மனிதனை என்ன, ஒரு எறும்பைக்கூடக் கொல்லமாட்டான்".

தம்காலக் கோளுக்கு ஏற்ப, நிதர்சனமாக, சோஷலிசத்தையே தம் லட்சியமாக்கினார் நானக்சிங், ஆனால், காந்தியச் செல்வாக்கினால், அகிம்சைப்புரட்சியின் ஆதரவாளராக உள்ளார் அவர்.

சுமன்காந்தாவில், கடிதம் எழுதும் முறையைப் பயன்படுத்தியுள்ளார் நானக்சிங். இரண்டு தோழிகள் சுமனும் காந்தாவும் ஒருவருக்கொருவர் எழுதும் கடிதங்களாக முழுக்கதையும் எழுதப்பட்டுள்ளது.

சுமன் நடுநிலைப்பள்ளிப் படிப்பை முடித்த தருணத்திலேயே கங்கிராவில் உள்ள ராம்பிரகாஷ் என்பனுக்கு மனைவியாகிறாள். நானக்சிங்கின் நாவல்களில் வரும் பிற கணவன்மார்களைப்போல் ராம்பிரகாஷ் தீயவனாக மாறுகிறான். முன்னமேயே மோகினி என்னும் பெண்ணைக் கெடுத்து அவளை மணந்து கொள்ள மறுத்தவன். மோகினி வெறொருவனுக்குத் திருமணமானபோது, அவனை கொன்றொழித்தவன் ராம் பிரகாஷ். இடையில், மோகினி கருத்தரிக்கச் செய்து, அவளுடைய தங்கை இந்திராவையும் தனக்குரிய ஆசைநாயகியாக ஆக்கிக் கொள்வதாக அச்சுறுத்துகிறான்.

சுமனின் உதவியால் மோகினியின் சகோதரன் சீதாராம் இந்திராவைத் திருமணம் செய்து கொடுத்துவிடுகிறான். சுமன் மூலம், மோகினி விதவை அத்தை ஒருத்தியிடம் சென்று சேர்கிறாள். அங்கு, ராம்பிரகாஷின் பெண் மகவைப் பெற்றெடுக்கிறாள்.

இவற்றையெல்லாம் தெரிந்து கொண்டதும், ராம்பிரகாஷ் சுமனுக்கு எதிராக ஆதாரமற்ற குற்றச்சாட்டுகளை ஒன்றன் பின் ஒன்றாக அடுக்கி அவளைக் கொடுமைப்படுத்தத் தொடங்குகிறான். சுமனுடைய இக்கட்டான நிலையைக் காந்தா தெரிந்து கொண்டபோது, கணவனின் இழிதகைமையை அஞ்சாமையோடு எதிர்த்து நிற்குமாறு நம்பிக்கையூட்டி அவளுக்கு எழுதுகிறாள். இந்த அறைகூவல் பயன்தருகிறது. சுமன் முன்பு கொண்டிருந்த அச்சத்தை விடுகிறாள்.

காந்தாவின் சகோதரன் பிரேம் ப்ரகாஷ் காந்தாவின் நிலைமையைப் புரிந்து கொண்டு, கங்க்ராவுக்கு வந்து தன்னுடைய மேஜிஸ்ட்ரேட் நண்பன் துளசிதாஸைச் சந்திக்கிறான். ராம் பிரகாஷ் கைது செய்யப்பெற்றுச் சிறைக்கு அனுப்பப்படுகிறான். ராம் பிரகாஷ் தன் குற்றத்தை உணரும் நிலை ஏற்படுகிறது. தன் சொத்தில் பாதியான ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் ரூபாய் மதிப்புடைய பகுதியை சுமன் பெயருக்கு மாற்றித் தருகிறான்.

மோகினியை மணந்து கொள்வதன் மூலம், அவளுக்குப் பாதுகாவல் தர பிரேம் ப்ரகாஷ் முன் வருகிறான். ராம் பிரகாஷின் மாணவன் ஜைனேந்திரன் என்பவனுக்கு மணமாகிறாள் காந்தா. ராம்பிரகாஷ் சுமனிடம் மன்னிப்புக்கோரி நல்வழிக்குத் திரும்புகிறான்.

ஆடம்கோர் [மனிதனைத் தின்பவன்] என்னும் நாவலில், இந்தியாவில் உள்ள, நிலப்பிரபுத்துவம் முதலாளித்துவம் சோஷலிசம் ஆகியவற்றுக்கிடையே உள்ள முரண்பாடுகளைத் தமக்கே உரிய முறையில் நானக்சிங் சித்தரிக்கிறார். பிரிட் நகரில் வாழ்ந்த காலத்திலேயே அவருள் சோஷலிச விதை முளைவிட்டிருத்தல் கூடும். பியார் கி துனியா, கரிப் கி துனியா ஆகியவற்றில் சோஷலிசக் குழுவைச் சார்ந்திருந்ததாக அவர் காட்டிக் கொள்ளவில்லை. குருபக்ஷ்சிங்கின் கருத்தாகிய பரஸ்பர அன்பு [சாகிஜ் பிரிட்] என்னும் இனிய அடிப்படையில் தொழில் முதல் முரண்பாட்டைத் தீர்த்து வைப்பதில் அவர் காந்தியத்திற்கும் மேற்பட நின்றார். அவருடைய நோக்கு காந்திய சோஷலிஸ்டினுடைய நோக்கு என்றாலும், வகுப்புவாதம் பற்றிய போரினை, கவனத்தோடு நிகழ்த்துமாறு கனத்த தலைவன் சுக்பிரை அவர் படைத்துள்ளார். 'ஆடம் கோரில்' அவர் இன்னும் உயர்ந்து நிற்கிறார். முன்னுரையில் அவர் எழுகிறார்: "பொருளாதாரச் சமத்துவமின்மையே எல்லா முரண்பாடுகளுக்கும் அடிப்படைக் காரணம். சுரண்டல் நடமாட்டம் உள்ளவரை, உலகின் எப்பகுதியும் அமைதியாக வாழாது."

லூதியானாவில், தொழிற்சாலை ஒனறின சொந்தககாரன் தக்கூர் சிங் குழந்தையில்லாதவன். அவனுடைய வெறி, சிநதாமணியின் வலையில் அவனைச் சிக்க வைக்கிறது. அவளுடைய தந்தை தொழிற்சாலையில் ஒரு பகுதிக்குத் தலைவன. மமதை பிடித்தவன;

தொழிலாளர்களைக் கணடபடி நடத்துகிறான். தனக்கே உரிய காரணஙகளுககாக, அவனைவிட்டொழிக்க வேண்டி, சிங்காராசிங் எனபவனைப பணியில் அமர்த்துகிறான். அவனுடைய கைக்கூலிகள் சிநதாமணியின குடும்பததாரனைவரையும் தீர்த்துவிடுகின்றனர்.

சிங்காராசிங், பாடியாலா மாநிலத்தில் உள்ள குடும்பம் ஒன்றின் வழியில வந்தவன. அவனுடைய தந்தை பூடாசிங்குக்கு இரண்டு மனைவியர். முதல் மனைவிக்கு இரண்டு பையன்கள். இரண்டாவது மனைவிககு ஒருவன், சிங்காராசிங். அவன் மனைவி சுலோசனா பணக்காரக் குடுமபத்திலிருந்து வந்தவள். நிறைய வரதட்சினை கொண்டுவநதிருநதாள். இருவர்க்கும் மணமாகி ஒருமாதங்கூட ஆகியிருக்காது; பூடாசிங் எதிரி ஒருவனால் சுட்டுக் கொலலப்பட்டான. ஒரு கிரிமினல் வழக்கில் எதிரியின் தோழர்களை பூடாசிங் மிரட்டி வைத்திருந்தான். அதன் விளைவாக எல்லோரும் தூக்கில தொங்கினார்கள்.

அந்த நாட்களில் ஹைதராபாத் மாநிலம் ஒழுங்கீனத்தின் இருப்பிடம், ஐந்நூறு கிராமங்களில் நிலத்துக்குரியவர்களின் நிலங்களை உழுதவர்கள் சொந்தமாக்கிக் கொள்ளுமாறு கம்யூனிஸ்டுகள் செய்து வைத்திருந்தனர். ஒழுங்கீனத்தை அடக்குவதற்காக மாநிலம் அமர்த்திய கூடுதல் போலீஸ் படையில் சிங்காராசிங் சேர்ந்திருந்தான். ஒரு நடவடிக்கையில் காயமடைந்து, கால் ஒன்றையும் இழந்ததன் காரணமாக அவனுக்குப் பென்ஷன் தந்து அனுப்பிவிட்டனர். வீட்டில் அவனுடைய ச்கோதரர்கள் அவனுடைய நிலைமையை அந்த அளவு மோசமாக்கினார்கள். அவன் பிழைப்புத்தேடி வீட்டை விட்டு மீண்டும் லூதியானாவில் வரவேண்டியாதாயிற்று. லூதியானாவில் திருட்டு முயற்சிகளில் ஈடுபட்டான். ஒரு சந்தர்பத்தில் கையும் களவுமாக அகப்பட்டு மிக மோசமாக அடிவாங்கினான.

வெட்கத்திற்கு ஆளாகி, சிங்காரா வீடு திரும்பவில்லை. மாலையில நேரங்கழித்து சுலோசனா அவனைத் தேடிச் சென்றாள்; தக்கூர் சிங்கின தத்துப் பிள்ளை பிரிட்பால் சிங் குறுக்கே வந்தான். சுலோசனாவுடன் சேர்ந்து அவனும் தேடலானான். சிங்காராசிங்கைத் தேடி எங்கும் காணமாட்டாமையால், தக்கூர்சிங் கைவிட்ட அவனுடைய மனைவி, அமர்கௌர் வீட்டுக்கு அவர்கள் வருகிறார்கள். பிரிட்பால், அதன்பேரில் தக்கூர்சிங்கிடம் சண்டைபோட்டுவிட்டு அவளோடு வாழ்ந்து கொண்டிருந்தான்.

அமர்கௌர் சுலோசனாவிடம் மிக்க இரக்கம் கொண்டு அவ்வப்போது அவளுடைய தேவைகளை வீட்டுக்கு அனுப்புகிறான்.

அமர்கௌரின் மூலமாகத்தான் சிங்காரா சிங் தக்கூரின் ஏவலாளனாக ஆகிறான். சிந்தாமணியைக் கொன்று தீர்த்ததும், தக்கூர் சிங் அவனை செயற்கைக்கால் பொருத்திக் கொள்வதற்காகப் பூனாவுக்கு அனுப்புகிறான்.

ஆனால், செயற்கைக்கால் பொருத்தப்படுவதற்கு முன்னமேயே அவன் பூனாவிலிருந்து திரும்ப அழைக்கப்படுகிறான். குடிபோதையில் முழுகிய நிலையில் தக்கூரின் வெறியைத் திருப்திப்படுத்துவதற்காக, சுலோசனாவை ஒருநாள் இரவு அழைத்து வருகிறான். சுலோசனா உறுதி மிக்கவளாகிறாள். தக்கூர் சிங்கின் ரிவால்வரைப் பிடுங்கிக்கொண்டு அவனை நோக்கிக் குறி வைத்து அவனுடைய குற்றங்களையும் தீய செயல்களையும் ஒத்துக்கொள்ளும்படி செய்கிறாள்.

பிறகு, சுலோசனா சிங்காராசிங்கை ஒரு புரட்சிக்காரனின் இல்லத்திற்கு அழைத்துச் செல்கிறாள். புரட்சிக்காரன் பாரதி, சுலோசனா, பிரிட்பால் மூவரும் சிங்காரசிங்கைத் தம்வயப்படுத்தப் பார்க்கிறார்கள். அவர்கள் முயற்சி ஒன்றும் பயனளிக்கவில்லை. சிங்காரசிங் துப்பாக்கியோடு தன் கிராமம் சென்று தன் சகோதரர்களைக் கொல்கிறான். இறுதியில் தன்னையே சுட்டுக்கொள்கிறான். தக்கூர் கழிவிரக்கமுற்று, தனக்குரிய ஒவ்வொன்றையும் பிரிட்பாலிடம் ஒப்படைக்கிறான். பாரதியின் செல்வாக்கால் பிரிட்பால் வன்முறையைக் கைவிடுவதென உறுதி கூறி அகிம்சை நெறிப் போராட்டத்தை ஏற்கிறான். பிறகு, பிரிட்பால் சுலோசனாவை மணந்து கொள்கிறான்.

இதனோடுகூட, தெலிங்கானா நடவடிக்கை நெறியில் வெகுகால மாய்ப்போராடும் பாரதி, பெரியவர் சுந்தரலாலின் அறிவுரைப்படி, அரசியல் அமைப்புச் சட்டத்திற்குரிய செயல்முறையை ஏற்று, வன்முறையைக் கைவிடுகிறான்.

பின்னால், எழுதப்பட்ட நாவல்கள் நானக்சிங்கின் கலைப்படைப்பில் ஒருவகை வீழ்ச்சியைப் புலப்படுத்துகின்றன. நாசூர் [இடையறாத அல்லல்] என்பதில், விபசாரம் பற்றிய கதைக் கருவைத் திரும்பக் கொணர்கிறார். உடன குடியிருக்கும் சேதுராம் என்பவரின் மனைவி அமாரோவை, வீட்டுக்குச் சொந்தக்காரரின் நணபன் ஒருவன் இக்பால் என்பவனோடு அழைத்துப் போய்விடுகிறான். அவன் பாசனத்துறையில் பணிபுரியும் அதிகாரி. இங்குமங்கும் அலைந்து திரிந்து அவள் விபசாரி ஆகிறாள். ஷில்பாலா என்றொரு பெண்ணைப் பெறுகிறாள். தாய்க்கு ஏற்பட்ட சூழல்களைப் போலவே இவளுக்கும் ஏற்பட்டு அவளைப் போலவே இவளும் விபசாரி ஆகிறாள். சேதுராமின் மூலம் அமாரோவுக்குப் பிறந்த மங்கத்ராம் எங்கெங்கோ திரிந்து விட்டு டேராடூன் வருகிறான்; ஷில்பாலாவை மணக்கிறான். அமாரோ, தன் சகோதரியின் கிராமத்துக்குப்போக நேரிடுகிறது. அங்கே மங்கத்ராமைச் சந்திக்கிறான். தன் ஒன்றுவிட்ட சகோதரியையே மணந்துகொண்டது தெரிந்ததும் மங்கத்ராம் பைத்தியம் பிடித்தவனாகிறான். பிற்போக்காளர்கள் மரபுவழி இயங்குவோர் ஆகியோரின் பிறப்புரிமை பற்றிய கருத்தை வினவும் வகையில் அஞ்சாமைமிக்க குறிப்பு ஒன்றை இந்த நாவலின் முன்னுரையில் நானக்சிங் எடுத்துரைக்கிறார்.

சங்கம் [சந்திப்பு] என்னும் நாவலில் மரபுவழிப் பண்பாட்டுக்குக் குந்தகமாகும் வகையில் வேறொரு கதைக் கருவை எடுத்துக்கொள்கிறார். லலிதாவும் தாரிகாவும் சகோதரிகள். லலிதா குந்தன்லால் என்னும் ஒரு பணக்கார வணிகனுக்கு மனைவியாகிறாள். தாரிகா கணிசமான ஊதியம் பெறும் பால்ராம் என்னும் அரசாங்க ஊழியனை மணக்கிறாள். ஒருமுறை டெல்லிக்கு வந்திருந்தபோது குந்தன்லால் தாரிகாவைக் கெடுத்துவிடுகிறான். அதனால் லலிதா கணவனைப் பிரிகிறாள். வாழ்வில் வெற்றிபெற இயலாத கணவன் பால்ராஜிடம் மிகவும் வெறுப்புற்ற தாரிகா, இவ்வகையில் வெறுப்புக் கொள்ளவில்லை. குந்தன்லாலைப் பழிவாங்கும் பொருட்டாகவும், பால்ராஜ் தற்கொலை செய்துகொள்வது என்று உறுதி செய்து தனக்குக் குறிப்பிட்டு கடிதம் எழுதியிருந்தாலும் லலிதா பால்ராஜுடனும் சென்று விடுகிறாள். கொழுந்தியோடு உடலுறவு கொள்வதைப் பஞ்சாபில் தகாத செயலாகக் கொள்வதில்லை.

தனக்குத்தானே நியாயப்படுத்திக் கொள்ளும் வகையில் நானக்சிங் எழுதுகிறார்: "பழிவாங்கும் வன்கண்மையின்கீழ், ஒழுங்குக்கும் ஒழுங்கின்மைக்கும் முறைக்கும் முறைகேட்டிற்கும் இடையே இனங்காண்பது அரிது. தன் வழியில் எதிர்ப்படும் எந்த ஒன்றையும் சிதைத்தொழிப்பதே பழியின் இயல்பாகும். இந்தக் கருத்து, பலருடைய வாழ்க்கையில், பாறை மீது மோதித் தூள் தூளாகும் நிலையை உண்டாக்குகிறது. சில சமயங்களில் அது வெற்றி தரலாம். எப்படி இருந்தாலும், இத்தகைய கருத்திற்கு இடந்தரும் நிலைமைகளை நாம் குருட்டுத்தனமாக ஏற்றுக்கொள்ள இயலாது. இவ்வகை நோக்கில், லலிதாவின் உள்ளத்தில் எழுந்த காழ்ப்பை முறையற்றதாகவும் சமூக விரோதப் போக்காகவும் கூறலாம். ஆனால், லலிதாவின் நடத்தையைத் தொலை நோக்கோடு பரிவுணர்ச்சி கொண்டு பார்க்கும்போது அவள் குற்றமற்றவளாகத்தான் தோன்றுவாள்."

பஞ்சார் [வறண்ட நிலம்] பூஜாரி [பூசாரி] என்னும் இரண்டு நாவல்களில், சுதந்திரத்திற்கு முன்னால் இருந்த பழைய இந்து முஸ்லிம் பூசலை, சுதந்திரம் பெற்ற, பத்தாண்டுகளில் இந்து சீக் பூசலாகக் கொண்டு பின்னணி அமைக்கிறார் நானக்சிங். அவர் எழுதுகிறார் : நாற்பதாண்டுக் காலகட்டத்திற்கும் பிறகு, அதே போக்கு திரும்பி வந்ததாக நான் காணுகிறேன். முப்பதாண்டுகளுக்கு முன்னர், 1947—இன் மீது என் கவனம் நின்று கொண்டிருக்கிறது. சிதைந்து மக்கிப்போன பிணம் தன் புதை குழியிலிருந்து வெளிவந்து தற்காலத்தில் வாழும் உடம்பில் தொத்திக் கொண்டிருக்கிறது.

பஞ்சார் நாவலின் கதை 1955—ஆம் ஆண்டு நிகழ்ச்சிகளோடு தொடர்புடையது. தூய பஞ்சாப் [அதாவது பஞ்சாப் மொழி பேசும் பகுதி அனைத்தும் அதில் அடங்கும்] மகா பஞ்சாப் [பஞ்சாபிய மொழி பரவலாக வழங்கும் ஹரியானா டெல்லி மக்களைக் கொண்டது] பற்றி பரவலாக முரண்பட்ட கருத்துக்கள் நிலவிய காலம் அது. ஆதரவாளர்களில் ஒரு சாரார் ஹரியானா மொழி பஞ்சாப் மொழியின் ஒரு கிளை என்றனர். இன்னொரு சாரார், இரண்டுமே இந்தி மொழியின் கிளை மொழிகள் என்றனர். கதைத் தலைவன் பத்ரிநாத் மகா பஞ்சாப் ஆதரவாளன். எழுத்தாளன். தன் முயற்சிகள் எல்லாவற்றாலும் தன் மக்களின் திருமணத்திற்குரிய அவ்வளவு பணம் அவனால் சேர்க்கமுடியவில்லை. இந்தி மொழி பேசுவோர் வகுப்புணர்வையும் மகா பஞ்சாபையும் ஆதரித்த ஒரு பத்திரிகையில்

ஆசிரியர் பணி அவனுக்குக் கிடைக்கிறது. பத்திரிகைக்குச் சொந்தக்காரர் குபான் வேண்டிய அளவு பணம் சேர்க்கிறார். ஆனால், பத்ரிநாத் தன் இருநூற்றைம்பது ரூபாய்ச் சம்பளத்தில் சிறிதும் மிச்சம் பிடிக்க முடியவில்லை. மகள் மேனகாவின் திருமண நிச்சயத்தார்த்தத்திற்காக ஒரு நாள் பத்திரிகை வருவாயிலிருந்து கொஞ்சம் பணத்தைக் கள்ளத்தனமாக எடுத்துக் கொள்கிறான். இதனால் பிடிபட்டு சிறைக்கு அனுப்பப்படுகிறான்.

இளம் பஞ்சாபி எழுத்தாளன் தீபக்கின் நவபாரத் [புதிய இந்தியா] என்னும் புத்தகத்தை ஒரு காலத்தில் கடுமையாக விமர்சனம் செய்தவன் பத்ரிநாத். இன்னொருபுறம் தீபக்கிடம் ஈடுபாடு கொண்டவள் மேனகா. அவனுடைய தங்கை வினோதுக்குத் தோழி; இருவரும் ஒரே பள்ளியில் பயின்றவர்கள். தீபக் ஜாமீனில் வெளிக்கொணர முன்வந்தபோது பத்ரிநாத் அதை மறுக்கிறான்.

மேனகாவும், தீபக்கும் மணந்துகொள்வதென உறுதி பூணுகின்றனர். தன் முடிவைத் தாயினிடம் மனந்திறந்து கூறியபோது அவள் மகிழ்ச்சியடைகிறாள். காரணம், மேனகாவுக்கு முன்னமே உறுதி செய்யப்பெற்ற பையன், மேனகாவுக்குத் தோழியான தாரிகாவை அவன் பெற்றோர் ஏற்பாட்டின் மூலம் மணந்து கொண்டதுதான். சிறையிலிருந்த தந்தைக்கு இந்த நிகழ்ச்சிகளை விளக்கி எழுதுகிறாள். இந்த உண்மை தெரிந்து மகிழ்ச்சியுற்ற பத்ரிநாத் தன் ஒப்புதலை நல்குகிறான்.

பஞ்சாபி பேசும் பகுதி, இந்தி பேசும் பகுதி என்று இரண்டு பகுதிகளாகப் பஞ்சாப் பிரிவினையுற்ற போது, டுபானின் தொழில் பறிபோகிறது. அவன் பஞ்சாபைவிட்டு வெளியேறுகிறான். பத்ரிநாத், தன் குற்றத்திற்குப் போதிய ஆதாரம் இன்மையால், சிறையிலிருந்து வெளியேறுகிறான்.

இந்த நிலையில், தீபக் பார்வை இழந்த தன் அன்னையை பம்பாயிலுள்ள கண் ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போகிறான். தாயும் சகோதரனும் ஊரில்லாமையால், தனியே இருந்த வினோதுடன் வாழ்வதற்காக மேனகா வருகிறாள். அந்த வீட்டில் காய்ந்து உலர்ந்துபோன மல்பெரி புதர் ஒன்று உள்ளது. மேனகா நாள்தோறும் அதற்கு நான்கு வாளித் தண்ணீர் வார்க்கிறாள். அதன் விளைவால் அது மீண்டும் புத்துயிர் பெறுகிறது. அதே சமயத்தில் தீபக்கின்

அன்னை கண் பார்வை பெறுகிறாள். இறுதியில் தீபக்கும் மேனகாவும் திருமணத்தில் ஒன்று சேர்கிறார்கள்.

பூஜாரி என்னும் நாவலில் கதைத் தலைவர் ராம்பிரகாஷ் தமது பெஷாவர் ஞானகுரு கியானி பாங்சிங்கை அடியொற்றி அறிமுகப்படுத்தப்படுகிறார். புகழ்மிக்க இசைக்கலைஞர் விஷ்ணுதிகம்பர் 1931—இல் அமிர்தசரஸ் வருகிறார். பண்டித ராம்பிரகாஷ் அவருடைய சீடராகிறார். குருநாதரின் அறிவுரைக் கேற்ப சமயத்தால் பிளவு பட்டிருந்த பஞ்சாப் மக்களை இசைவாயிலாகப் பண்பாடு மிக்க சமுதாயமாக ஒன்றுபடுத்துதற்கு முயலும் பொறுப்பை ஏற்கிறார். குருபாணிவகை இடையே இசையின் ஆதர்சம் என்று அறிவுரை பகர்கிறார் விஷ்ணு திகம்பர். பண்டித ராம்பிரகாஷும் குருபாணியில் ஆழ்ந்த ஈடுபாடு உடையவராகிறார்.

1947 கலவரங்களின்போது, சுனிதா என்னும் பெண்ணை ராம் பிரகாஷ் பகத் சந்திக்கிறார். தமக்கு அண்டை வீட்டுக்காரியான அவளைத் தீயோர் சிலர் உயிர்போகுமளவிற்கு அடித்துப்போட்டு விடுகின்றனர். அவர் அவளைத் தமது வீட்டிற்குக் கொண்டு வருகிறார். அவருடைய ஆழ்ந்த பராமரிப்பினாலும் குருபாணி இசையின் பயனாலும் அந்தப் பெண் உடல்நலமும் உள்ள நலமும் திரும்பப் பெறுகிறாள்.

ஜீலத்தில் உள்ள பெரிய பழத்தோட்டங்களின் சொந்தக்காரர் ராம்சந்தின் மகள் சுனிதா. 1947 கலவரங்களின்போது, ஜீலத்திலுள்ள முஸ்லிம் பழத்தோட்டச் சொந்தக்காரர் ஒருவர் அவளையும் அவள் தந்தையையும் உடைமைகளோடும் நகைகளோடும் அகதிகள் முகாம் ஒன்றிற்கு அழைத்து வந்திருந்தார். அங்கிருந்து இருவரும் அமிர்தசரஸ் வந்திருந்திருந்தனர். அங்கிருந்த சில முஸ்லிம்களைக் காப்பாற்ற முயன்றபோது ராம்சந்த் கலகக்காரர்களால் கொல்லப்பட்டார். அதன் விளைவாக அந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்துவிடுகிறது.

1957—இல் சுனிதா பதினெட்டு வயதடைந்தபோது பகத்ராம் அவளுடைய திருமணம் பற்றிக் கவலைப்படலானார். இங்கே சன்னன்சிங் என்னும் இளைஞனொருவனை நானக்சிங் அறிமுகப்படுத்துகிறார். சுனிதாவின் கதையைவிட அவனுடைய கதை இன்னும் விசித்திரமானது. அமிர்தசரஸ் மாவட்டத்தில் உள்ள வால்டோஹாவைச் சார்ந்த கடைக்காரர் சங்கத்ராம். அவரும் அவர்

மனைவி ராதாவும் மறைந்தபோது சன்னத் சின்னஞ்சிறு பையன், சங்கத்ராமின் சீக்கிய நண்பர் நகர்சிங். அவருடைய மனைவி குரோ. இருவரும் குழந்தைப்பேறு இல்லாதவர்கள். சன்னனை வளர்த்து வருகின்றனர். சன்னன்சிங் மெட்ரிகுலேஷன் பாசாகி வேலை பெறுவதில் தவறுகிறான். கொஞ்சநாள் பால்காரனாக இருக்கிறான். ஆனால், இது காலந்தள்ளுவதற்குப் போதுமானதாக இல்லை. பிறகு, தீயவர்களின் கூட்டுறவால் கள்ளச்சாராயம் காய்ச்சி விற்கிறான். ஒருமுறை பிடிபடுகிறான். ஆனால் சிறை செல்லாமல் எப்படியோ தப்புகிறான்.

பிறகு பிரிஜிந்தர்சிங் என்னும் நண்பனின் உதவிநாடி அமிர்தசரஸ் போகிறான். பிரிஜிந்தரின் தந்தை கள்ளக்கடத்தலால் பெருஞ்செல்வரானவர். தேர்தலில் சட்டசபைக்குப் போட்டிபோடுகிறார். பிரிஜிந்தர்சிங் சன்னன்சிங்கைத் தேர்தல் ஊழியனாகப் பணி அமர்த்தி ஐநூறு ருபாய் முன்பணமும் தருகிறான். தேர்தலில இநது—சீக்கிய கலவரம் வன்முறையாக உருக்கொள்கிறது. சன்னன்சிங் ஒருநாள் பகத்ராம்சிங்கைக் குண்டாந்தடியால் தாக்கிக் காயப்படுத்திவிடுகிறான். சிலநாட்களுக்குப் பிறகு, சில இந்து இளைஞர்கள் கையால் சன்னன்சிங்குக்கு அதே மாதிரி மரியாதை கிடைக்கிறது. ஆபத்தான நிலையில், வேறு எங்கும் போகாமல் பகத் ராம்பிரகாஷ் வீட்டிற்கே கொண்டுவரப்படுகிறான். அங்கு வேண்டிய பராமரிப்புப் பெற்று நலமும் பெறுகிறான். சன்னன்சிங்கின் வளர்ப்புப் பெற்றோர் அந்த நிகழ்ச்சியில் பங்கு கொள்ளுகின்றனர். அந்த நேரத்திலேயே பகத்ராம் பிரகாஷ் இறுதி மூச்சை விடுகிறார்.

ஆஸ்தீக் நாஸ்திக் [ஆத்திகர் நாத்திகர்] என்னும் நாவலில் நன்மை தீமைகள் கடவுள் நம்பிக்கை, கடவுளிடத்து நம்பிக்கை இன்மை ஆகியவற்றோடு தொடர்புடையன அல்ல எனறு புலப்படுத்துகிறார் நானக்சிங்.

இந்நாவலில் வரும் ஆத்திகர்கள் இருவகையினர். ஸ்வரண்சிங் தொழிற்சாலை அதிபர்; செல்வர், ஒரு பையன் பிறப்பதற்கு முன்னால் அவருக்கு மூன்று பெண்கள். இந்த அதிர்ஷ்டநிலை சாந்த் பரமிந்தர் சிங்கின் அருளால் வாய்த்தது என்று அவரும் அவருடைய குடும்பத்தாரும் நம்புகின்றனர்.

சந்த் பரமிந்தர்சிங் உண்பதையேவிட்டுவிட்டவன்போல் நடித்து, ஆஸ்ரமமோ அல்லது தர்மஸ்தாபனமோ தொடங்கலாம் என்று மக்களிடம் ஏராளமான பணம் திரட்டுகிறான். ஆனால், வேலைக்காரப்பெண் அம்போவுடன் கள்ளத்தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறான். இத்தகைய செயல்களுக்காக, மக்கள் ஆங்காங்கு சந்த் பரமிந்தர்சிங்கைக் கண்டித்து சுவரொட்டிகளை அமைக்கின்றனர். சுவரண்சிங் அவர்களுக்கு எதிராக, வகைவகையான சுவரொட்டிகளை அமைத்து பதில் தருகிறான். ஆனால், பின்னால் சாந்த் பரமிந்தர்சிங், சுவரண்சிங் கஷ்ட தசையில் இருந்தபோது அவனுக்கு உதவத் தவறிய நிலையில் அவனும் பரமிந்தர்சிங்குக்கு எதிராகத் திரும்புகிறான்.

ஸ்வரண்சிங் நண்பன் ராஜ்சிங் என்பவன் [வங்கியில்] குமாஸ்தாவாகப் பணிபுரிபவன். அவன் உள்ளபடியே நல்லவகையில் கடவுள் நம்பிக்கை உடையவன். ஒருநாள் இரவு, சாந்தி பரமிந்தர்சிங்கின் மூலம் கருவுற்றதை உணர்ந்து குன்றிலிருந்து குதித்துத் தற்கொலை புரிந்துகொள்ள முயன்ற அம்போவைத் தடுத்துக் காப்பாற்றுகிறான். சுவரண்சிங்குடன் விவாதம் செய்துகொண்டிருந்தபோது, பேச்சுக்கு நடுவில் அவன் வாதிடுகிறான்; "சாந்த் பரமிந்தர்சிங்கின் தர்ம ஸ்தாபனத்திற்காக உன் சொந்த சௌகரியங்களையும் இன்பங்களையும் பொருட்படுத்தவில்லை. பெருமைக்குரிய பல காரியங்கள் செய்திருக்கிறாய் என்பதில் சந்தேகம் இல்லை. பக்ராநங்கல் அணைத்திட்டம் முன்பு வறண்டு கிடந்த கோடி ஏக்கர் நிலத்தை நீர்ப்பாசன வசதிக்குக் கொண்டு வந்திருக்கிறது. இரண்டு கோடி கிலோவாட் மின்சாரமும் கொடுக்கிறது. அதற்காகப்பல ஆண்டுகள் உழைப்பை அர்ப்பணித்த அந்த எஞ்ஜினியர்—உலோகாயதவாதி, நாத்திகர்—அவரோடு நீ உன்னை எப்படி ஒப்பிட்டுக் கொள்ளுகிறாய்? இவ்வாறு கடவுள் நம்பிக்கையில்லாத ஒருவரின் உழைப்பின் விளைவால், நூறாயிரக்கணக்கான இந்திய மக்கட்கு உணவு தானியம் கிடைக்கிறது. ஆயிரக்கணக்கான கிராமங்களும் நகரங்களும் மின்சாரத்தால் ஒளி பெறுகின்றன. எண்ணற்ற தொழிற்சாலைகள் உருவாகி, இதற்கு முன்பு வேலையில்லாமலிருந்த ஆயிரக் கணக்கான பேர்களுக்கு வேலைகிடைக்கிறது. இப்பொழுது, உன்னைப்போலக் கடவுள் நம்பிக்கை உடைய ஒருவரை நம்பிக்கையில்லாதவர் என்று நீ குறிப்பிடும் ஒருவரோடு ஒப்பிடு. யாருடைய பக்திக்குக் கடவுளின் சந்நிதியில் மரியாதை கிடைக்கும்

என்று கூறு." இங்கு, விஞ்ஞானிகள் எல்லோரும் கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் என்று நானக்சிங் கருதுகிறார்.

சாளவா [சஞ்சலப்படுத்துவோன்] என்பது ஒரு தச்சனின் கதை. பஜன்சிங், பழையகாலத்துப் புராணங்களில் வரும் பேராசைக்காரனைப்போல், பணக்காரனாக வேண்டுமென்று ஆசைப்பட்டவன், ஹார்பன்ஸ் ஜஸ்வந்த் என்று இரண்டு பிள்ளைகள் அவனுக்கு. நடுவுநிலைப் பள்ளித் தேர்வு முடிந்ததும் ஹார்பன்ஸ், செங்கல் காளவாய் ஒன்றில், கணக்கப்பிள்ளை—குமாஸ்தா வேலையில் அமர்கிறான். அனுப்சிங்கின் ஒரே மகள் நரீந்தரை மணந்து கொண்டு, மாமனார் வீட்டில், வாழப் போகிறான். அவனுடைய பெற்றோர்களும் ஹார் பன்னாலைப் போலவே, மிக அதிகமாக எதிர்பார்க்கின்றனர். அனுப்சிங்கின் மனைவிக்குப் பையன் பிறக்கிறான். அவர்கள் எண்ணமெல்லாம் சிதைந்து போகிறது. மாமனார் வீட்டில் கணிசமான அளவு நகைகளையும் மற்ற விலைஉயர்ந்த பொருள்களையும் திருடிக்கொண்டு அங்கிருந்து வெளியேறுகிறான்.

இன்னொருபிள்ளை ஜஸ்வந்த் கலைத்திறன் மிக்க தந்த வேலை செய்பவன். பொருட்காட்சிகளில் அவனுடைய வேலைக்குப் பரிசுகளும் கிடைக்கின்றன. அவனுடைய நண்பன் ராம் பிரகாஷ் தந்தவேலை ஊழியர் சங்கம் ஒன்றைத் திறம்பட நிறுவுகிறான். பஜன்சிங் இப்போது, தன் ஆசைகளை, ஜஸ்வந்த் பக்கம் திருப்புகிறான். அவனிடமிருந்து பண உதவி எதிர்பார்த்து வீடு கட்டத் தொடங்குகிறான். ஆனால், ஜஸ்வந்த் தந்தையின் எதிர்ப்பார்ப்புக்கு ஈடுகொடுக்க முன்வரவில்லை. தொல்லைகளுக்கிடையே, பஜன்சிங் கள்ளக்கடத்தலில் ஈடுபட்டுக் கொஞ்சம் சௌகரியம் அடைகிறான்.

மாமனாரிடம் நன்றி கெட்டிருந்ததைப் போலவே தகப்பனிடமும் நன்றி கெட்டவனாகிறான் ஹார்பன்சிங். நேர்மையின் தூய்மையில் கருத்தில்லாமல் பொறுமையே காரணமாக, பஜன்சிங்கிற்கு எதிராகப் போலீசில் தகவல் கொடுக்கிறான். கள்ளக்கடத்தலில் சம்பாதித்ததெல்லாம் பஜன்சிங்கிடமிருந்து பறிபோகின்றன. அதிர்ச்சி தாங்காமல் பஜன்சிங் உயிர்விடுகிறான். இளையவன் ஜஸ்வந்த், தான் பிழைப்பு நடத்தும் டெல்லிக்கு வந்து தன்னோடு இருக்குமாறு தன்தாயை அழைத்துக் கொள்கிறான்.

இக்மியான் டு தால்வரன் [ஒரே உறையில் இரண்டு வாள்கள்] என்பதனுள், வரலாற்று நாவல் எழுதுவதில் தம் ஆற்றலைத் திருப்புகிறார். கர்தர்சிங் சரபாவைக் கதைத் தலைவனாகக் கொள்கிறார். கற்பனைக் கதைத்தலைவி ஒருத்தியையும் அவர்க்கு நல்குகிறார். கர்தர்சிங் சரபாவை மையமிட்டு நிகழும் நிகழ்ச்சிகள் பல வரலாற்றுத் தொடர்பானவை. கர்த்தர்சிங் சரபா வாழ்வில் நிகழ்ந்தனவாகப் பல கற்பனை நிகழ்சிகளையும் படைக்கிறார் நானக்சிங். சிறைத்தண்டனைக்குள்ளாகிய கற்பனைத் தலைவியைத் திருமணம் புரிந்துகொள்ளுமாறும் செய்கிறார் அவர்.

எனினும், நானக்சிங் கதையை உணர்வாற்றல் மிக்கதாகப் படைத்துள்ளார். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கில ஆட்சியில் மேற்கு பஞ்சாபில் உள்ள கிராமப்புறத்து வாழ்க்கையை அப்படியே தத்ரூபமாகப் படைத்துள்ளது. மேலும் பாராட்டத்தக்கதாய் உள்ளது.

சுக்தேவ் சிங் சோதியின் குடும்பத்தை மையமாகக் கொண்டு கதை நிகழ்கிறது. உணர்வு பூர்வமாகவும், செயற்பாங்காகவும் நிலப்பிரபுத்துவக் குடும்பம் அது. சுகதேவ் சிங் வாழ்வும் வளமும் கௌரவமும் அவருடைய சீடர்கள் அவர்க்கு நல்குவனவற்றைப் பொறுத்து அமைந்தவை. பல தலைமுறைகளாகச் சீடர்கள் கூட்டம் சோதிக் குடும்பத்தை மரியாதை செலுத்தி வழிபட்டு வந்தது; ஏனெனில், அக்குடும்பத்தினர், சீக்கிய குருமார் குடும்பம் ஒன்றின் கால்வழியினர் ஆவர். அரசு ஆதரவையும் அவர் பெற்றவர் ஆவார்.

இந்த நாவலில் சோதி குடும்பத்தின் தொன்றுதொட்ட கௌரவத்தையும், சீடர்களின் குருட்டுத்தனமான நம்பிக்கையையும், ஒருபுறம் இவற்றின் போலித்தனமான விளைவுகளையும் பிறிதொருபுறம் இழிந்த அறியாமையையும், மனங்கொள்ளும் வகையில் ஓவியம்போல் தீட்டியுள்ளார் நானக்சிங். பிரிட்டிஷ் ஆட்சிக்குப்பட்ட நிலப் பிரபுத்துவ வகுப்பினர்தம் இழிதகைமையை விளக்குவதில், இத்துறையில் முன் அடைந்த வெற்றிகளிலும், மேம்பட்ட வெற்றியைப் பெற்றுள்ளார் நானக்சிங். ஹாசன்பூரிலுள்ள சோதிகளின் அரண்மனை, சக்ஜவீதின் தக்குருத்துவாரா [இந்துக்கோயில்] சோதி சுகதேவ்சிங், இந்துக்கோயிலின் காவலர் நாத் இவ்விருவர்தம் சமய வகைகள் ஆகியவை, பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், நிலைகுலைந்த பஞ்சாபின் நிதரிசனமான சின்னங்களாகும்.

கர்தர்சிங் வாழ்வு நிகழ்ச்சிகளும், அவர்தம் தோழர்களின் வீரச்செயல்களும் அவர்களுடைய மனத்திட்பத்தைப் புலப்படுத்தும் வகையில், ஆற்றல் மிக்க உணர்வுகளோடு விளக்கப்பட்டுள்ளன. சோதிசுகதேவ் சிங் வாழ்வில் உற்ற இகழ்ச்சி அவருடைய மகன் ரக்பீரும் மகள் பீரியும் நிகழ்த்திய தீரத்தால் நன்கு புலப்படுத்தப்பட்டுள்ளது. கர்தர்சிங் சரபாவை, அவர் சாவதற்கு முதல் நாள் இரவு மரணதண்டனைச் சிறையில் பீரி சந்திப்பதற்குச் செய்த சாகசம், அவ்விருவர்தம் குறிப்பிடத்தக்க சம்பிரதாயத் திருமணவைபவம், அதற்குப் பிறகு பலோவால் செல்லுதல், அங்கு, கர்தர்சிங்கைக் காட்டிக் கொடுத்த ரிசல்தா் கண்டாசிங்கைச் சுட்டுக் கொல்லுதல் ஆகியவைகள் கற்பனைக் கதைக்கே கூட சற்று மிகுதியாகத் தோன்றுகின்றன.

இக்மியான் தோ தால்வரான் என்பது ஹிம்சையின் பயணம் ஆகும். அகிம்சையில் நம்பிக்கையில்லாத ஒருவனை ஆயுதந்தாங்கிப் போராடும் வேட்கையுள்ளவனை கதைத் தலைவனாகக் கொண்டுள்ளார். அநேகமாக அவருடைய எல்லா நாவல்களிலும் கொடியவர், இதயங்களில் கழிவிரக்கம் தோன்றச் செய்தல் வாயிலாகவோ, அக்கொடியோர் மக்களைக் கதைத் தலைவர்களாக்குதல் மூலமோ அகிம்சைப் புரட்சியைக் கொண்டுவந்து சமாளிக்கிறார் நானக்சிங். ஆனால், இந்த நாவலில், கதை, கற்பனை திகழும் பகுதிகளிலும்கூட, நடைமுறைக் கொத்ததாக அமைந்துள்ளது.

நாற்பதாண்டுகட்கு முன்னர் பிரிட்டிஷ் ஆட்சியில் சுதந்திரப் போராட்டம் புரட்சிக்கூட்டங்களை நெருங்கியபோது, சித்தாலாகு நாவலில் விளங்கியதுபோலவே, கொய் ஹறியா புட்ராஹியோரீ [என்றுமுள்ள பசுஞ்செடி] என்னும் தமது அடுத்த நாவலை சுதந்திர இந்தியாவின் சமுதாய நடப்பினைப் பற்பல கூறுகளாக எடுத்துரைக்கும் நாவலாக உருவாக்க முயன்றுள்ளார் நானக்சிங்.

எனினும், சித்தலாகுவில் வரும் கால வரையறைக்கு முற்பட்ட காலத்தில் தொடங்கி நிகழும் காலப் பகுதியைக் கொண்டுள்ளது கொய் ஹறியா புட்ராஹியோ ரீ. பிழைப்புக்காகச் சம்பாதிக்க முயலும் எளிய கடைக்காரன் சௌனியின் பரிதாபப்படத்தக்க அவலநிலைமைகளோடு கதை தொடங்குகிறது. ஒரு கன்டோன்மெண்ட் பகுதியில் இரண்டு அல்லது மூன்று ரூபாய்

வாடகையில் ஒரு அறைபிடித்துக் கடையாக்கி அதில் பழைய பொருட்களை வைத்து விற்கிறான் அவன். பழைய சீனக் கோப்பைகள் ஏவலாளர் தத்தம் எஜமானர்களுடைய வீடுகளிலிருந்து தட்டிக் கொண்டுவந்து மிக அற்ப விலைக்கு அவனிடம் கொடுக்கும் பொருள்கள் அவை. இந்த வியாபாரங்களில் சௌனி நல்ல லாபம் பெறுகிறான். பெரும்பாலும் திருட்டுப் பொருட்களை விற்பதால் சில சமயங்களில் போலீஸ் அச்சுறுத்தலுக்கு ஆளாவதும் உண்டு. கைக்கூலிப் பழக்கமான போலீஸ்காரர்களுக்கு, அவனுடைய தவறான நடவடிக்கைகள் அவ்வளவு கடுமையாகப்படுவதில்லை. சௌனியின் வியாபாரம் வளம் பெறுகிறது. டெலிபோன் கம்பிகள், இரும்பு கர்டர்கள், மற்றும் பல கனவகைப் பொருள்கள் ஆகிய தரமான, விலை மிகுதியான பொருள்களைப் பழைய அடிப்படையிலேயே வாங்கி விற்கும் வேலையில் ஈடுபடுகிறான் அவன். அரசாங்க ஸ்டோர்களில் திருடிய பொருள்களை வாங்கிய அரசு ஊழியர்களுக்கே லாபம் வைத்துவிற்கிறான். வசதி பெருகிய நிலையில், லாலா சவன்மால் என்று அழைக்கப்படுகிறான். ஆனாலும், வாடிக்கையாளர்களாகிய பிரிட்டிஷ் படை வீரர்களைத் திருப்திப்படுத்துவதற்காக, லோயல் என்று பட்டப்பெயர் தாங்குகிறான்.

சுதந்திரத்திற்குப் பிறகு, அரசியல் மனப்பாங்கினால், லோயல் என்ற பட்டப்பெயரை விட்டுவிட்டு சவான் மால் சௌகான் என்று பேர் பண்ணுகிறான். சோனா என்னும் அவனுடைய கோத்திரப் பெயரை மாற்றி அமைத்துக் கொண்ட வடிவந்தான் அவனுடைய பெயரின் கடைசிப் பகுதி.

அவன் விரும்பிய அளவு செல்வம் சேர்ந்ததும் தனது செல்வ நிலைக்கேற்ப ஒரு பங்களா கட்ட வேண்டும் என்ற ஒரு கௌரவ எண்ணம் அவனை உந்துகிறது. அதற்காக, கிஷ்னி என்னும் முதியவளைக் கொன்று அவள் கைரேகையை, சொத்து மாற்றப் பத்திரத்தில் இட்டு, கன்டோன்மென்ட் பசார் நடுவில் ஒரு இடத்தைச் சமாளித்துப் பிடித்துவிடுகிறான். கிஷ்ணியன் மருமகன் தொலைவில் அஸ்ஸாமில் கொல்லனாக வேலை செய்த ரூலியா என்பவனைத் தவிர இந்த பாதகமான குற்றத்தைத் தெரிந்துகொள்ள யாரும் முன்வரவில்லை. ஆனால், அவன் ஒன்றும் செய்ய இயலாது. லாலா சவன் மாலினுடைய பங்களாவில் கொத்து வேலை செய்ய வந்த ரூலியாவின் மகள் ரூபாவின் வாயிலாக சவன்லாலின்

சொந்தப்பிள்ளை யதீஷ் இந்த ரகசியத்தைத் தெரிந்துகொள்ளுகிறான். ருலியாவும், ருபாவும் பங்களாவின் புறவீட்டில் வாழ்ந்து வருகிறார்கள். ருலியா, அந்த முதிய விதவையின் மருமகள் என்பதையும் தெரிந்து கொள்ளுகிறான்.

தந்தையின் போக்கு அடாவடிதனத்தைத் தெரிந்துகொண்ட யதீஷ் மிக்க அதிர்ச்சி அடைந்து, தந்தையின் முறைகேடான சொத்திலிருந்து எதையும் எடுத்துக்கொள்ளாமல் வீட்டைவிட்டு வெளியேறுகிறான். ருலியாவும் ருபாவும் அவனோடு சென்றுவிடுகின்றனர்.

ஒரு நகரத்தின் ஒதுக்குப் பகுதியில் அவர்கள் தங்கியிருக்க வருகின்றனர். அங்கு ருலியா தன் மகளை யதீஷூக்கு மணம் முடித்து, அஸ்ஸாமுக்குத் திரும்புகிறான். நசுக்கப்பட்ட ஒருவனுடைய மகள் அவ்வாறே நசுக்கப்பட்ட ஒருவன் மகளை மணப்பதென்பது, நானக்சிங்கிற்கு மிகவும் பிடித்தமான கதைக் கருவாகும்.

இனி, யதீஷூக்குக் கஷ்ட தசை. போதிய படிப்பும் வாணிகத்தில் அனுபவமும் உடையவனாக இருந்தும், தகுந்த வேலைவாய்ப்பு பெறத் தவறுகிறான். டீ பொட்டலம் தயாரித்தல், ஐஸ்கிரீம் விற்றல், கடை வைத்தல் முதலிய முயற்சிகளில் ஈடுபடுகிறான். ஆனால், ஒவ்வொரு துறையிலும் தோல்வியே காண்கிறான். இறுதியில் யதீஷ் நோயாளி ஆகிறான். காசநோய்க்கு இரையாகி உயிர் விடுகிறான். ருலியா அவனைக் கவனித்துக் கொள்ளப் புறப்பட்டு வருகிறாள். ஆனால் காலம் கடந்துவிடுகிறது. அவனுடைய தாயும் தந்தையும் அவனுடைய உதவிக்கு வரவே இல்லை. இவ்வாறு, சுதந்திர இந்தியாவில் சாதாரண மனிதனின் வாழ்வில் நிகழ்ந்த துன்ப முடிவைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் நானக்சிங். முன்னேறும் நாடு ஒன்றில் இயல்பாக நிகழும் குற்றங்களை இந்த நாவலில் கணக்கிட்டுக் காட்ட முற்படுகிறார் நானக்சிங். இந்தியச் சோலையில் ஒரே ஒரு அரிய செடிதான் பசுமை மாறாமல் இருக்கிறது என்று கண்டறிகிறார் அவர்.

நானக்சிங்கின் படைப்புகளில் இதுவே இறுதியானது. 1917—இல் எழுபத்துநான்கு வயது முதிர்ந்த நிலையில் அவர் மறைந்தார்.

# 6

## சிறுகதைகள்

நாவல்களோடு, நானக்சிங்கின் சிறுகதைகளும் உணர்வுமிக்க கற்பனைக் கதை உலகில் உரிய இடம் பெறுவனவாகும். நம் சமுதாயத்தில் பெண்களின் அடுக்கடுக்கான சீர்கேடுகளே அல்லாமல், வாழ்வின் வெவ்வேறு நிலைகளில் உள்ள இளைஞர்களும் பெண்களும் காதலித்து மகிழ்ச்சியடைய முடியாமற்போதல், தன் பிள்ளைகளிடம் வரம்புகடந்த அன்புகாட்டுதல், இனக்கலவரங்களின்போது சிலர் அசாதாரணமான வகையில் மனிதாபிமானங்காட்டுதல், ஆசிரியர்கள் எழுத்தாளர்கள் கலைஞர்கள்தம் வறுமை, அவர்தம் உள்ளக் குமுறல், அதுவே அவர்தம் தலைவிதியாதல் ஆகியவை நாவல்களிற்போலவே, சிறு கதைகளில் திரும்பத்திரும்ப வரும் கதைக் கருக்களாகவும் அமைப்பு முறைகளாகவும் உள்ளன.

இவற்றுள் பல, கதாபாத்திரம்தானே கதை கூறுவனவாக தன்மைக் கூற்றில் அமைந்துள்ளன. அதனால் கருத்தை உள்ளபடி உணர்த்தலும் உண்மை புலப்படுத்தும் இயல்பும் தவறாமல் அமைந்துள்ளன. அவர் மறைவிற்குப் பிறகு இரண்டாண்டுகள் கழித்து, மெரியன் கஹானியின் [என் கதைகள்] என்னும் எளிய தலைப்பில் ஒரே வகைப்பட்ட முறையில் தொகுக்கப்பட்ட தொகுதி இப்பொழுது கிடைக்கிறது.

இத்தொகுதியில் முதல் கதையான "மதி ஹோா பூல்" ['சிதைந்த மலர்கள்'] என்பது இளம்பெண் ஒருத்தியின் துன்பக் கதை. தான் பெரிதும் மதிப்புவைத்திருந்த சீக்கியகுரு தன்னைக் கெடுத்தது பற்றியது. இளம்பெண் கருவுறுகிறாள். தங்கள் இருவர் தொடர்பைத் திருமணம் மூலம் முறைப்படுத்த வேண்டி குருவுக்குக் கடிதத்திற்குமேல் கடிதம் எழுதுகிறாள். ஆனால், பயன் ஒன்றும் இல்லை. இறுதியில் குழந்தை பிறந்ததும் ஒரு ஆஸ்பத்திரி வாசலில் கொண்டுவந்து அதைப் போடுகிறாள். தாதியர் [நர்ஸ்] அதை

எடுத்துவந்து அறையில் வைத்து ஏனோதானோ என்று கவனிக்கின்றனர். அந்த இளம்பெண் தன் ஆர்வ மிகுதியால் ஆஸ்பத்திரி சுவர்மேல் ஏறி தன் குழந்தையைப் பார்க்க முயல்கிறாள். ஆனால், காவலாளி கூச்சல்போட்டு அவளை விரட்டிவிடுகிறான். இவ்வாறு பலநாட்கள் நடக்கிறது. குருவினுடைய நண்பர் மனைவி மிகக் கடுமையாக நோய்வாய்ப்பட்டு ஆஸ்பத்திரியில் கிடக்கிறாள். அவளைக் கண்டு விசாரித்து வருவதற்காக இந்தக் கதை சொல்பவர் அங்கே சென்றபோது, அரைப்பைத்தியமான அந்த இளம்பெண்ணைத் தன் வீட்டுக்கு அழைத்து வருகிறார். ஆடவன் ஒருவன் எழுதிய காதற் கடிதங்களின் கட்டு ஒன்று கிடக்கிறது. அப்பபைத்தியக்காரியின் காதலன் வேறு யாரும் இல்லை; தன் நண்பனாகிய அந்த குருதான் அவன். கதை சொல்பவர் கதையின் முடிவில் கூறும் கருத்து: "வடிகட்டின நீரை மட்டுமே குடிக்கின்றவர்கள், இரத்தத்தை வடிகட்டுவது பற்றிக் கவலைப்படாமல் அப்படியே குடிக்கிறார்களோ?

"அக்ரினி ரிஷம்" [இறுதி ஒளி] என்பதில் கதை சொல்பவர் சிவப்பு விளக்கு மாவட்டமான லாகூர் வழியாகச் செல்ல நேரிடுகிறது. வேடிக்கை பார்ப்பவர் கூட்டம் ஒன்று பேசிய பேச்சுக்களைக் கேட்டு, விபசாரி ஒருத்தியைக் கண்டு எந்த சூழ்நிலைகளால் அவள் இந்நிலைக்கு ஆளானாள் எனத் தெரிந்துகொள்ளும் சபலம் உண்டாகிறது. பிராமணக் குடும்பத்திலிருந்து வந்த ஒருத்தியைக் கண்டதும், தன்னை மணந்துகொண்டு, மரியாதைக்குரிய வாழ்க்கைக்குத் திரும்ப முடியுமா என்று கேட்கும் எண்ணம் மேலிடுகிறது. இந்தத் திட்டத்தைக் கேட்டதும் அவள் வியப்படைகிறாள்; கொஞ்சம் தயங்கிய பிறகு இசைகிறாள். அவள் பெயர் சந்திரமுகி. அடக்கம் மிக்க நல்ல மனைவியாக நடந்துகொள்கிறாள். அமர்நாத்தின் இந்தச் செய்கையை அவனுடைய சமூகச் சூழல் முற்றிலும் ஏற்கவில்லை. அவனுடைய தாய்மாமன் கேள்விப்பட்டதும், தன் மகன் திருமணத்திற்குக் கொடுத்த அழைப்பைத் திரும்பப் பெறுகிறான். ஆனால், மிக மட்டமான நிகழ்ச்சி ஒன்று நடக்கிறது. அமர்நாத் இல்லாதபோது ஒருநாள் மாலை அவனுடைய நண்பர் மூவர் அவளிடம் வந்து தங்கள் வேட்கையை நிறைவு செய்யுமாறு வேண்டுகின்றனர். விபசாரியாக வாழ்ந்ததால் மறுக்கமாட்டாள் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால், சந்திரமுகி இணங்கவில்லை. விரைவில் அமர்நாத்தைத்

தங்களுடைய வழிக்குத் திருப்பி, அவளைச் சிவப்பு விளக்கு மாவட்டத்திற்கே அனுப்பபோவதாகக் கூறிவிட்டுப் போகிறார்கள்.

இனாம் [வெகுமதி] என்று கதையில் இந்தக் கொடுமை வேறு வடிவம் கொள்கிறது. தன் மனைவியின் நடத்தையைச் சந்தேகிக்கும் கணவன் செயலால் மனைவி அடையும் வரையறைக்கு அப்பாற்பட்ட துயர நிலையைப் புலப்படுத்திக் கதை எழுத முடியும் என்று பெருமை பேசுகிறான் பிரேம்நாத். இந்தக் காரியத்திற்காகத் தன் மனைவியையே பலிகடாவாக்க முடிவு செய்கிறான். அவன் எழுதும் கதையில், மனைவி—ராம்பியாரி, நம்பிக்கைக்குரியவளாக இல்லாமையால் மிகவும் மனவருத்தம் உடையவனாகக் கதைத் தலைவனைக் காட்டுகிறான். அவனுடைய மனச்சுமைக்குக் காரணம் என்ன என்று அவள் கேட்டபோது, அவளுடைய தவறான நடவடிக்கைகளே அதற்குக் காரணம் என்கிறான். அதை அவள் கடிந்தபொழுது நாசக்காரி கொடியவள் என்று அவளை ஏசுகிறான். ஒரு மனைவியின் நன்றிகெட்ட தனத்திற்காகக் கணவன் எவ்வாறு குற்றஞ்சாட்டலாம் என்பதற்காகவும், கதையின் இந்தப் பகுதியை எழுதிவரும்போது, தனது மனைவி கௌரைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானிக்கிறான். வீடு சேர்ந்ததும் மிகவும் களைப்புற்றதாகப் பாசாங்கு செய்து படுக்கையில் படுத்துக்கொள்ளுகிறான். அவள் மனைவி சரன்கௌர், ஏன் அவ்வளவு நொந்து காண்கிறான் என்று கேட்டதற்கு, கதையில் வரும் கணவன் பயன்படுத்தும் சொற்களையே நிஜ வாழ்க்கையில் கதையாசிரியன் பயன்படுத்துகிறான். இதற்குப் பிறகு, தன் சொற்களின் நியாயமற்ற தன்மையை உணர்ந்து, சரன்கௌரிடம்போய் அவளுக்கு ஆறுதல் சொல்லலாம் என்று எண்ணுகிறான். அவள் சமையல் அறைக்குச் சென்றிருக்கிறாள். அங்கே தீப்பற்றி எரிந்து ஜ்வாலை எழுவதைக் காண்கிறான். அவள் உடம்பு முழுவதும் மண்ணெண்ணையைக் கொட்டிக்கொண்டு தீக்குச்சியைப் பற்றவைத்து நெருப்புக்கு இரையாகி இருக்கிறாள்.

சமுதாய விமர்சனம் அவர் விழைந்த இன்னொரு கதைக் கரு. ஒழுக்கமும் பிறநலம் பேணலும்போல நடிக்கும் மாந்தரின் போலி இயல்பு குறித்தது.

"இனாம் ககானி" [பரிசுக் கதை] என்பதனுள் பரிசுப் போட்டிக்குக் கதை எழுதி, பரிசு கிடைப்பதும் உறுதி எனக் கருதும் போலித்தனம்

உடைய எழுத்தாளன் ஒருவன் வருகிறான். முதல் வகுப்புப் பெட்டியில் தனியாக டில்லிக்குப் பயணமாகிறான் அவன். கதைக்குள் கதைத் தலைவனாக வரும் இளைஞன் ஒருவன் வணிகன் ஒருவனிடம் ஊழியம் செய்கிறான். ஆயினும் பொய்க்கணக்கு எழுவதில் வணிகனோடு ஒத்துழைக்க மறுக்கிறான். மறுத்ததன் காரணமாக இளைஞன் பணி நீக்கம் செய்யப்பெறுகிறான். எந்தப் பற்றுக்கோடும் இல்லாத நிலையில், தன் முதலாளியின் கடையிலேயே பத்தாயிரம் ரூபாய் திருடுகிறான்; ஆனால் பிடிபட்டு, நீதிபதி முன்னால் கொண்டுவந்து நிறுத்தப்படுகிறான். கேட்டபோது, தன் முதலாளி பொய்க்கணக்குத் தயார் செய்து, ஆயிரமாயிரமாக லட்சம் லட்சமாக வருமானவரியை ஏய்த்ததாகக் கூறுகிறான். பிரமோத் இந்தக் கதையைப் படித்துத் தனக்குள் பெருங்களிப்படைகிறான். அதை ஒரு சிறுபெட்டியில் வைத்து, பெட்டியை உடன்கொண்டு செல்கிறான். அந்நிலையில் வண்டிக்குள் இன்னொருவன் நுழைகிறான். பிரமோதினுடைய மூக்கின்கீழ் ஏதோ ஒன்றை வைத்து அவனை நினைவிழக்கச் செய்து பெட்டியைத் திருடிக் கொண்டு போகிறான். பெட்டியில் கதையின் கையெழுத்துப் பிரதி மட்டுமல்லாமல் கள்ளக்கடத்தல் தங்கமும் மிகுதியாக இருக்கிறது. கதை எழுதுவது மட்டுமல்லாமல், பணக்காரனாவதற்காகத் தங்கக் கடத்தல் வேலையும் செய்கிறான் பிரமோத்.

விதவா ஆஷ்ரம் [விதவையர் இல்லம்] இன்னொரு வகைப் போலித்தனத்தை வெளிப்படுத்துகிறது. பெரியமனிதர் ஒருவர் விதவையர் இல்லம் ஒன்றை நடத்துகிறார். விதவையருக்கு ஆதரவும் சிறிது கல்வியும் தந்து அதன் பின்னர்த் திருமண ஏற்பாடும் செய்வதாகப் பேர்பண்ணுகிறார். மாப்பிள்ளைமார் பலர் ஏற்ற நன்கொடைகள் தருகின்றனர். கதையில் குறிப்பிட்ட இளம் விதவை பதினாறு வயதுடையவள். அங்குள்ள மேனேஜர் அவளைக் கடத்திக் கொண்டுபோய்விடுகிறான். இந்த வழக்கில், அவன் தப்பித்துக்கொள்ளச் செய்த முயற்சி போலிசுக்குத் தெரிய வருகிறது. ஒரு போலிஸ்காரன் பிரபல வாடிக்கையாளர்போல் மாறுவேடம் கொண்டு அங்கே வருகிறான். அந்தப் பெண்ணை அவருக்கு அறிமுகப்படுத்தும்போது பையிலிருந்து வாரண்டை எடுத்துக்காட்டி அவனைக் கைது செய்கிறான். இவ்வாறு அந்தப் போலி மனிதன் உரிய தண்டனை பெறுகிறான்.

வெவ்வேறுவகை விளைவுகளை உண்டாக்குவதில் குறிப்பு முரண் என்னும் நெறி பயன்படுத்தப்பட்டுள்ளது. "பிரபாத் கா சுவப்னா" [காலைக் கனவு] என்னும், தானே சொல்லும் முறையில் அமைந்த கதையில் கிர்பாராம் என்னும் ஆசிரியர் கதை சொல்பவரோடு உடன் பணியாற்றுபவர். மற்ற ஆசிரியர்கள் எல்லாம் அவருக்கு ரேடியோ என்று வேடிக்கைப் பெயர் சூட்டுகின்றனர். காரணம் அவர் பெரிதும் பேசிக்கொண்டேயிருப்பவர். ஆயின் கதை சொல்பவர் அவரிடத்தில் குறிப்பிடத்தக்க வகையில் கண்டறிந்தது, முகாந்திரமில்லாத அவருடைய வாழ்வியல் பற்று. ஒவ்வொரு சம்பளத் தேதியை அடுத்த ஞாயிற்றுக்கிழமையில், நீண்ட தூரம் நடந்து சென்று, நாட்டுப் புறத்தில் இனிய சூழலில், வீட்டில் தயாரித்த தின்பண்டங்களைச் சுவைப்பது, மாலையில் ஒரு படத்திற்குச் செல்வது இப்படி ஒரு மகிழ்ச்சிப் பணியை அவரும் கதையாசிரியரும் மேற் கொள்வார்கள். இதைத்தவிர வேறு எதுவும் செய்வதில்லை. இந்த இனிய பயண நாட்கள் ஒன்றில், கிர்பாராம், வழக்கமான மகிழ்ச்சியைவிட அதிகமகிழ்ச்சி உடையவராக இருந்தார். காரணம், அவரே கதை சொல்பவரிடம் தெரிவித்ததுபோல், காலையில் எழுவதற்குமுன் அவர் கண்ட இனிய கனவுதான். ஐயாயிரம் ருபாய் பரிசுச் சீட்டின் மூலம் பெறுகிறார் கிர்பாராம். விடியற்காலக் கனவு பலிக்கும் என்ற நம்பிக்கையில் கொண்ட உறுதியுடன், கதை சொல்பவரை வரச்சொல்லி, அவருடைய நம்பிக்கையின்மையைக் கைவிடச் சொல்லி, டோங்கா ஒன்றை வரச்சொல்லி இருவரையும் வெளியில் அழைத்துச் செல்லுமாறு கூறுகிறார். ராயல் ஓட்டல் முன்னால் அதை நிறுத்திவிட்டு, ஐந்து ருபாய் பெறுமானம் பெறும் பண்டங்களை உண்ணுகிறார்கள். ஓட்டலிலிருந்து வெளியே வந்து, வண்டிக்குள் தாவி உட்கார்ந்துகொண்டு, சில பொருட்கள் வாங்குவதற்காகக் கதை சொல்பவரையும் அழைத்துக்கொண்டு போகிறார். அவர்கள் கிருபாராம் வீட்டுக்குத் திரும்பியபொழுது அவருடைய மாதச்சம்பளத்தில் மிச்சமாக பர்சில் மூன்று ருபாய்க்கு மேல் இல்லை. டோங்கா வாடகை முக்கால் ருபாய் கூடுதலாக ஆகியிருந்தது. அதைக் கதை சொல்பவர் தம்முடைய பாக்கெட்டிலிருந்து கொடுத்தார். அடுத்தநாள் கிருபாராம் பள்ளிக்கு வந்தபோது, அதிகப்படியான பில்லுக்குப் பணம் கட்டவேண்டுமென்று பதிவுத் தபாலில் நோட்டீஸ் வந்திருந்தது ஆனால், கிருபாராமின் முகத்தில் அதிர்ச்சியோ வருத்தமோ தென்படவில்லை. காலைக் கனவுகள் பொய்யாய்விடும் என்பதை

அவர் ஒத்துக்கொள்ளவில்லை. இந்தக் கடைசி ஞாயிற்றுக்கிழமைக் கனவு, காலையில் சரியான வேளைக்குமேல் சில வினாடிகள் முன்னதாகவோ, பின்னதாகவோ வந்திருக்கலாம். தம்முடைய மோசமான வாழ்வியல் நம்பிக்கை மீது அவருக்கே கடுப்பு வந்தபோது, கதைசொல்பவர் மாதம் முழுதும் அவர் என்ன உண்பார் என்று கேட்கிறார். அவர் மிகவும் வேடிக்கை உணர்வுடன் என் மனைவியின் வசைகளையும் அவமரியாதைகளையும் நான் தின்பேன்; அவள் என் தலையைத் தின்பாள் என்கிறார்.

நானக்சிங்கின் நகைச்சுவைக்குத் திரும்பத் திரும்ப இலக்காகின்றவர்கள் ஆசிரியர்களே. 'ஆதர்சவாதி' [லட்சியவாதி] சத்பால் குடும்பத்தில் கடைக்குட்டி; பிழைப்புக்கு ஏதாவது செய்ய வேண்டுமே என்கிற கவலை இல்லாமல் வளர்கிறான். இந்த நிலைமையில் திருமணமும் ஆகி மனைவி ஒருத்தியை வீட்டுக்கு அழைத்து வருகிறான். விரைவில் பெற்றோர் மறைகின்றனர். சகோதரர்களிடமிருந்தும் கொழுந்தியர்களிடமிருந்தும் அந்த அளவு ஈடுபாடு பெற முடியவில்லை. பரம்பரைச் சொத்திலிருந்து அவனுக்கு உரிய பங்கைப் பெற்றுத் தன்னைத் தானே பார்த்துக்கொள்ளுமாறு நேரிடுகிறது. எனினும் அவன் சலிப்படையவில்லை. அவரவர்கள் போக்கில் பிள்ளைகளை வளரவிடுகின்ற பெற்றோர்களைப்போல் அல்லாமல் தன் பிள்ளைகளை எப்படியெல்லாம் தான் வளர்க்கப்போகிறேன் என்று தம் இளம் மனைவியிடம் அடிக்கடி கூறிவந்தான். ஆனால், அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தபோது, அவனைத் தன் லட்சிய நெறியில் வளர்க்கும் பிரச்சனை மட்டுமல்ல, வாழ்க்கையை நடத்தும் பிரச்சனையையும் சத்பால் சந்திக்க வேண்டியதாயிற்று. காரணம் பரம்பரைச் சொத்து வெகுவேகமாகக் கரைந்து கொண்டிருந்ததுதான். பல இடங்களில்வேலைக்கு விண்ணப்பம் செய்தபிறகு, மாதம் எழுபது ரூபாய் சம்பளத்தில் ஆசிரியராக வேலை கிடைக்கிறது. இப்பொழுது இருப்பதைப்போல அவ்வளவு சாதாரணத்தொகை அன்று. எனினும், அது ஒரு நல்ல சம்பளம் இல்லை. திருமணம் ஆகிப் பத்தாண்டுகளுக்குப் பிறகு, சத்பால், ஆறு குழந்தைகளுக்குத் தந்தை. ஏழாவதும் உருவாகிக் கொண்டிருந்தது. வாழ்க்கை கடினமாகத் தோன்றுகிறது. ஒருநாள் பள்ளிக் கூடத்தில் மாணவர்கள் தங்கள் பாடங்களைத் தனக்குப் படித்துக் காட்டுமாறு கூறுகிறான். ஒருவருக்குப் பின் ஒருவராக மாணவர்கள் படிக்கிறார்கள். "குழந்தைகளே நீங்கள் சுதந்திர நாட்டின் இளம் நாற்றுக்கள். நாட்டின் எதிர்காலத்தை நீங்கள்

உருவாக்க வேண்டும். இந்திய அரசாங்கம் இந்த நாட்டில் யாரையும் பசியாகவோ, ஆடை இல்லாமலோ விட்டுவிடாது. பாலும் வெண்ணெயும் ஆறுகளாய்ப் பெருகி வரும் நாள் வெகு தொலைவில் இல்லை. குழந்தைகளே, நீங்கள் கல்விச் செல்வத்தால் உங்களை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும். காந்தி, சுபாஷ் நேரு ஆகியோர் விட்டுச் சென்ற நாற்காலிகளை நீங்கள் அணி செய்ய வேண்டும்".

சத்பாலிடமிருந்து, ஒவ்வொரு மாணவனும் தனித்தனியே ஒரு கடுஞ்சொல் பெறுகிறான். கடைசியில், வகுப்பைக் கலைத்துவிட்டு, நலமின்மை காரணமாகப் பிற்பகலுக்கு விடுமுறை வேண்டுமென்று தலைமை ஆசிரியரைக் கேட்கிறான்.

தம்முடைய நகைச்சுவைக்கும் குறிப்பு முரண்பாட்டுக்கும் எழுத்தாளர்களையும், கலைஞர்களையும் தமக்கே உரிய குறியாகக் கொண்டார் நானக்சிங். "லட்சுமி பூஜர்" [லட்சுமி பூஜை] என்னும் கதையில் சுக்வீர்சிங் கவிஞனாகவும் கலைஞனாகவும் விளங்குகிறான். எழுத்தாளனின் கருத்துப்படி, அவன் கல்வி தேவதை சரஸ்வதியின் ஆசிபெற்றவன். ஆனால், செல்வ தேவதை லட்சுமியின் ஆசி பெறாதவனாகிறான். உலகியல் போக்குக்கு ஒத்துவரும் வகையில் கலை நலத்தோடு களிமண் பொம்மைகள் செய்யும் தொழில்தான் சுக்வீர்சிங் மேற்கொண்டது. தீபாவளி போன்ற விசேஷ நாட்களில் அத்தகைய கலைஞர்களுக்கு நல்ல கிராக்கிதான். ஒரு தீபாவளியின்போது, செல்வதேவதையின் வடிவத்தை, இத்தாலிய பிளாஸ்டிக்கில் செய்து தரும்படி பலர் அவனிடம் வேண்டுகோள் விடுத்திருந்தனர். ஆயின், தீபாவளி மலரில் வெளியிடுதற்கான கவிதை ஒன்று வேண்டி உள்ளூர் பத்திரிகை ஒன்றின் பதிப்பாசிரியர் கேட்டிருந்தார். இந்த வேண்டுகோள், தன்னுடைய தொழிலில் ஒரு இடையீடு என்பது சுக்வீர்க்குத் தெரியும். எனினும், கவிதை வேட்கைகளின் இயப்புக்குத்தக்க அதற்கே இடங் கொடுக்கிறான். இக்கட்டான நிலைக்கேற்ப, வலது முன்கையில் ஒரு வகை முறுக்கமும் வலியும் ஏற்பட்டுவிடுகிறது. ஆனால், ஓயாமல் பொம்மைகளைச் செய்து கொண்டேயிருக்கிறான். இரவு நெடுநேரம் உழைத்து, ஜுரமும் மயக்கமும் அடைகிறான். வெகுமதி நல்கும் தேவதையைப் பிரார்த்தித்துக் கொண்டு, தன்பால் அவள் இரக்கமற்றவளாக இருப்பது கருதி அவளைச் சாடுகிறான். விளைவு, பொம்மைகளும் செய்ய முடியாமற்போய், கவிதையும் நிறைவுறாமற்போய், வாடிக்கையாளர்கள் வருத்தப்பட்டுக் கொண்டு போகிறார்கள்.

"ஹெர்பர்" [தந்திரம்] என்பது ஒரு நாவலாசிரியரின் மனைவி பற்றிய கதை. பையனுக்காகப் பேனா கத்தியைத் தேடப்போய்க் கணவனின் சட்டைப் பையில் கைவிடுகிறாள். சில துண்டுகாகிதங்களில் உணர்ச்சி மிக்க காதற் கடிதம் எழுதியிருப்பது கண்டு வியப்படைகிறாள். கணவன் தன்னை ஏமாற்றுவதாகச் சந்தேகப்படுகிறாள். எனினும் கணவனிடம் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்புகிறாள். நாள் முழுவதும் அக்கம்பக்கத்திலிருந்து பல பெண்கள் அவளைப் பார்க்க வந்தபோதுகூட — தடுமாற்றமடைந்து கிடக்கிறாள். மாலையில் நாவலாசிரியர் வீடு திரும்பியதும், துண்டுக் கடிதங்கள் காணாமற்போனது கண்டு பெரிதுங் கவலைப்படுகிறார். நிகழ்ச்சி முழுதும் மகிழ்ச்சி சிரிப்பில் முடிகிறது.

கலைஞர்கள் மீதும் எழுத்தாளர்கள் மீதும் அவர் வேடிக்கையாகக் கொண்டிருந்த பொது அறிவுப் பிடியைத் தளரவிட்டு உணர்ச்சிவயப்பட்டு விடுகிறார். "விஷ்வாஸ்காட்" [காட்டிக் கொடுத்தல்] என்னுங் கதையில் தீபக் மிக நல்ல கவிஞன். ஆனால், தோற்றத்தில் மிகச் சிறியவனாகவும் குருபியாகவும் இருக்கிறான். செல்வரும். முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்டுமான ராவ்சாகிப் தீனதயாள் என்பவரின் மகள் ரூபகுமாரி அவனுடைய கவிதையில் ஈடுபட்டு அவனிடம் காதல் கொள்கிறாள். தன் காதலையும் பிற அனைத்தையும் பெறுமாறு கூறு டல்ஹௌசிக்கு அழைக்கிறாள். அவன் களையான இளைஞன் மொஹிந்தர் டல்ஹௌசிக்குச் செல்வது தீபக்காக நடிக்க. தீபக்கின் கவிதையும் எடுத்துச் செல்வது என்று யோசனை கூற அவன் அதற்கு உடன்பட்டு டல்ஹௌசியில் ரூப்குமாரியுடன் இரண்டு மாதங்களுக்கு மேல் வாழ்கிறாள். மொஹிந்தர் டல்ஹௌசியிலிருந்து திரும்பியதும், தீபக் என்று மில்லாத வகையில் சலிப்புற்றிருப்பதைக் காண்கிறான். அடுத்தநாள் அவனைக் காணச்சென்றபோது தீபக் செத்துக்கிடப்பதைக் காண்கிறான். ஒருநாள் கூட மொகிந்தரின் [தீபக்கின்] பிரிவைத் தாங்கிக்கொள்ள முடியாது என்று ரூப்குமாரி அப்பட்டமாக எழுதிய கடிதம் ஒன்றையும் காண்கிறான். தீபக் மாரடைப்பால் காலமாகியிருக்கிறான்.

"மௌட் டி ஆண்டிம் பவ்ரி பின்" [சாவை நோக்கிய இறுதி முயற்சியிலிருந்து] என்னும் கதையில் உணர்ச்சி மிக்க நாடகப்பாங்கில் ஒரு அகதிப் பெண்ணை அறிமுகப்படுத்துகிறார்.

லலிதா 1947 கலவரத்தில் பாகிஸ்தானில் வசதி மிக்க தன் பெற்றோர்களை இழந்தவள். இந்திய நகரம் ஒன்றிற்கு வந்து, ஏதோ ஒரு வகைச் சொந்தம் உடைய இந்தியக் குடும்பம் ஒன்றில் புகலிடம் பெறுகிறாள். அங்கு, மீண்டும் கல்வி கற்கும் வாய்ப்புப் பெற்று, கைலாஷ் என்பவனோடு தொடர்பு கொண்டு அவனைக் காதலிக்கிறாள். கைலாஷ் தன்னை மணந்து கொள்ளவேண்டுமென்று கேட்டபோது, லலிதா ஈடுகொடுக்காமல் இல்லை. தனக்குப் புகலிடம் கொடுத்த விமல் என்னும் இளைஞனின் அனுமதி பெற்ற பிறகு விரும்பியவாறு செய்யலாம் என்று கூறுகிறாள். விமல் தனக்கு நெருங்கிய நண்பன்தான். அவள் விமலைக் காதலிக்கிறாளோ என்று நம்பும் நிலை அவனுக்கு நேரிடுகிறது. விமலின் வழியிலிருந்து விலகிக் கொள்வதற்காகத் தற்கொலை செய்து கொள்ள நினைக்கிறான் அவன். ஆனால், ஒரு சந்திப்பு ஒன்றை ஏற்பாடு செய்வதெனப் பிறகு முடிவு செய்கிறான். இரண்டு கோப்பைகள். ஒன்று விஷம் கலந்தது. இன்னொன்று அதே தோற்றம் உடைய சர்பத் உள்ளது. கைலாஷ் முதல் வாய்ப்பைப் பெறுவான். விஷம் கலந்த கோப்பை என்று கருதியதை அவன் பருகிறான். கைலாஷின் அன்பை முற்றிலும் புரிந்துகொண்ட விமல், எந்தக் கோப்பையிலும் விஷம் இருக்காது. லலிதா தனக்குச் சகோதரிபோல. மகிழ்ச்சியோடு அவளைக் கைலாஷுக்குத் திருமணம் செய்து தர முடியும் என்று அவனிடம் கூறுகிறான்.

“சுபானியன் டி கபார்” [கனவுகளின் புதைகுழி] என்பதனுள், ஒரே கல்லூரியில் பயிலும் ரஞ்சனா என்னும் செல்வர் மகளுக்கும் நிந்தர் என்னும் ஏழைக் குடும்பத்துப் பையனுக்கும் ஏற்பட்ட இளமைக் கவர்ச்சி பற்றிய காதலின் விளைவாக நடந்த விசித்திரமான திருமண விவரங்கள் பற்றியது. கல்லூரிப் படிப்புக்குப் பிறகு அந்த இளைஞன், தக்க வேலை பெற முடியவில்லை. சிவில் சப்ளை செய்யும் ரேஷன் துறையில் குமாஸ்தாப் பொறுப்பேற்கும் நிலை வந்து நிற்கிறது. மாதம் எழுபது ரூபாய் சம்பளம். நிந்தரின் தாய் வீட்டில் அவர்கள் வாழ்கிறார்கள். நிந்தரின் தாய் காலமானதும் ரஞ்சனா தன் சகோதரர்களின் தொழிற்சாலையில் நிறைய ஊதியம் வரும் பணி ஒன்றை ஏற்குமாறு தூண்டுகிறாள். மனைவியின் சகோதரர்களின் கட்டளைகளுக்குப் படிவதும் அவர்கள் தொடர்ந்து குறை கூறிக் கண்டிப்பதை ஏற்பதும் நிந்தருக்கு அவமானமாய் பட்டன. ரஞ்சனாவோடு அவனுக்கிருந்த உறவுகள் சரியத் தொடங்கின. முடிவாக, ஒருநாள் இரவு உறங்கிக்கொண்டிருந்த ரஞ்சனாவைப்

பிரிந்து நிந்தர் தன் பெற்றோர் இல்லம் வருகிறான். ரஞ்சனா கணவனின் உள்ளத்துயரை உணர்கிறாள். சகோதரர்கள் வியக்கும் வண்ணம், நிந்தரின் இல்லத்திற்குத் திரும்புகிறாள். இவ்வாறு, ஏழை பணக்காரர்களுக்கிடையே தோன்றும் காதல் கற்பனைக் கனவுகள் நம்பிக்கைகளின் புதைகுழியாகின்றது என்று நிருபணமாகிறது.

எழுத்தாளனின் சிக்கல் வேறொரு வழியில் சமாளிக்கப்படுகிறது. "மோடி நு முலம்மா" [தங்கமுலாம் பூசிய முத்து] என்னும் கதையில் முத்து என்பது நாடகாசிரியன் ஒருவனைக் குறிக்கிறது. அவன் ஏழை: எனினும், ஒரு நாடகம் புகழ் வாய்ந்த பத்திரிகை ஒன்றில் வெளியாகி மேடையிலும் வெற்றி பெறும் வரை அவன் தொடர்ந்து முயல்கிறான். இது சினிமாக் கம்பெனி ஒன்றில் மாதம் அறுநூறு ரூபாய் வருமானமுள்ள பணி ஒன்றினைப் பெற்றுத் தருகிறது. [நானக்சிங்கின் காலத்தில் இது ஒரு கண்ணியமான தொகை] நகைச்சுவையும் அவலச் சுவையும் மாறிமாறி வரும் திறன்வாய்ந்த கரு அமைந்த நாடகம் இன்று எழுதுமாறு அவனுக்கு ஆணை இடப்படுகிறது. அவன் முயல்கிறான் என்றாலும், விதித்த வாய்பாட்டிற்கிணங்க எழுதுவது கடினமாக உள்ளது. புகழ்பெற்ற ஆங்கிலப்படம் ஒன்றை அப்பட்டமாகக் காப்பியடித்து எழுதலாம் என்றொரு கருத்து அவனுக்குத் தோன்றுகிறது. கதை, திரையில் நல்ல வெற்றி பெறுகிறது. அவன் காப்பி அடித்துள்ளதைக் கண்டுபிடித்துக் கடுமையாக வசைபாடி ஒரு கடிதம் ஒன்று ஒருநாள் அவனுக்கு வருகிறது. கம்பெனிக்குச் சென்று தன் சம்பளத்தை வாங்கிக் கொள்ள முடியாத அளவில் தன் பிழையை மிகவும் ஆழ்ந்து உணர்கிறான் அவன். எனவே, தொலைபேசி மூலம் தான் சம்பளம் பெறத் தகுதியற்றவன் என்றும், தன் சம்பளம் தன் கலைக்கு உரியதன்று என்றும் தெரிவிக்கிறான். காபி அடித்துப் பெற்ற வெற்றி நல்ல முத்தின் மீது—எழுத்தாளன் மீது — பொய்யாகப் பூசப்பட்ட பூச்சு ஆகிறது.

மூன்று கதைகளில் இந்து முஸ்லீம் கலவரங்கள் பற்றிய பிரச்சனையை மேற்கொள்ளுகிறார் நானக்சிங். அவை சுதந்திரத்திற்கு முன்னர் பஞ்சாபில் இருந்த மாமூல் வாழ்க்கை நிலைமையைப் பற்றியவை. நல்ல நோக்கம் உடையவர்கள் பொதுவாக இந்துக்கள் முஸ்லிம்கள் ஆகியோர்தம் இதயங்களிலிருந்த அடிப்படை நற்பண்பினைச் சுட்டிக்காட்டுவர். அவர் பேணிக்காத்த அப்பண்பு அரசியல் மற்றும் பிற

உளைச்சல்களால் பயனற்றுப் போயிற்று. "ராப் அப்னே அசாலி ருப்விக்" [கடவுள் தம் உண்மை வடிவில்] என்பதனுள், இந்துப் பண்டிகை தசராவும் முஸ்லிம் பணடிகை மொகரமும் ஓராண்டில் ஒருநாளில் நிகழ்ந்தன. இனச் செருக்கும் சகிப்பின்மையும் உண்டாக்கக் கூடிய உளைச்சல் கலவரத்திலும் கொலையிலும் போய்முடியுமோ என்று அஞ்ச வேண்டியதாகிறது. எனவே, இருபுறத்தும், போரிடுதற்கும் தற்காப்பிற்கும் உரிய ஆயத்தங்கள் செய்யப்பட்டன. மொகரம் ஊர்வலத்தின் விளைவு ஒரு இந்து இளைஞனின் கொலை. அந்த வழியேபோகும் மௌல்வி ஒருவர், இந்துக்களைச் சந்திக்க நேரிடும் என்று முஸ்லிம்களை எச்சரிக்கை செய்து போகிறார். வழியில், இறுதி ஊர்வலம் ஒன்றில் இந்து மனைவி ஒருத்தியின் அழுகுரல், வீடு சென்ற பிறகும் அவருடைய இதயத்தில் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது. அவருடைய இதயம் கழிவிரக்கம் நிரம்பியதாகின்றது. அதனால், இராமலட்சுமண வடிவம் தரித்தவர்களோடு இந்து ஊர்வலம் ஒன்று தம் மசூதி வழியாகச் சென்றபோது, அதன் மீது மலர்க் கொத்துக்களை வாரி இறைக்கிறார். இது வியத்தகு பயனைத் தருகிறது. இந்துக்கள் முஸ்லிம்கள் ஆகிய இரு சாராரிடத்துமிருந்து நல்லெண்ண சகோதரத்துவ கோஷங்கள் எழுகின்றன.

"சுனெஹ்றி ஜில்டு" [தங்க முலம்] என்பதனுள் சீக்கியர் ஒருவர், பழையதாகிச் சிதைந்துபோன கொரான்படி ஒன்றை புத்தகக் கட்டு வேலை செய்யும் முஸ்லிம் ஒருவரிடம் கொண்டு செல்கிறார். அவர் ஆச்சரியப்பட்டு அது அவருடையதா என்று கேட்கிறார். அது தன் மகளுடையது என்று அந்த சீக்கியர் கூறுகிறபோது, அவருடைய வியப்பு இன்னும் மிகுதியாகிறது. இறுதியாக சீக்கியர் அவரிடம் கூறுகிறார். ஐந்தாண்டுகளுக்கு முன்னர் நடந்த இந்து முஸ்லீம் கலவரங்களின்போது, ஒருவயோதிக முஸ்லிம் இந்துக்களிடமிருந்து தன் மனைவியையும் கடையையும் காப்பாற்ற முயன்றபோது படுகாயத்திற்கு உள்ளாகிறார். அவர் ஒரு பத்து வயதுச் சிறுமி ஒருத்தியை விட்டுச் சென்றார். கொரான் அந்தச் சிறுமிக்கு உரியது.

"ஜேடன் சாடே விச் இன்சான் பிரகாத் ஹூண்டா ஹை" [நம்மிடமிருந்து மனிதன் தோன்றும்போது] என்பது சீக்கிய ராணுவ வீரர் ஒருவர் பற்றிய கதை. மலைவாழ் ஊடுருவிகள் இந்திய மண்ணில் ஊடுருவியுள்ளரா என்று கண்டுபிடிப்பதற்காக, கஷ்மீரில் குன்று ஒன்றின் மீது எல்லைகாவல் பணி பற்றிச் செல்கிறார். பத்துப்

பேர் கொண்ட தன் குழுவில் தான் மட்டும் தனித்து ஒதுக்கப்பட்ட நிலை, மற்ற ஒன்பது பேரும் பனியில் மாய்ந்து போகிறார்கள். உள்ளம் கலங்கிய நிலையில், இறக்குந்தறுவாயிலிருந்த பஞ்சாபி முஸ்லிம் ஒருவரைக் காணுகிறார். அவர் தலைமையில் வந்த அனைவரும் பனியில் மாண்டு போனார்கள். பாட்டிலில் இருந்த 'ரம்' மைப் பருகச் செய்து, பிஸ்கட் பொட்டலத்தைக் கொடுத்து, அவற்றால் உடம்பில் பலம் பெற்றதும், சீக்கியர் அந்த முஸ்லிமைத் தன் கூடாரத்திற்குக் கொண்டு வருகிறார். இரவில் அவர் தப்பித்துச் செல்ல உதவுகிறார். அதனால் அவர் பதவி நீக்கம் செய்யப் பெற்று, பென்ஷன் இல்லாமலேயே வீட்டுக்கு அனுப்பப்படுகிறார். ஆனால் அவர் அது பற்றி வருந்தவில்லை.

"லாஷ் டி டாஸ்விர்" [ஒரு பிணத்தின் ஓவியம்] என்பதனுள், நம் இதயங்களில் ஆழ்ந்து கிடக்கும் பரிவைப் புலப்படுத்தும் நிகழ்ச்சி ஒன்றினைக் கதை சொல்பவர் விளக்குகிறார். புதிதாய் மணம் புரிந்து கொண்ட ஜெய்ராம்சிங் என்னும் நண்பர் கதை கூறுபவரை விருந்திற்கு அழைக்கிறார். அங்கு, சுவரில் ஒரு பிணத்தின் படம் ஒன்றினைக் காணுகிறார். அருகில் துப்பாக்கி ஒன்றும் உள்ளது.

இந்து மனைவி ஒருத்தியைப் பணம் பெற்று விடுதலை செய்வதற்காகக் குகை ஒன்றில் மறைத்து வைத்திருந்த நிலையில், அவளை விடுவித்துத் தப்பிச் செல்ல உதவியமைக்காகத் தன் இனத்தவரால் சுட்டுக் கொல்லப்பட்ட பதான் ஒருவனின் பிணம் அது.

சில கதைகளில் மலைவாழ் பகுதிகள் வடிவம் பெறுகின்றன. ஒப்பிட்டுக் காணுங்கால், அங்கு வாழ்வோர் பற்றிய கருத்து வளம்மிக்கதாக உள்ளது. "பனி பெயல்" என்பது, டல்ஹௌசி என்னும் மலைவாழ் பகுதியோடு தொடர்புடைய நிகழ்ச்சி ஒன்றைக் குறிப்பிடுகிறது. பனிபெய்வதைக் காண்பதற்காக, டிசம்பர் மாதத்தில் டல்ஹௌசிக்குச் செல்லும் அரசாங்க உத்தியோகஸ்தர் ஒருவரின் கதையை விளக்குகிறார் அவர். பானிகெட் என்னும் பகுதியைக் கடந்து ஐந்து மைல்கள் கீழே பஸ்கள் போக முடியாது. பானிகெட்டில் இறங்கிய அந்த உத்தியோகஸ்தர், பல பொருள்களை உள்ளடக்கிய ஒரு பெரிய படுக்கையை வைத்திருந்தார். சுற்று முற்றும் பார்த்து, கூலி ஒருவனைக் கண்டு, தன் சுமைகளைத் தூக்கிக் கொண்டு வரும்படி ஏவுகிறார். வரம்பு கடந்த குளிரினாலும், அளவுக்கு

மேற்பட்ட களைப்பினாலும், டல்ஹௌசியை நெருங்க இரண்டு மைல்கள் இருக்கும்போதே கூலியாள் மடிந்து போகிறான் என்னும் அளவில் கதை முடிகிறது. அவ்வழியில் சென்ற ராணுவ ஜீப் ஒன்றில் அந்த உத்தியோகஸ்தருக்கு இடம் கிடைக்கிறது.

ஸ்வர்க் டெ இஸ்தெ வாரிஸ் [சுவர்க்கமும் அதன் வாரிசுகளும்] என்பது, ஸ்ரீநகர் தால் ஏரியில் படகு வீட்டில் வந்து தங்கியிருக்கும் தம்பதிகள் இருவருக்கு எடு பிடி வேலை செய்யும் காசிம் என்னும் கஷ்மீர் சிறுவனைப் பற்றிய கதை. படகு வீட்டில் பொருள்கள் பலவற்றைப் பையன் திருடுகிறான். ஆனால், பயணிகள் அவன் மீது குற்றம் சுமத்த மனங்கொள்ளவில்லை. இறுதியில் மருந்துக் கடை ஒன்றில் சில மருந்து பாட்டில்களைத் திருடியபோது காசிம் பிடி படுகிறான். அதனால், பய்ணிகளின் பொருள்களையும் அவனே களவாடியிருப்பான் என்றாகின்றது. வயது முதிர்ந்த தந்தையைக் குளிரிலிருந்து விடுவிக்கவும் நோயுற்ற சகோதரியைக் காக்கவும் அவன் அவற்றையெல்லாம் செய்து வந்திருக்கிறான். அவனுடைய தந்தை அவளுக்கு மருந்து வாங்க முடியாத நிலை.

வறுமையினால் ஏழைகள் செய்யும் சிறு குற்றங்கள் பற்றிய நானக் சிங்கின் சிந்தனை, அவருடைய உணர்வில் தக்க வடிவம் பெறுகிறது.

"இஸ் மாயாகி தீன் நாம்" [பணத்திற்கு மூன்று பெயர்கள்] என்பது மீண்டும் டல்ஹௌசியைச் சார்ந்த பாத்திரம் பற்றிய கதை. மங்கு என்பவன் கதை ஆசிரியரை ஒரு வீட்டிற்கு அழைத்துச் செல்கிறான். அது அவர்க்குப் போதும் என்று அவன் நினைக்கிறான். மங்கு ஏற்பாடு செய்யும் வாடகை, கதாசிரியர் எளிதில் கொடுக்கக்கூடியதுதான். எனினும் வீட்டின் அளவைப் பார்க்கும் போது வாடகை அதிகந்தான் என்று தோன்றுகிறது. கதை ஆசிரியர் கூறுவதுபோல், டல்ஹௌசியின் அழகும் அதிர்ஷ்டமும் பிரிட்டிஷ்காரர்களோடு போய்விட்டதுதான்.

இறுதியில் மங்குவே அதன் சொந்தக்காரன் என்று ஆகிறது. முனிசிபல் அதிகாரிகளுக்கும், அவன் லாலா மங்கத்ராம் என்ற பெயரில் அறிமுகம் ஆகிறான். வீட்டுவரி வாங்குவதற்காக அவ்வப்போது ஒரு ஊழியன் அவனிடம் வருவான். லாலாமங்கத்ராமின் அந்தஸ்துக்கும் மரியாதைக்கும் குந்தகம்

ஏற்படுகிறது. பொதுவாகவே டல்ஹௌசியில் இவை குறைந்து போகின்றன. தற்போது, இந்திய—பாகிஸ்தான் எல்லைப் பகுதியில் பலரும் வழங்காத பகுதியில் உள்ளது அது.

மோஹ்மாய் [தாயன்பு] என்பது, சீக்கியத் தலைவர் ஒருவரைக் கொல்வதற்காகப் பெஷாவரிலிருந்து லாகூர் செல்லும் முஸ்லிம் வெறியன் பற்றிய கதை. வழியில் பன்னிரண்டு வயதுச் சிறுமி ஒருத்தியால் தடுத்து நிறுத்தப்படுகிறான். இந்துச் சிறுமிகள் லோகிரிப் பண்டிகையின்போது, வெகுமதி பெறுதற்பொருட்டு அடிக்கடி பயன்படுத்தும் சொற்றொடரால் அவனை அழைக்கிறாள் அவள். அன்னையின் அருமை மகனே எனக்கு அன்னையின் அன்பைக் கொடு என்பது அந்தச் சொற்றொடரின் பொருள். அவளைக் காழ்ப்போடு நோக்கி விட்டொழித்துச் சென்ற பிறகும் அவள் சொற்கள் அவன் காதுகளில் ரீங்காரம் செய்துகொண்டேயிருக்கின்றன. சில அடிகள் சென்ற பிறகும், அவளை நோக்கித் திரும்பி வரும் கட்டாய நிலைக்கு ஆளாகிறான் அவன்.

அவளுக்கு ஒரு ரூபாய் பணம் கொடுத்து தன்னை அவளுடைய சகோதரன் என்று பிரகடனம் செய்து கொள்ளுகிறான். பிறகு சீக்கியத் தலைவர் இல்லம் செல்கிறான். முன்பின் தெரியாத அயலவனை வெகுமதி கேட்டதற்காக அந்தப் பெண் வசைபெறும் ஓசை அவன் காதில் விழுகிறது. தந்தை அவள் கன்னத்தில் விடும் அறையின் ஓசையும் கேட்கிறது. தந்தைக்கும் மகளுக்கும் நடுவில் புகுந்து அந்த முஸ்லிம் வெறியன் எல்லாவற்றையும் விளக்குகிறான். அதன் பிறகு இன ஒற்றுமைக்காக அர்ப்பணித்துக் கொள்ளும் மக்களைக் கொண்ட சமூகக் குழு ஒன்றை அவன் அமைக்கிறான். ஃபரிஷ்ட—இ—மில்லட் [மன்பதையின் தேவதை] என்ற பெயரால் அது விளக்குகிறது.

சில கதைகளில் குறிக்கோளினாலும், கருத்தளவில் தனித்தன்மையுடைய நல்லுணர்வும், மகிழத்தக்க வகையில் ஒருங்கி உணர்ந்து நிற்கின்றன.

"நவன் மாஸ்டர்" [புதிய ஆசிரியர்] என்பது மனச் சங்கடத்தால் நிலையிழந்த தோற்றம் கொண்ட காரணத்தால் இருபத்து இரண்டுபேர் அடங்கிய வகுப்பை, பதவி ஏற்ற இரண்டு நாட்களில் கட்டுப்படுத்த இயலாமல் போகும் பள்ளி ஆசிரியர் ஒருவர் பற்றிய

கதை. மூன்றாவது நாள் தன் துயர்க் கதையை மாணவர்களுக்குச் சொல்வதென்று தீர்மானிக்கிறார் அவர். 1947–ன் கொலைகளின்போது, மூல்தானில் வளம் பெற்று நல்கிய தன் வணிகத்தை இழந்தது மட்டுமன்றித் தன் மூன்று பிள்ளைகளையும் ஒருசேர இழந்தவர் அவர். தக்க வகையில் தகுதி பெறாமையால், இந்த எளிய வேலையைப் பெறுவதற்கு அவர்க்கு ஒரு வருஷத்திற்கு மேல் ஆகிவிட்டது. இந்த வேலையைத் தனக்குத் தரும்படி அவர் மேனெஜ்மெண்டைக் கெஞ்ச வேண்டிய தாயிற்று. அதன் மூலம், தனக்கேற்பட்ட துரதிர்ஷ்டங்களால் பித்துப் பிடித்துப் போன தம் மனைவியை அவர் குணப்படுத்தப் கூடும். இந்த வரலாறு மாணவர்களுடைய மனத்தைப் பெரிதும் மாற்றுகிறது. அதனால் அவரைத் தந்தை என்றும் அவர் மனைவியைத் தாய் என்றும் அவர்கள் எல்லோரும் அழைக்கின்றனர்.

"பொறாமையே பொறாமைக்கு மருந்து" என்பது அதே வகையைச் சார்ந்த இன்னொரு கதை. கணவனின் தகாத நடவடிக்கையால், மனநலங்குன்றிய லட்சுமி, தன் வாழ்வை முடித்துக்கொள்ள விஷம் அருந்துவது என்று முடிவெடுக்கிறாள். பக்கத்திலுள்ள கடைக்குச் சென்று தனக்காகக் கொஞ்சம் பாஷாண வஸ்துவை வாங்கி வருவதற்காக ஒரு சிறுமியை அனுப்புகிறாள். கடைக்கு வந்திருந்தவர்களுள் வயது முதிர்ந்த நல்லறிவு மிக்க பெரியவர் ஒருவர். அம்மோனியா உப்பு மாத்திரை ஒன்றைக் கொடுக்குமாறு கடைக்காரரிடம் குறிப்பிடுகிறார். சிறுமி அதைப் பெற்றுச் சென்று லட்சுமியிடம் தருகிறாள். அது நஞ்சு என்ற நம்பிக்கையுடன் லட்சுமி அதை உட்கொண்டு அச்சம் காரணமாக நோய்வாய்ப்படுகிறாள். அந்த வேளையில் பெரியவரின் மகள் குந்தி வருகிறாள். கணவனைச் சரிப்படுத்துவதற்காக, ஒரு திட்டத்தைக் குந்தி லட்சுமிக்கு எடுத்துரைக்கிறாள். அதற்கேற்ப, லட்சுமியின் கணவன் இல்லாத நேரத்தில், ஒரு இளைஞனைப் போல் வேடம் பூண்டு அங்கு வருகிறாள். லட்சுமியின் கணவன் ஜெய்தயால் இல்லம் திரும்பும் நேரம் என்று கருதத்தக்க வேளையில், இருவரும் தங்கள் காதற்கருத்துக்களைப் பரிமாறிக் கொள்கின்றனர். மானபங்க உணர்வோடு ஜெய்தயால் இளைஞன் மீது பாய்கிறான். இளைஞனே, லட்சுமியிடம் ஜெய்தயால் கூறிய அதே சொற்களை அப்படியே கூறிக் காதலன் ஒருவனின் சலனப் போக்கைக் குத்திக் காட்டுகிறாள். குந்தி வேஷத்தைக் களைந்தபோது, ஜெய்தயால் வெட்கம் மிகுந்தவனாக ஆகி, கழிவிரக்கம் கொண்டு தன்னைத் திருத்திக்

கொண்டதற்கு அடையாளமாகத் தன் இருகைகளையும் லட்சுமியின் கழுத்தில் இட்டு வளைத்துக் கொள்ளுகிறான்.

"ஹார் படாலி மோடி" [நெக்லசுக்கு வேண்டிய முத்து] அதே மாதிரிப் போக்குடைய அமைப்பு. சந்தோஷ் சிங்கும் ஜமுனாவும் குழந்தையில்லாத தம்பதிகள். கடைசியில் அவனுடைய நிலம், மனைவியின் சகோதரர்களுக்கே போய்ச் சேரும் என்று தன் சகோதரர் குறிப்பிட்டதைப் பெரிதாக எடுத்துக் கொண்டு, ஜமுனாவின் தலை எழுத்துப்படி நடக்கும் என்று அவளை விட்டுப் பிரிந்து மனஞ்சலித்தவனாய், கங்கைக் கரையில் வாழ்வதற்காக அங்கேபோகிறான். ஒருநாள் கங்கையில் நீராடச் சென்றபோது, மென்மையான ஏதோஒன்று அவனுடைய கால்களில் தட்டுப்படுகின்றது. தன்னை மாய்த்துக்கொள்ளக் கருதி கங்கையில் குதித்த ஜமுனாதான் அவள் என்று தெரிகிறது. இவ்வாறு தெய்வாதீனமாக உயிர் தப்பி, ஜமுனா வாழ்வதென்று முடிவெடுக்கிறாள். அவர்களுடைய கிராமத்திற்கே சென்று விடலாம் என்று கணவனைத் தூண்டுகிறாள். அங்கே தன் கணவனுக்கு இரண்டாவது மணத்திற்கு ஏற்பாடு செய்கிறாள். இளையவள் ஒரு மகனைப் பெறுகிறாள். உள்ளபடியே, இது சந்தோஷிக்கு உண்மை மகிழ்ச்சியாக உள்ளது. ஜமுனாவும் முற்றிலும் புதுப் பிறவி எடுத்தவள்போல் பெரியம்மாவாக உணர்கிறாள்.

"பாபி" [கொழுந்தியாள்] என்பதனுள், இருபது வயதுடைய இளம் பெண் மாலதி திருமணமாகி நான்காண்டுகள் ஆனபிறகும் குழந்தையில்லாதவளாக இருக்கிறாள். அவளுக்கு உடன் பிறந்த சகோதரன் இல்லை. பதினாறு வயதுடைய தன் கொழுந்தன் கன்வாலிடம் பெரிதும் பாசம் உடையவளாக இருக்கிறாள். இன்னொருபுறம் அவளுடைய கணவன் பண்டிட் பால் முகந்த் நாற்பதுக்குப் பக்கமான வயதுடையவன். மாலதி · கன்வாலிடம் காட்டும் பாசத்தைச் சந்தேகக்கண்கொண்டு பார்த்து, அவனைக் கடுமையாக நடத்துகிறான். கன்வால் தேசிய நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு காங்கிரஸ் ஊழியனாக ஆகின்றான். இது பால்முகந்தின் அச்சத்தை மேலும் மிகுவிக்கின்றது. இந்த மனக் கலக்கத்தின் விளைவாக, கன்வால் தன் சகோதரனின் வீட்டை விட்டு வெளியேறுகிறான். ஒருநாள் ஊர்வலம் ஒன்று செல்வதை ஜன்னல் வழியாக மாலதி பார்க்கிறாள். கன்வால் கிஷோர் என்னும் அரசியல் கைதியைப் பின்தொடர்ந்து அது செல்கிறது என்று

அறிகிறாள். கன்வாலின் கழுத்தில் மாலை அணிவித்தற்காக வாசல்பக்கம் போகிறாள். தனக்கு மாலை அணிவிக்கும் மாலதிக்கு மரியாதை செலுத்துவதற்காக கன்வாலும் வாசல் பக்கம் வருகிறான். மாலதிதேவி நீடுழி வாழ்க! பண்டிட்கன்வால் கிஷோர் நீடுழி வாழ்க என்ற கோஷங்களை ஊர்வலம் எழுப்புகின்றது.

“பூவா” [அத்தை] வீட்டுக்குள் நிகழும் பந்த பாசத்தைப் பற்றிய இன்னொரு கதை. ஆனால், “பாபி” யில் தொடர்ந்து வரும் மனக்கலவரம் அதில் இல்லை. நேர்மாறாக, அதில் நிரம்ப நகைச்சுவை உள்ளது.

“வட்டா டாக்டர்” [தலைமை மருத்துவர்] என்பதனுள் மூன்று வயதுச் சிறுவன் ஜகதீஷ் நாய்க்குட்டிகளுடனும் பூனைக் குட்டிகளுடனும் விளையாடுவதில் மிகப் பிரியம் காட்டுகிறான். அவனுடைய தந்தை தீனாநாத் அதை விரும்பவில்லை. அவனுக்காக, பிராணிகளின் பொம்மைகளை நிறைய வாங்கி வருகிறார். அவன் மிகவும் ஆழமாக அன்புகாட்டும் பூனைக்குட்டி ஒன்றைத் துரத்திவிடுகிறார். இதனால் ஜகதீஷ் நோய்வாய்ப்படுகிறான். எந்த மருந்தும் பலனளிக்கவில்லை. இன்னொரு பூனைக்குட்டி அவன் வீட்டுக்கு வந்தபொழுதுதான் அவன் குணமாகிறான். சித்தப்பாக்கள் சிற்றன்னைகள் முறைகேடாக நடத்துவதால் அல்லற்படும் அனாதைக் குழந்தைகளிடம் தீவிர உணர்வு புலப்படுத்துகிறார் நானக்சிங்.

“ராக்ஹரி” [பாதுகாப்பு விலங்கு] என்பதன் கதைக் கரு இது தான். ராம்லாலுக்குப் பதினைந்து வயது; சோமாவுக்குப் பதிமூன்று வயது. சகோதர சகோதரிகள் இருவரும் தந்தையின் மறைவிற்குப் பிறகு திக்கற்றவர்களாய் அவருடைய இளைய சகோதரர் அவர் மனைவி ஆகிய இருவரிடம் வாழ்கிறார்கள். ராம்லால் ஒரு உணவு விடுதியில் சமையற்காரப் பையனாய்ப் பணி அமர்த்தப்படுகிறான். சோமா சிற்றன்னைக்குக் கொத்தடிமையாக இருக்கிறாள். சிற்றன்னை மிகக் கொடுமைக்காரியாக இருக்கிறாள். ராக்ஹரி பண்டிகையின்போது தன் சகோதரனின் மணிக்கட்டில் ராக்ஹரி கயிற்றைக் கட்டுவதற்கு அனுமதி தர மறுக்கிறாள். இந்து சமுதாயத்தில், பழக்கத்திலிருந்த சக்தி வாய்ந்த சடங்கு அது. சித்தப்பாவின் வீட்டில் கிடைத்த இத்தகைய முறையற்ற பராமரிப்பினால் சலிப்படைந்து ராம்லால் வீட்டைவிட்டு ஓடிவிடுகிறான். ஒருபுறம் திக்கற்ற சகோதர

சகோதரிகள் அதிர்ஷ்டங்களிலும் இன்னொருபுறம் சித்தப்பா சின்னம்மா இருவர் அதிர்ஷ்டங்களிலும் முற்றிலும் புரட்சி நிகழ்கிறது. சோமா பணக்கார வீட்டில வாழ்க்கைப்படுகிறாள். ராம்லாலும் ஏகப்பட்ட அதிர்ஷ்டங்களைப் பெறுகிறான். சித்தப்பாவின் வியாபாரம் படுத்து விடுகிறது. அவர்களுடைய சின்னம்மா அடுத்தவர் வீடுகளில் பற்றுத் தேய்க்கும் ஊழியம் செய்கிறாள். அதே பண்டிகையின்போது, இத்தனை வருஷங்களுக்குப் பிறகு சின்னம்மாவைப் பார்க்கபோன தன் சகோதரியைப் பார்க்க வருகிறான் ராம்லால். பற்பல வெகுமதிகளை அவன் அவளுக்குக் கொடுக்கிறான். சின்னம்மாவுக்கு ஏதேனும் வெகுமதி வாங்கி வந்திருக்கிறானா என்று சோமா அவனைக் கேட்கிறாள். ராம்லால் காட்டமான பதில் கொடுத்தபோது, சின்னம்மாவை மன்னிக்கும்படி வாதாடி அவளால்தான் அவர்கள் வளர்க்கப்பட்டார்கள் என்று கூறுகிறாள். தன் சகோதரன் கொடுத்த வெகுமதிகளுள் பெரும்பாலானவைகளை சின்னம்மாவிடம் தருகிறாள்; ராம்லாலும் அவளுடைய ஆசி வேண்டி அவளுடைய கால்களில் விழுகிறான்.

தாய்மாரிடத்து மிக விழுமிய அன்புகாட்டும் உணர்வுகளைக் கொண்டுள்ளார் நானக்சிங். "அன்ஹொரசான்" [இருண்ட நிலா] என்பதனுள் கண்ணிழந்த இளைஞன் ஒருவனைப் பற்றிக் கூறுகிறார் அவர். இருபது வயதுடைய சந்திரபான் ஐம்பது வயதுத் தாய் மங்களத்தை எதிர்ப்பார்த்து வாழ்கிறான். ஒருநாள் மழையில் ஒழுகும் கூரையைச் சரிசெய்து கொண்டிருநதபோது, குளிரால் நடுக்கமுற்று, தனக்குப் பிறகு தன் பிள்ளையின் கதி என்னாகுமோ என்று நினைத்து ஜுரத்தில் ஓலமிட்டு உட்கார்ந்துவிடுகிறாள். சந்திரபான் அவளுடைய கவலையைப் புரிந்துகொண்டு, மறுநாள் வெளியேபோய் ஊசி, சட்டைப்பொத்தான் ஆகியவற்றை விற்கிறான். இவ்வாறு தன்னைத்தான் சமாளித்துக்கொண்டு வயது முதிர்ந்து நோயுற்று வரும் தன் தாயையும் பராமரிக்கத் தொடங்குகிறான். ஆயினும், வெகு காலத்திற்கு முன்பே மங்களம் காலமாகிவிடுகிறாள். உலகில் தன்னந்தனியனாகி, சந்திரபான் எங்கேயோ போய்விடுகிறான். அவனுடைய தெருவிலுள்ளவர்களும் அவனைப் பற்றி மேற்கொண்டு தெரிந்துகொள்ள முடியாமற் போகிறது.

அவ்வாறே "மன் டி டவ்லட்" [தாயின் செல்வம்] என்பதனுள், பகத்சிங்கின் மனைவி பாரோ, வரம்பு கடந்த வறுமை வாய்ப்பட்டு, தன் பிள்ளைகளில் ஒருவனை குழந்தையில்லாத பணக்காரவணிகன் ஒருவன் தத்தெடுத்துக் கொள்வதற்காகத் தன்னிடமிருந்து பெற்றுக்

கொள்வதாகவும், ஆனால் தன் மகனை அவனோடு செல்ல மறுத்து ஓலமிட்டுக் கொண்டே அவளோடு ஒட்டிக் கொள்வதாகவும் கனவு காண்கிறாள்.

"ஆர்சி" [சட்ட நடவடிக்கை] முற்றிலும் நகைச்சுவை ததும்பும் சிறியதொரு கதை. ரமேஷா கிராமத்தில் லேவாதேவிக்காரன். பீஷ்னா என்னும் விவசாயிக்கு எதிராக, அவன் பணத்தைத் திருப்பித் தராததற்காக மட்டுமன்றி, வன்முறையைப் பயன்படுத்துவதாக அச்சுறுத்தியது பற்றியும் நீதி மன்றத்தில் வழக்குத் தொடுக்கத் தீர்மானிக்கிறான். ரமேஷா கணக்குப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு நீதி மன்றம் உள்ள நகரத்திற்குப் புறப்படுகிறான். நகரத்திற்குச் செல்லும் டோங்கா [குதிரை வண்டி] அவனுக்குக் கிடைக்கவில்லை. வண்டி வாடகையில் பாதியான ஆறுபைசாவுக்கு டோங்கா வாலா [குதிரைக்காரன்] வரவேண்டும் என்று அவனைக் கேட்க முடியவில்லை. நடநதே போவது என்று முடிவு செய்கிறான். சிறிதளவு தூரந்தான் சென்றிருப்பான்; வெயில் வெம்மையும் தாகமும் பற்றிக் கொண்டதால் மரநிழல் ஒன்றில் ஓய்வெடுக்க வேண்டிய நிலை. ஆழ்ந்த உறக்கத்தில் ஈடுபட்டு, தன் கடன்காரன் பீஷ்னா தன் கணக்குப் புத்தகத்தைக் கவர்ந்துகொள்ள முயல்வதாகக் கனவு காண்கிறான். உள்ளபடி அங்கே துள்ளித் திரியும் கன்றுக்குட்டிதான் புத்தகத்தை இழுக்கிறது. டோங்காவாலா நகரத்திற்குச் சென்று திரும்பி வந்து அவனை எழுப்பும் போதுதான் அவன் அந்த அதிர்ச்சிக் கனவிலிருந்து விடுபடுகிறான். நீதி மன்றத்திற்குரிய வேளைபோய் நெடுநேரம் ஆகிவிடுகிறது. ரமேஷா காலையில் வேண்டாம் என்று ஒதுக்கிய அதே டோங்காவில் கிராமத்திற்குத் திரும்பி வருகிறான்.

"நமுராத்" [அதிர்ஷ்டத்தின் வீச்சு] என்பது ஐம்பது வயது ஆகியும் மனைவி கிடைக்கப் பெறாத லெஹ்னாசிங் என்னும் வறியன் ஒருவனின் கதை. அவன் கண்பார்வை மங்கலானது. மாலைக்கண் நோயால் அவதியுறுகிறான். என்றாலும், மணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறான். இதைத் தெரிந்து இளைஞரும் முதியரும் அவனை முட்டாளாக்குகிறார்கள். ஒருமுறை இளவட்டம் ஒன்று அவனிடம் காட்டமான வேடிக்கை ஒன்று செய்யத் தீர்மானிக்கிறது. கதை சொல்பவர் இது பற்றி லெஹ்னாசிங்கை எச்சரிக்கிறார். ஆனால், லெஹ்னாசிங் அவர்; தன் மீது பிரியமற்றவராகவும், பொறாமை உடையவராகவும் இருப்பதாகக் கூறிக் குறறம் சாட்டுகிறான. தன்

எதிர்கால மனைவிக்காகச் சேர்த்து வைத்திருந்த நகைகளையும் வெகுமதிகளையும் பறிகொடுத்து, ஏமாற்றமும் சஞ்சலமும் கொண்டு வீடு திரும்பும்போது, கதை சொல்பவர், தன் போக்கில் "அதிர்ஷ்டத்தின் வீச்சு" என்று அழைக்கிறார். அவருடைய அபிப்ராயத்தின்படி, இந்த அடை மொழியை யாரும் அவனுக்கு வழங்க விரும்பவில்லை.

பெரிதும் பொருள் பொதிந்த கருத்து ஒன்றை "இன்சாம் ஹாய்வான்'' [மனிதனும் விலங்கும்] என்னும் கதை உருவாக்குகிறது. உத்திரப் பிரதேசத்தில் ராம்பூர் ரயில்வே ஸ்டேஷனில் குளிர் கால இரவு ஒன்றில் தங்கிவிட நேர்கிறது. ஐந்து வயதும் இரண்டரை வயதும் உடைய இரண்டு குழந்தைகளோடு கூடிய உள்ளூர்ப் பெண்மணி ஒருத்தி; தான் இன்னொரு பயணி. அவளுக்குப் போதிய ஆடை இல்லை என்று தெரிந்து தம்முடைய இரண்டு போர்வைகளுள் ஒன்றை அவளுக்குத் தரலாம் என்று நினைக்கிறார். ஆனால் அவள், அவரைப் பார்த்ததும், குழந்தைகளோடு அந்த இடத்தைவிட்டு விலகிப் பக்கத்திலிருந்த மரத்தடியில் ஓய்வெடுக்கப் போகிறாள். இடையில் நாய் ஒன்று தன் குட்டிகளுடன் அவர் படுத்திருந்த இடத்திற்கு வருகிறது. அவற்றைத் தம் போர்வை கொண்டு போர்த்துகிறார் அவர். காலையில் தூங்கி எழுந்ததும், நடந்துபோன நிகழ்ச்சி பற்றித் தாமே முணுமுணுத்துக் சொல்கிறார். விலங்கு நம்பிக்கைக்குரியதாக இருக்கும்போது, மனிதன் எப்படி நம்பிக்கையற்றவனாக வளர்ந்திருக்கிறானே என்று புலப்படுத்துமாறு உள்ளது அது.

"சியோனக்'' [வெள்ளை எறும்பு] என்பது ஒரு காலத்தில் ஒரு சிறு மாவு மில்லுக்கு உரிமையாளராக இருந்த ஆனந்த் சருப் சேதி என்பவர் பற்றிய கதை. அவருக்குக் கஷ்ட தசை வருகிறது. குடியிருக்கும் வீட்டுக்கு வாடகை கொடுக்க முடியாமல் கஷ்டப்படுகிறார். பூர்வீக கிராமத்தில் ஆனந்த சருபின் தகப்பனாருக்கு ஒரு வீடு இருந்தது. ஏதோ தகாத காரியம் செய்து அதன் விளைவுகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, அந்த இடத்தை விட்டு அவர் செல்ல வேண்டியதாயிற்று. பல வருஷங்களாக அவரைப் பற்றி ஒன்றும் கேள்விப்பட முடியவில்லை. அவர் மறைந்திருக்கக்கூடும் எனறு ஒவ்வொருவரும் நம்பினார்கள். அவர் மனைவி ஜானகி கேட்டுக் கொணடபடி, தன் விருப்பத்திற்கு மாறாகவே ஆனந்த் சருப் இந்த வீட்டை விற்கிறார். இருவரும்

நன்றாக வாழ்கிறார்கள். அந்த வீட்டின் மீது தனக்குள்ள சொந்தம் பற்றிய உரிமையை உறுதி செய்ய, தம் தந்தை மறைந்தார் என்றொரு உறுதிமொழியை ஆனந்த் சருப் எடுக்க வேண்டியதாயிற்று. இந்தப் பொய் பற்றிய அச்சம் வெளிப்பட்டு அவருடைய இதயத்தை வெள்ளை எறும்பு பிடுங்குவதுபோல் பிடுங்குவதாக அஞ்சினார் அவர். அத்தகைய கோழை அவர். எந்த மருத்துவரும் கண்டறியாத படி, இப்படி வீணான ஒரு அவஸ்தையால் அவர் பெரிதும் துன்புறலானார். ஆனால், தம்முடைய கடைசி நாட்களை எண்ணிக் கொண்டிருந்தபோது, அவர் தந்தை மறைந்தார் என்ற செய்தி கிடைக்கிறது. இந்த "நல்ல" செய்தி அவருடைய அச்சமனைத்தையும் சிதறச் செய்கிறது. சில நாட்களில் அவர் நலம் பெறுகிறார்.

அவ்வளவு நுணுக்கமான உளவியல் அடிப்படை இல்லாத கதை ஒன்று. "அந்தர்யமத்" [உள்ளுணர்வு] என்று நானக்சிங் அதற்குப் பெயர் கொடுத்திருக்கிறார். பேராசிரியர் ஜுகல் கிஷோர் செவிடும் ஊமையுமான சுலேகா என்னும் பெண்ணிடம் தன் அனுபவங்களைப் புலப்படு ஀ுகிறார். சில்லறைப் பொருள்களை விற்பனை செய்யும் சாதார , கடைக்காரனின் மகள் அவள். அந்தக் கடையின் மேல் மாடி அவர் கல்லூரி மாணவராக இருந்தபோது தங்கியிருப்பது வழக்க ஒருநாள் சிகரெட் பாக்கெட் வாங்குவதற்காகக் கடையில் காலடி எடுத்து வைத்தபோது, சுலேகா, தன் பொறுப்பில், அவருக்கு ஒரு பாக்கெட்டை எடுத்துக் கொடுத்தாள். செவிடும் ஊமையுமான பெண்ணின் உள்ளுணர்வு பற்றிய முதல் அனுபவம் என்று இதைப் பேராசிரியர் குறிப்பிடுகிறார். சிகரெட்டுகள் தரத்தில் தாழ்ந்தவை. அவருடைய விருப்பத்திற்கு உரியன அல்ல. அவர் கல்லூரியிலிருந்து திரும்பியதும் மிக உயர்தரமான சிகரெட்டுகளை அவள் அவருக்கு எடுத்துக் கொடுத்தாள். இது அந்தப் பெண்ணின் உள்ளுணர்வு பற்றிய இரண்டாவது காரியம் என்கிறார் அவர்.

இதே மாதிரி வேறு இரண்டு சந்தர்ப்பங்களில் அந்தப் பெண் அவருடைய உள்ளத்தை அளவிட்டதாக ஜுகல் கிஷோருக்குப் பட்டது. ஒருநாள், சுலேகாவின் தந்தை சுலேகாவை அவர் பொறுப்பில் விட்டுவிட்டு இரவு வெளியே போவதாகக் குறிப்பிடுகிறான். தூங்கச் செல்வதற்குமுன் சுலேகா அவருடைய அறைக்கு வந்தாள். தன்னுடைய சைகை மொழியில், கடையில் தனியே தூங்குவதற்கு பயமாக இருப்பதாகவும், அவர் ஒன்றும்

கருதவில்லை என்றால், அவர் அறைக்கு வந்து அங்கேயே தூங்குவதாகவும் தெரிவிக்கிறாள். ஜூகல் இதற்கு ஒன்றும் மறுப்புத் தெரிவிக்கவில்லை. இரவின் பிற்பகுதியில் ஆழ்ந்த உணர்ச்சிகளால் உந்தப்பெற்று, சுலேகாவின் படுக்கையை அணுகுவதென்று ஜூகல் தீர்மானிக்கிறார். அவர்க்கே வியப்பூட்டும் வகையில், சுலேகா படுத்திருந்த படுக்கை காலியாகக் கிடப்பதைக் காண்கிறார். இரவில் அவருடைய அமைதியிழந்த போக்கிலிருந்து அவர்தம் உள்நோக்கத்தைப் புரிந்துகொண்டு அவர் ஆழ்ந்த உறக்கத்தில் இருநதபோது, படுக்கையோடு மெல்ல அந்த அறையை விட்டு வெளியேறினாள் அவள்.

இறுதியில் சமயச் சாயலும் ஆர்வமும் புராணங்களின் இயல்பும் இடம் பெற்ற மூன்று கதைகளைக் குறிப்பிடலாம். "தீன்மந்திர்" [மூன்று கோவில்கள்] என்னும ஒன்றில், பிரிட்டிஷ்காரர்கள் காலத்தில் சமஸ்தானம் ஒன்றை ஆண்டவன், தன் வகுப்பினரைச் சார்ந்த பலரைப் போலவே தரங்கெட்டவனாக உள்ளான். சுகபோகங்களிலிந்து விடுபட்டு நாட்டு நடவடிக்கைகளைக் கவனிக்க அவனுக்கு நேரமேயில்லை. ஒரு பெண்மணியைக் கவர்ந்து தன் இருப்பிடத்திற்குக் கொண்டு வந்திருந்தான். அவளைக் கெடுப்பதற்குக் தனக்குத் தெரிந்த வழிகளிலெல்லாம் முயலகிறான். ஒருநாள் அவளைக் கற்பழிக்க முயலகிறான். அநத வேளையில் மூடாக்குத்தரித்திருந்த மனிதன் ஒருவன் தோன்றி அரசனின் இரு மெய்காவலர்களையும் தன் வாளுக்கு ஆட்படுத்துகிறான். பூசலில் அரசனும் மூடாக்கு மனிதனும் படுகாயம அடைகிறார்கள்; பெண்மணி தப்பிவிடுகிறாள். மூடாகசு 'மனிதன் வேறுயாரும் இல்லை. அந்தப் பெண்மணி ஜக்தீஷ் கௌரின் கணவன் ஷாம் ஷேர்சிங் தான். அவன் வெளிப்படையாகவே அரசனை எதிர்த்து நின்றவன். குடிபடைகளின் ஆதரவையும் பெற்றவன். அரசனும் மூடாக்கு மனிதனும் பெற்ற காயங்கள் ஆறியதும் மூடாக்கு மனிதன் விசாரணைக்கு ஆளாகித் தூக்கிடல் மூலம் மரணதண்டனை பெறுகிறான்.

தூககிலிடுவற்காகக் குறிபபிடட நாளில, அவன் மனைவி, புரட்சிப் பட்டாளம் ஒன்றை அழைத்து வநது அநதக் காட்சியில் தோன்றுகிறாள. அவளும் அவளுடைய பட்டாளமும் ஆயுதங்கள் எவற்றையும் பயன்படுத்தவில்லை. அவர்களுள் பலர் காயமுற்றும் மாண்டும் போனாலும், அரசனின் படைகளை நிலைகுலையச் செய்ய

முடிகின்றது. உயிர்க்கு ஆபத்தான படுகாயமுற்றவர்களில் ஜகதீஷ் கௌரும் ஒருத்தி. அரசன் தன் மகனுக்கு உரிமை நல்கிவிட்டுத் துறவு மேற்கொண்டு, நாடோடி இரவலனாய் வாழ்கிறான். ஜகதீஷ் கௌரின் நினைவாக ஓர் ஆலயம் எழுப்பப் பெறுகிறது. அதில், வழிபாடு செய்வதற்காக அவளுடைய சிலை நிறுவப்படுகிறது. அவளுடைய கணவன் ஷாம் ஷெர்சிங் அந்தக் கோயிலின் பூசாரியாகிறான்.

"காயகல்பா" [உயிர்பிறவி] தற்போதைய பங்களாதேஷில் உள்ள தாக்காவைச் சார்ந்த பூமியா என்னும் பெயருடைய புராணகாலத்துத் திருடன் பற்றிய கதை. குருநானக்கைச் சந்தித்த பிறகு அவன் முனிவர் இயல்பு பெற்ற மனிதனாகிறான். பொய் பேசுவதில்லை. உப்பைத் தின்ற வீட்டுக்குரியவனைக் காட்டிக் கொடுப்பதில்லை. ஏழைகளைக் கொள்ளையடிப்பதில்லை என்று மூன்று விரதங்களை அவர் முன்னிலையினின்று ஏற்றுக் கொள்கிறான்.

"தக்கூர்ஜி" [இறைவன்] என்பது கடைசிக்கதை. பதினெட்டு வயதுடைய ராஜபுத்திரப் பெண் மொகினா ராய்ப்பூர் நீர்ப்பிடிபபுப் பகுதியிருந்து பித்தளைப் பாத்திரம் ஒன்றில் நீரை நிரப்பிக் கோவிலில் உள்ள இறைவனின திருவுருவத்தை நீராட்டுவதற்காகக் கொண்டு செல்கிறாள். வழியில், அவள் நடந்து செலலும் தடத்தில் காயமுற்றுக்கிடக்கும் ஒருவன் தண்ணீர் கேட்கிறான். விக்ரகத்தைக் குளிப்பாட்ட எடுத்துச் செல்லப் பெறும் அந்நீர் தூய்மையானது என்று கூறித் தண்ணீர் தர மறுக்கிறாள். இரக்கமற்ற ஜீவனைச் சந்திப்பதற்கு இறைவன் அனுமதி தரமாட்டான் என்று காயமுற்றவன் சபிக்கிறான். மொகினா கோவிலை அடைகிறாள். ஆனால், அந்த சாபம் அவளைத் தொடர்ந்து ரீங்கரிக்கிறது. காயமுற்றவனுக்கு நீர் தருவதற்காக வந்த வழியிலேயே மறுபடியும் திரும்பச் செல்கிறாள். அந்த நேரத்தில் அவன் மாண்டு போகிறான். பாட்னாவில் உறையும் பெரியவர் குருகோவிந்த சிங்கின் சீடன் அந்தக் காயமுற்ற மனிதன் மோகினாவின் கணவன் சோகனதாஸ். அரசனின் அரண்மனையில் தோட்டக்காரன். அவள் தெரிவித்தபடி, இரண்டு இளம் பெண்களை அயோக்கியர் இருவர் பிடியிலிருந்து விடுவிப்பதற்காகச் செய்த முயற்சியில் காயமடைந்தவன்தான் அந்த மனிதன். இப்பொழுது பாட்னா நகரத்துப் பெரியவரைக் காணவேண்டும் என்று ஆழ்ந்த வேட்கை நிரம்பியவளாக இருக்கிறாள் மொகினா. ஒருமுறை ரெய்பூர் அரசனை குரு கோவிந்த சிங் பார்க்க வருகிறபோது, மொகினா

பாட்னா நகரத்துப் பெரியவரைக் காண் இயலாதவாறு சூழ்நிலைகள் திருப்பங் கொள்கின்றன. ஏனெனில குருவின் சீடன் இட்ட சாபம் விலக்க முடியாதது.

"இருப்பினும், பாட்னா நகரததுப பெரியவர் மொகினாவின் கழிவிரக்கததையும் ஆழ்ந்த பக்தியையும் தெரிந்துகொண்டு, ஆனந்த பூரிலுள்ள தம் அரண்மனைககாக, திறமைமிக்க ஒரு தோட்டககாரனை அனுப்பி வைக்கும்படி அரசருக்குச் சொல்லிவிடுகிறார். அரசர் சோகன்தாஸை அனுப்புவதென்று முடிவெடுக்கிறார்;, அதனால் மொகினா அவனோடு செல்ல நேரிடுகிறது.

அங்கே மொகினா, பெரியவரின் அடுத்த பிறந்தநாளின்போது அவர்க்கு அளிப்பதற்காகத் தனிப் பாத்தி ஒன்றில் அதி அக்கரையுடன் மலர்களை வளர்க்கிறாள். அந்த நாள் வருகிறது. மொகினா மலர்ப் பாத்திக்குச் சென்றபோது, மலர்கள் பறித்தெடுக்கப்பட்டிருப்பது கண்டு வேதனையோடு கூடிய ஏமாற்றமடைகிறாள். பெரியவர்க்கு அளிபபதற்காக மாலை தொடுத்த பககிரி ஒருவர் செய்த வேலை இது. பெரியவர் வெகுமதியை ஏற்க மறுக்கிறார்; காரணம் அதில உள்ளமலர்கள் திருடப்பட்டவை. பிறகு மொகினாவை அவருடன் தோட்டத்திறகுச் செலலும்படி கேட்கிறார் பெரியவர். அங்கே எத்தகைய மலர்கள் கிடைக்கின்றனவோ அவற்றைக் கொண்டு அவர்கள் மாலைகள் தொடுத்தல் கூடும்.

இந்த மூன்று கதைகளும் நானக்சிங் பின்பறறும் கோட்பாட்டை எடுததுககாட்டுவன. குருநானகசிங குருகோவிந்தசிங் ஆகியோர்தம் சிஷ்யர் அவர். மகாத்மா காநதியின சீடர் அவர். அவர் பின்பற்றிய அகிம்சைக் கோட்பாடே தீன் மந்திர் கதையில் வரும் கதைத்தலைவியின் கோட்பாடாகும். நான வியபபுறும் வண்ணம், குருநானக்சிங்கும், குருகோவிந்த சிங்கும் உள்ளபடியே சீக்கிய சமயமும் அத்துணை அகிம்சை நெறி நிரம்பப் பெற்றவை தாம்.

# 7

## முடிவுரை

வங்க மொழியில் பங்கிம்சநதிர சட்டர்ஜி, சரத்சந்திர சட்டர்ஜி உருது இந்தி மொழிகளில் பிரேம்சந்த் ஆகியோர்தம் மரபைச் சார்ந்த நாவலாசிரியர் நானக்சிங். அவரே எழுதியிருப்பது போல், இருபதாம் வயதின் தொடக்கத்தில அகாலி சத்யாககிரகியாக அவர் சிறையில் இருந்த பொழுது, உடன் இருந்த கைதி அவருக்கு பிரேம் சந்த் நாவல்களைப் படிக்கக் கொடுத்தார். பிரேம் சந்த் செய்து கொண்டிருந்ததுபோல் அவருடைய நெறியைப் பினபறறிச் சமுதாய சீர்திருத்தம் செய்வது அவருடைய ஆசையாயிறறு. இந்த ஆசையை நிறைவேற்றுவதற்கு அவருக்கு வெகுகாலம பிடிககவில்லை. குறுநாவல்களும் காதல் சீர்திருத்த நாவலகளும எழுதிச் சிலகாலம் பயிற்சி பெற்ற பிறகு, 1932—இல் சித்தலாகு [வெண் குருதி]வின வாயிலாய் பஞ்சாபி இலக்கியததில் தம் முத்திரையைப் பொறித்தார்.

அவருக்கு முன்பு பாய்வீர்சிங், எஸ.எஸ். சரண்சிங் சாகிப், பாய் மோகன்சிங் வாய்து ஆகியவர்களையே நாவற கலைவல்லவர்களாகப் பஞ்சாபி இலககியம் கொண்டாடியது. பல்வேறு வகையில், பன்னிரண்டு நாவல்கள் இக்கால வரம்பில் வெளியிடப்பட்டன. ஆயினும் அவற்றுள் எதுவும் விழுமிய படைப்பிலக்கியமாகக் கருதப்படவிலலை. பாய் வீர்சிங்கும் அவர்காலத்திய வேறு இருவருங் கூடக் குறிப்பிட்ட வரம்புக்குட்பட்ட நாவலாசிரியர்களே. அவர்களுடைய முயற்சி எல்லாம், அவர்கள் காலத்துச் சீக்கிய சமுதாயத்தைச் சீர்திருத்துவதும் சமயக் கருத்துக்களை எடுத்துரைப்பதுமாக இருந்தது. முதல் இருவரும் ஏறத்தாழச் சீக்கியர் வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட நாவல்களை எழுதுமளவில் நின்றுபோயினர். இந்தக் குறுகிய நெறியிலிருந்து வெளி வரும்போது, அவர்கள் காலத்து ஆங்கிலச் சமுதாயம் பற்றிய வாழ்க்கை நெறியில் தமக்கோர் இடம் பிடித்துக் கொண்டும் சிங் சபா இயககம சீககிய குருமார்தம் போதனைகளுக்குத் தநத புதிய விளக்கஙகளில் ஈடுபட்டும, சீக்கிய மக்களிடையே சமுதாய சீர்திருத்தம செய்து வநதனர்.

சிஙசபா இயக்கததின் செல்வாக்கிற்கு ஆட்பட்டவராயினர் நானகசிங்; அதனால், இந்து சமய மரபினினறும் விலகிச் சீக்கிய மரபிற் புகுந்தார். ஹான்ஸ்ராஜ் என்ற பெயரை மாற்றி நானக்சிங் என்று வைத்துக் கொண்டார். அடுத்தாற்போல, கியானி பாக்சிங்கின் அறிவுரைக்கேற்ப, அகாலி சதயாக்கிரகியாகச் சிறைபுகுந்தார்.

ஆனால், அவர் ஒருபோதும், குறுகிய மனப்பான்மை உடைய சீக்கியராக ஆனதில்லை. சந்தேகத்திற்கிடமில்லாத முன்பின தெரியாத ஒரு இந்துவை அடிப்பதற்காக, இளமையில் ஒரே ஒரு முறை வெறிபிடித்த சீக்கிய இளைஞர் குழுவில் சேர்ந்தது உண்டு.

காயம்பட்ட இளைஞன் ஒருவனுக்கு, கியானி பாக் சிங் அளித்த சிகிச்சை நானக்சிங்கை நாணமுறச் செய்தது மட்டுமன்றி, சீக்கியர்களைப் போலவே இந்துக்கள் முஸ்லீம்கள் ஆகியோரிடமிருந்த மிக்க வெறியை உணரச் செய்தது. சில காலத்திற்குப் பிறகு, சிறப்பாக அவருடைய தொடக்க காலத்தில் மனிதாபிமானமின்றிப் போலிச் சமய உணர்வு கொண்டிருந்தவர்பால் அவர் கொண்ட தொடர்பு, ஆற்றல மிக்க வகையில் அவரை பாதிததது. அதுவே, அவருடைய நாவலகளுககும் சிறுகதைகட்கும் போதிய ஆதாரங்களை நல்கிறது.

அவருடைய நாவல்களிலும் சிறுகதைகளிலும் வரும் கதைக் கருக்களையும் உள்ளீடுகளையும் யாரேனும் அளவிடுவராயின் பெண்கள், அனாதைகள், தாழ்நத சாதி இந்துக்கள் குறிப்பாகத் தாழத்தப்பட்ட சாதியினர் ஆகியோர் மீது நடந்த வரம்பற்ற செயல்கள் அநீதிகள் ஆகியவற்றிலிருந்து தொடங்குதல் வேண்டும். கதைகளுள் வரும் கொடியவர்கள், போலிச் சமய போதகர்கள் பூசாரிகள் ஆகியோருக்கு ஆடபட்ட உயர் சாதியினராக உள்ளனர். சிததலாகு [குருதேய்] காக்டன டிபெரி [ஜமுனா] துண்டாலி பார்சவான் [சயத்ரா] குட்டி வீணா [சத்யா] கங்காஜலி [பிரதிமா] கடிஹோய் படங் [கேசரி] நதூர் [அமரோ, ஷில்பாலா] ஆகியவர்களைப்போலக் கொடுமைகாரணமாக, இந்து விதவை மகளிர் விபசாரிகளாகக காட்டபபட்டுள்ளனர். ஃபாலடிர் ஃபுல், அத்கிரியா ஃபூல் ஆகியவற்றில் கூட விபசாரிகள் இரண்டாந்தரப் பாத்திரங்களாகத் தோன்றுகினறனர். ராதாகிருஷ்ணன் தாராசந்த் ஆகியோரின் தன்னலத்தால குருதேயியும், கோபால் சிங்கின் கோலாகலங்களால ஜமுனாவும், பெற்ற தாயின் கள்ளக் காதலன்

தேவேந்தர் சிங்கின் படாடோபத்தால் சுபத்ராவும், கங்காராமின் போக்கிரித்தனத்தால் சத்யாவும் பிரிஜ்மோகனின் நம்பிக்கைத் துரோகத்தால் கேசரியும் அவரவர்தம் ஆடவரின் கொடுமையால் இவ்வகை வாழ்க்கைக்குக் தள்ளப்படுகின்றனர்.

தீய மாந்தர்களாலும், சுரண்டல்பேர்வழிகளாலும் தன்னலங் கருதும் பிற தனிமனிதர்களாலும், பரஸ்பர நன்மையின் பொருட்டுப் போலி மத போதகர்களும் பூசாரிகளும் ஒன்று சேர்கிறார்கள். இவ்வாறு நானக்சிங் வகுப்பு வாரிச் சுரண்டலுக்கும் மரபு வழிச் சமயத்திற்குமிடையே உள்ள தொடர்பைப் படம் பிடித்துக் காட்டுகிறார். சித்தலாகுவில் கிரந்தி என்னும் பாத்திரம் பாலாசிங்கின் கைக்கருவிதான். ஃபாலடிபூல்லில் டாக்டர் மோகன்சிங்கும் இனப் பற்றுடைய பததிரிகையாளர் உத்தம் சிங்கும் ஒரு போக்கு உடையவர்கள். பயார் கி துனியாவில் சாது ஓங்கார்நாத்தும் சேத் பிரபுதயாலும் மஞ்ஜிஹ்தாரில் டாகடர் ஆனந்தும் திரு சுக்லாவும், பூசாரியில் சாநதி பரமேந்தர்சிங்கும் அததகைய கொடியவர்கள். சித்தலாகுவில் குருதேய் ஜீவன் சங்கரம் என்பதனுள் புரண்சந்தால் கறபழிககப்பட சமபா போனறோர் மனம் வருந்தித் தறகொலை புரிந்து கொளகினறனர். காதல் திருமணம் எனபதனுள் ரகுநாத் என்பவனால் கற்பிழந்து காட்டிக்கொடுக்கப்பட்டு, ராஜ்குமாரி என்பவள் தற்கொலை புரிந்துகொள்கிறாள். துத்திவீணாவில் கங்காராம் காட்டிக் கொடுத்தபோது சத்யா நீரில மூழ்கி மடிகிறாள். கங்காஜலியில் இவ்வாறே பிரகாஷ் என்பவன் காட்டிக் கொடுக்கப்பட்டுத் தற்கொலை நிலைக்குப் போகிறான். புவித்தர் பாபியில வீணா கிதார் மாய்ந்தபோது துயர்தாங்காமல் உயிர் விடுகிறாள். ஜீவன் சங்கரம் என்பதனுள் மனைவி உஷா குன்றிலிருந்து விழுந்து மறைந்ததற்காக அவள் கணவன் புராண்சநதை நாம் குறை கூறலாம். கரிப் கி துனியாவில், மாலதி தற்கொலை செய்ய முயற்சி செய்கிறாள். ஆனால் ரயில்வே கார்டு ஆகப் பணியாற்றிய முதியவரால் காப்பாறறப்படுகிறாள. அதகிரா பூல என்பதனுள் குல்திப்சிங் கைவிட்டவுடன ரயில்வே பிளாட்பாரததில் மூச்சிழந்து விழுந்து விடுகிறாள்.

வீர வாழ்வுக்கு இலககானவர்கள் பொதுவாகப் பெண்களும் அனாதைகளும் தாழ்த்தப்பட்ட வகுப்பினையும் மற்ற வகுப்புகளையும் சார்ந்த மகளிரும் ஆவர். அவர்கள் பொருளாதாரச் சுரண்டல சமுதாய

சமயக் குழறுபடிகள் ஆகியவற்றிற்கேயன்றி ஆண்களின் காமவேட்கைக்கும் ஆளானவர்கள். இந்தத் துரதிஷ்டசாலிகளிடம் பரிவு கொண்டவர்கள், அவர்களை நசுக்கி வாழ்வோரின் வெறுப்பையும் பகையையும் தேடிக் கொள்கிறார்கள். அகௌரவத்தாலும் வன்முறையாலும் அல்லற்படுகிறார்கள். சித்தலாகுவில் வரும் பச்சன்சிங் அவர்களுள் ஒருவர்.

இத்தகைய ஆடவரும் மகளிரும் தங்களுக்கு இழைக்கப்படும் பொல்லாங்குக்கு எதிராக வரம்புக்கு அப்பாற்பட்ட இயல்புடைய வன்முறையுடன் செயல்படுகின்றனர். இவ்வாறு உணர்வுமிக்க நாடகக்கூறும் எலிசபெத் காலத்திய துன்பியல் நாடக இலக்கிய வகையும் நம் நினைவைப் பற்றி ஈர்க்கின்றன. குருதேவ் ராதாகிருஷ்ணனையும் சிற்றன்னை மகன் கரம் சந்தையும் கொலலுகிறாள். சுந்தரி தன்னை மாய்த்துக் கொள்வதற்கு முன் பாலாசிங்கையும் கிரந்தியையும் தீக்கிரையாக்குகிறாள். புரட்சியாளன் பாலாஜி தன்னுடைய வன்முறைக் கொள்கையினின்று விடுபட்டதும் புஷ்பா அவனைச் சுட்டுவிடுகிறாள். தன் வேட்கையை நிறைவு செய்துகொள்ள வரும் நௌபட்ராயைக் கொலை செய்கிறாள். அவன் தன் தந்தையின் மூத்த சகோதரன் என்று அவளுக்குத் தெரியவருகிறது. எனினும், நானக்சிங் இந்தக் குறுகிய வட்டத்திற்கு வெளிவந்து சமுதாயத்தில் தாழ்நிலையில் உள்ள ஆடவர் மகளிரிடம் மட்டுமன்றி மணமானவரிடத்தும் தவறாக நடந்து கொள்ளும் செல்வர்கள் உயர்சாதியார் ஆகியோர்தம் ஒழுங்கீனம் அநியாயம் ஆகியவற்றின் மீது தனி கவனம் செலுத்துகிறார். இம்மனைவியர் கற்புக்கு எடுத்துக்காட்டாகவும் தங்கள் கணவன்மாரிடத்துத் தங்களையே இழந்த பக்தி உடையவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். இவ்வாறு நானக்சிங் போற்றும் வகையில் இந்து மகளிர்க்கென்று மரபு நெறியாக வகுத்த நற்பண்பு வரம்புக்கு எடுத்துக்காட்டாக அம்மகளிர் திகழ்கின்றனர். அல்லல்கட்கு இரையாகிய இம்மனைவியர் தம் விழுமிய நற்பண்புகள், நன்மையைத் தீமைக்குப் பணயம்வைத்துத் தீய நெறியிற் செல்லும் கணவன்மார்களை வரம்பு கடந்து பொறுக்கும் பொறுமையாகவும், துன்பம் தாங்கும் தத்துவமாகவும், பிறகு கிறிஸ்துவ, இன்னும் பொருத்தமாகச் சொன்னால் காந்திய மன்னிப்பு நெறியாகவும் விளங்குகின்றன: எடுத்துக்காட்டாக, உஷா தன் மரணப் படுக்கையில் தன் கணவன் புராண்சந்தை மன்னிக்கிறாள். ஷஷியும் அவள் தந்தை பிரபாகரும் [சித்ரகர்] சேத்திவாகர் தாசை

மன்னிக்கிறார்கள். இவ்வாறே சுமன் [சுமன்காந்தா] தன் ஒழுக்கமற்ற கணவன் ராம் பிரகாஷை மன்னிக்கிறாள்.

சிற்றப்பன் சிற்றன்னைமார்களின் தாட்சண்யப் பராமரிப்புக்கு உட்பட்ட மத்தியதர குடும்பத்து அனாதைக் குழந்தைகள், சமுதாய அல்லலுக்குட்பட்டு நிர்கதிக்கு ஆளாகிய இன்னொரு வகையினராய் நானக்சிங்கின் நாவல்களிலும் கதைகளிலும் வருகின்றனர். இந்த அனாதைகள் பெரும்பாலும் சகோதர சகோதரிகள். ஒருவருக்கொருவர் எல்லையற்ற அன்பும் பக்தியும் காட்டிக்கொள்பவர்கள். வாழ்வில் வளம் பெருகிய நேரத்தில் தங்களைக் கொடுமைக்கு ஆளாக்கியவர்களிடம் காந்திய மனப்பான்மையுடன் மன்னிக்கிறவர்கள். இது பெரும்பாலும் கொடுமைபடுத்தியவர்கள் கஷ்டதசை உறும்போது நிகழ்வது.

இத்தகைய கதைக்கருக்களை நானக்சிங் வளர்த்துக் காட்டுங்கால் மத்தியதர வகுப்பின் லட்சியப்பாங்கு மிக வலுவாகக் கோடிட்டுக் காட்டப்படுகின்றது. ஒரு நாவலோ அல்லது கதையோ மிக அரிதாகவே துன்பியலில் முடிகின்றது. கொடுமை செய்வோரும் தீங்கிழைப்போரும் அனுபவத்தால் மனமாற்றம் அடைவதால் பெரும்பாலும் துன்பியல் விலக்கப்படுகிறது. ஜமுனாவைப் போன்ற மிகக் கொடியவளும் அவளுக்குத் துணையாகும் கோபால் சிங்கும் கூடத் தங்கள் வழியை மாற்றிக் கொள்ளுகிறார்கள்; அந்த அளவில் இந்த நெறியில் வெகு தொலைவு செல்கிறார் அவர். ஆடம்கோர் என்பதனுள் தக்கூர்சிங் தன் சொத்துக்களையெல்லாம் பிரிட்பால்சிங்குக்கு உரிமையாக்கி விடுகிறார். கரிப் கி துனியா' என்பதனுள் சேதி அமர்நாத் மனம் வருந்திச் சாவதற்கு முன் தன் மகன் பலதேவனிடம் மன்னிப்புக் கேட்கிறார்.

இவ்வகை லட்சியப்பாங்கு குடும்பத்தின் எல்லையிலிருந்து அரசியல் உலகம் வரை விரிவடைகின்றது. நானக்சிங் பிற்காலத்து நாவல்களிலும் இதனைத் திறம்படக் கடைப்பிடிக்கிறார். இடைப்பட்ட காலத்து நாவல்கள் சிலவற்றில் கரிப் கி துனியாவில் வரும் குர்பக்ஷ்சிங் போதனை செய்வது போல், பியார் கி துனியாவில் காட்டப்படுவதுபோல், லட்சியக் காதல் கதையமைப்பில் மாற்றம் காட்டித் திருப்பு மையமாக அமைகிறது. மஞ்ச்தார், ஆடம்கோர் ஆகியவற்றில் வருவதுபோல், பிற்காலத்து நாவல்களில் காந்தியச் செல்வாக்கு அப்பட்டமாகப் புலப்படுகிறது.

சில விவகாரங்களில், டால்ஸ்டாய் நெறிக்குப் பொருந்தி வரும் வகையில் காந்திய நெறிக்கும் அப்பாற்பட்டுப் செல்கிறார். எடுத்துக்காட்டாக, கருவுற்ற பிறகு தம் மகன் கைவிடும் பெண்ணொருத்தியைக் கதைத் தலைவர் பிரபாகர் முறைப்படி மணந்து கொள்ளுமாறு செய்கிறார். பின்னால், தன் மகனின் மனைவி அவள் என்னும் உரிமையை அடைவித்தற்பொருட்டே இந்த ஏற்பாடு. அடுத்து மஞ்ச்தார் என்பதனுள், புண்யா என்னும் சமூக சேவகி [அவள் ஒரு இந்து] மன்சூர் என்பவனின் [அவன் ஒரு முஸ்லீம்] காம வேட்கைக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்ளுகிறாள். இன்றேல், அவளுடைய கணிப்பின்படி, அவன் நோயுற்றுச் சஞ்சலம் எய்தி மாண்டு போவான்.

நானக்சிங்கின் நாவல்களில் ஒரு பெண் தீங்கிழைப்பவளாகக் காட்டப்படவில்லை. அவர் படைத்துக் காட்டும் விலை மகளிர்கூடப் பாவம் புரிதலைவிடப் பாவத்திற்கு இலக்கானவர்களாகவே உள்ளனர். ஒரு பெண் நெறி தவறுவதெல்லாம் ஒழுக்கநெறி அறியாமையால் அன்று; அல்லது பிறரைச் சூறையாடும் காரியத்துக்காகவும் அன்று. ஏதாவது ஒருவகை நெருக்கடியினால்தான். மட்டராய்மென் என்பதனுள் வரும் தியாலியைப் போலவும் ரக்ஹிரியில் வரும் பின்ரோவைப் போலவும் மாற்றாந்தாய்களாகவும் அனாதைக் குழந்தைகளின் சிற்றன்னைகளாகவும் வரும்போதுதான் பெண் பாத்திரங்கள் கொடுமையாளர்களாய் வருகின்றனர். அவருடைய நாவல்களில், அவ்வப்போது, தீங்கிழைப்போராய் வருவோர் ஆடவரே. அவர்க்கு இரையாவோர் மகளிரே. ஆயின் இப்பொழுதும் அவர்களே என்று கூறுவதறகில்லை. ஏழ்மை நிலையில் உள்ள மனிதர்கள் மறைமுகமாக ஈடுபடுத்தப்படுகின்றனர். இவ்வாறு தீங்கிழைத்தற்கு மாதிரியாய் வருவோர் மனைவியை அல்லற்படுத்தும் ஒழுங்கற்ற பணக்காரக கணவர்கள்தாம், அல்லது முதலாளி தன்னிடம் பணியாற்றும் தொழிலாளியின் மனைவி அல்லது மகளைக் கெடுப்பான் அல்லது கெடுக்க முயல்வான்.

இவ்வாறு, இந்திய நாவலாசிரியர்களும் கதை எழுதுவோரும் அடிககடி மேற்கொள்ளுதல்போல், பெரும்பான்மைச் சுரண்டல் என்பது, மத்திய வகுப்பினரும் மேல் சாதியினரும் நிகழ்த்தும் காமவேட்டை தான். பொருளாதாரச் சுரண்டல் என்பது சுற்றி வளைத்து கவனத்திற்கு வரும்.. நானக்சிங், அவரே ஒத்துக்கொள்வதுபோல் எவ்வகையிலும் மார்க்சிய சிந்தனையாளர்

அல்லர். சோஷலிச கம்யூனிச எதேச்சதிகாரக் கட்சிகளின் கருத்துக்களின் செல்வாக்குக்கு ஆட்பட்டவர் ஆவர். ஏழைகளின் சூழ்நிலையையும் வர்க்க ரீதியாக அவர்கள் சுரண்டப்படும் நிகழ்ச்சியையும் அவர் எங்குமே சித்தரிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவரைப் பொறுத்தவரை, சமுதாயத்தில் ஏழை பணக்காரர் என்ற இரண்டே வகுப்பினர்தாம். அவர்களும் படைப்பிலேயே அவ்வாறு விதிக்கப்பட்டவர்களாய் உள்ளனர்.

கிறிஸ்துவ, காந்திய சோஷலிசத்தினர்போல், எல்லாக் குழுவினரும், பொருளாதார சமுதாய ஒழுங்கியல் தீமைகட்கெல்லாம் வர்க்கபூசலே அடிப்படை என்பதைப் புறக்கணிக்கின்றனர். ஆனால், நானக்சிங் வர்க்கப் பூசல் நிகழ்தல் பற்றிய கருத்தற்றவராகவே தம்மைப் புலப்படுத்திக் கொள்கிறார்.

அவருடைய நாவல்களில் வரும் பல்வேறு வகைத் தீயவர்கள் இறுதியில் தம்மைவிடத் தெளிவு உடையவராய் உள்ள தம் பிள்ளைகள் பெண்கள் நிகழ்த்தும் ஒழுக்கத்தின் செல்வாக்காலோ அல்லது தாம் தேடிக் கெடுக்க முயலும் மகளிர் தாம் பேணிக்காக்கும் ஒழுக்க முறைமையாலோ தம்மைத் தாமே திருத்திக் கொள்ளுகின்றனர். சித்தலாகுவில் வரும் புக்கன் சிங்கைப் போலவும் அல்லது பவித்தர் பாபியில் வரும் கிதாரைப் போலவும் எங்கோ ஒரு ஆண் பாத்திரம் துன்புற்றுத் துயர் முடிவு எய்துவதாகக் காட்டப்படுகின்றது. இக்பியான்கு டல்வரன் என்பதில் வரலாற்று உண்மை, கதைத் தலைவன் கர்தர்சிங் சரபாவை இறுதியில் சாவினின்றும் தப்பித்துவிட அனுமதிக்கவில்லை. எனினும், அவனிடம் ரகசியமாகக் காதல் புரிவதாகக் காட்டி, அவள் தூக்கிலிடப்படுவதற்குமுன் அவன் உயிர்விடுவதற்கிருந்த அறையிலேயே அவனை மணக்க வருமாறு செய்து அப்பாத்திரத்தைத் துயர் குறைநத ஒன்றாய், காதல் உணர்வுடையதாய்ச் செய்துள்ளார்.

## பின்னிணைப்பு:

## பிற படைப்புகள்

நாவல் சிறுகதை சத்குரு மகிமா [உண்மைக் குருவின் புகழ்] என்னுந் தலைப்புடைய பாடல் தொகுதி ஆகியற்றோடு கூட, எட்டு ஓரங்க நாடகங்களும், இரண்டு முழு நீள நாடகங்களும் இயற்றியுள்ளார் நானக்சிங். அவருடைய கற்பனைக் கதைகளோடு ஒப்பிட்டால் இவை எல்லாம் எளிய படைப்புக்களே. மேற் கூறியதுபோல், சீக்கிய கோயில்களில் [குருத்வாராக்கள்] மரபு வழியாக வந்த பொறுப்பாளர்களிற் பெரும்பான்மையாளர்கள் தம்முடைய நிலையைச் சொந்த உடைமையாகக் கருதி காமக்களியாட்டகங்களிலும் ஆடம்பரங்களிலும் ஈடுபட்டபோது, அவர்களை வெளியேற்றுவதற்காக எழுந்த அகாலி இயக்கம் தோற்றுவித்த விழுமிய பொறுப்புமிக்க சூழ்நிலையில் அவர்தம் இளமைக்காலத் தொடக்கத்தில் அவை இயற்றப்பட்டன. குறிப்பாக அமிர்தசரஸிலும், நானகானா சாகிபிலும் [குஜரன்வாலா மாவட்டம்] உள்ள இரண்டு பெரிய குருத்வாராக்கள் தவறாக நிர்வகிக்கப்பட்டன. தவறாகப் பயனபடுத்தப்பட்டன. நானகானா சாகிபில் உள்ள குருத்வாரா எல்லாவற்றையும விடச் செல்வவளம் மிக்கது. சாகுபடி செய்தற்குரிய ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் அதைச் சார்ந்தவை. அதன் பொறுப்பாளர் தம் அப்பட்டமான ஒழுங்கற்ற நெறிகளை எதிர்த்தவர்க்குப் பாடங்கற்பிப்பது என்று முடிவு செய்தபோது, சீக்கிய மக்கட் சமுதாயத்தின் அழுத்தமான ஒழுங்கு நடவடிக்கையால் இயக்கம் வளர்ந்து கொண்டே சென்றது. கோயிலின் பொறுப்பாளர், எத்தகைய திட்டங்களைக் கொண்டு, கூலி பெற்றுக் கொலைபுரிபவர்களால் ஒழித்துக்கட்டப்படுவர் என்று தெரியாமல் இருநூறு அகாலி சீக்கியர்கள் ஒழுங்கு நெறியை அவர்பால் வற்புறுத்துதற்காக 1921–இல உள்ளே புகுந்தனர். அவர்கள் சுட்டு வீழ்த்தப்பட்டனர். தீக்கிரையாக்கப்பட்டுக் குற்றுயிரும் கொலையுயிரும் ஆயினர். எனினும் அப்பொறுப்பாளர் கோயில் உரிமையைப் போரில் இழந்தார். பிரிட்டிஷ் தலைமையிலான நிர்வாகமும், அதிகாரச் செல்வாக்கும் கொண்ட ஆதரவு இருப்பினும்,

கூலிக்கு அமர்த்தப்பட்ட கொலைகாரர்கள், பிரிட்டிஷ் நீதிபதியால் மரண தண்டனை அடைந்தனர். கோயிற் பொறுப்பாளர் ஆயுள் தண்டனை பெற்றார். இறுதியில், சீக்கிய மக்கள் சமுதாயம் அமைத்த சிரோமணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டி என்றழைக்கப்பட்ட, ஓர் அமைப்பினிடம் அது ஒப்படைக்கப்பட்டது. 1924—ஆம் ஆண்டிற்கு குருத்வாரா நிர்வாகச் சட்டத்தின் மதிப்பு அந்த அழைப்புக்கு நல்கப்பட்டது. இன்றுவரை அது சீக்கியக் கோயில்களைப் பராமரித்து வருகிறது. இயக்கத்தின் நோக்கங்கள் எழுச்சி ஆகியவை பற்றிப் பல புலவர்களும், பிரசாரகர்களும் பாடல்களும் கவிதைகளும் எழுதியபோதிலும், நானக்சிங்கின் பாடல்கள் சிறந்த முறையில் மக்களை ஈர்த்தன. முன்னர்க் கூறியதுபோல், இந்தத் துண்டு வெளியீடு அவருடைய வாழ்நாள் இறுதிவரை கணிசமானதொரு தொகையை வருவாயாக நல்கியது. ஆயினும் அப்பாடல்கள் இலக்கியத்தரமிக்கவை அல்ல.

நாடகங்கள் பெரிதும் நானக்சிங் பிரிட்நகரில் வாழ்ந்த காலத்தில் இயற்றப்பட்டவை. சீக்கிய பஞ்சாபிய அறிஞர்கள் குடியிருந்த பகுதியில் நிகழ்ந்த கலாசார நிகழ்ச்சிகளின் விளைவால் நிகழ்ந்த கொடையாக அவை அமைந்தன. குருபாக்ஷிங்கின் பக்தர்களும் அவர் மீது ஈடுபாடுடையவர்களும் கூடி நிகழ்த்தும் ஆண்டுவிழா நிகழ்ச்சியின்போதும், புதிய கலாசார சோதனை கருதி அந்த இடத்தைப் பார்க்க வருபவர் பொருட்டும் இந்நாடகங்கள் பெரிதும் நடிக்கப்பெற்றன. அவர் வாழ்ந்த காலத்தில் நிகழ்ந்த பொருளாதாரச் சூழ்நிலை, ஒருசார்பாகச் சென்று கொண்டிருந்த அக்காலத்திற்கே இயல்பான கல்வி, பண்பாட்டு வளர்ச்சிகள் ஆகியவை பற்றி சீர்திருத்த நோக்கத்தோடு இயற்றப்பட்ட விழாக்கள் போலும் சிறப்பு நிகழ்ச்சிகட்குரிய இன்பியல் நாடகங்களாக இவற்றைக் கருத வேண்டும். இவற்றுள் பெரும்பாலானவை வேடிக்கை மிக்க இன்பியல் நாடகங்களாகவும் அங்கத நாடகங்களாகவும் உள்ளன. இவற்றுள் பெரிதளவு இலக்கியத் தரமும் உண்டு என்பதை மறுக்க இயலாது.

தோபி—ட—குட்டா [வண்ணானின் நாய்] என்பது, சட்டமன்ற உறுப்பினர் அல்லது அதுபோலும் அமைப்பைச் சார்ந்து அரசியல் அந்தஸ்துப் பெற்று சம்பாதிக்கும் பேராசையுடைய கல்வி நலம் நன்கு அமையப்பெறாத காங்கிரஸ்காரர் ஒருவரைப் பற்றிய கிண்டல் நாடகம். நாடகத் தலைவர், பண்டிட் தீனதயாள் என்பவர் சிறிதளவு கல்வியும் பெற்றவராகத் தெரியவில்லை. ஆனால், காங்கிரஸ் காரியக்

கமிட்டிச் செயலர் ஆகி முறையற்ற நெறியில் பணம் சேர்க்கிறார். இறுதியில் போலீசின் வலையில் அகப்பட்டுக் கொள்கிறார். தனது பிரச்சனைக்குத் தீர்வு வேண்டி வந்த இளம் மாது ஒருத்தியைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டித் தமது மனைவியையும் தள்ளி வைக்கிறார். முடிவில், தீய நெறியில் ஈட்டிய பணத்தை இழக்கிறார். தம்முடைய செயலராக நியமித்துக் கொள்ளக் கருதியிருந்த படித்த பெண் ஓமாதேவியும் அவர்தம் கண்ணியமிக்க மனைவியும், சீர்கெட்ட நிலையில் அவரை விட்டுப் பிரிகின்றனர். வீட்டிலும் துணிவைக்கும் இடத்திலும் ஒழுங்காகக் கடமைபுரியாத வண்ணானின் நாய் என்ற பட்டம் அவருக்குக் கிட்டுகிறது.

ஷாராபி [குடிகாரன்] எனபதனுள் கரம்சிங் என்னும் குடியானவன் போதையில் ஈடுபட்டு ஏழையாகிறான். அவனுடைய மனைவியும் மூனறு குழந்தைகளும் பிச்சைக்காரர்கள் ஆகின்றனர். அவன் மனைவி பட்டினியாலும் நோயாலும் மாண்டுபோகிறாள். அவனுடைய குழந்தைகள் அனாதை இல்லம் ஒன்றில் அடைக்கலம் புகுகின்றன.

பாப் டா பால் [பாவத்தின் விளைவுகள்] நம் சமுதாயத்தின் ஒழுக்க அமைப்புப் பற்றிய அங்கத நாடகம். ஜக்மோகன் குமாஸ்தாவாகப் பணிபுரிபவன். அவனுக்கு இலக்கிய ஆர்வம் உண்டு. தன் குழந்தையின் நோய் காரணமாகப் பணிக்குச் செல்லாமல் இருப்பது உண்டு. முதலாளித்துவத்தைக் கண்டனம் செய்யும் கதை ஒன்று எழுதுகிறான் அவன். முதலாளித்துவத்தைக் கண்டனம் செய்தலை விரும்பாத ஒரு பதிப்பாசிரியனிடம் அதை அவன் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்பட்டமாகவே, கதைக்குப் 'பாவத்தின் விளைவுகள்' என்று தலைப்பிடலாம் என்று அவன் யோசனை கூறுகிறான்.

நோயால் குழந்தை ஆபத்தான நிலை அடைகின்றபோது, தன் முதலாளி லாலாகிஷோரி லாலைச் சந்தித்து பணம் வேண்டி அணுகுகிறான். லாலாகிஷோரிலால் தன் வாடிக்கையாளர்களிடம் பல ஜாலக்குகள் செய்து, கருப்பு மார்க்கெட்டில் பேப்பர் விற்பனை செய்பவர். ஜகமோகன் தன் முதலாளியின் கடையிலிருந்து அவருக்குப் பயன்படாத சில கட்டுகளை எடுத்துக் கொள்வான். அவற்றின் மேல் உறைகளைக் கொண்டு அவன மனைவி சொறப ஊதியம் பெறும் வகையில் சில உறைகளைச் [கவர்களை] செய்வாள். இதைப் பற்றிக் கிஷோர் லால் கேள்விப் பட்டு அதைத் திருட்டாகக்

கருதுகிறார். ஜக்மோகனுடைய குழந்தை மறைந்ததைத் தெரிந்து, ஈவிரக்கமற்றவராய் ஜக்மோகனுடைய பாவத்தின் விளைவுகள் என்று அதைக் குறிப்பிடுகிறார்.

சார்சதி [கெட்ட நேரம்] ஜவுளியைக் கள்ளத்தனமான முறையில் விற்றுப் பணம் பண்ணிய லாலா துனி சந்த் என்பவனைப் பற்றியது. தகாத நெறியில் சம்பாதித்த பணத்தைப் புதைத்து வைப்பதற்காகக் குழி தோண்டும் தருணத்தில் போலீசார் அவனைக் கைது செய்ய வருகின்றனர்.

ஜைபசந்தர் தேவதா [நெருப்பு தேவதையின் வெற்றி] தன்னைக் காதலிக்கும் விஜயனோடு சினிமாவுக்குப் போக ஏற்பாடு செய்யும் லலிதா என்னும் பெண்ணைப் பற்றிக் கூறுவது. லலிதாவின் சகோதரன் பிரபோத் இதைத் தெரிந்துகொண்டு, கடும் விளைவுகள் ஏற்படும் என்று அச்சுறுத்தி அவள் விஜயனோடு செல்வதைத் தடுக்கிறான். இடையில் அவனுடைய நண்பன் யாஷ், விஜய் யார் என்று விசாரிக்கும்படி யோசனை கூறுகிறான். அவன் கீதாவின் சகோதரன் என்று லலிதா தெரிவிக்கிறாள். பிரபோத் காதலிக்கும் பெண் தான் கீதா. லலிதாவின் விஷயத்தில் பொறுத்தற்கரிய நெருப்பாக இருக்கும் காதல் அவள் அண்ணன் விஷயத்தில் வணங்குதற்குரிய தெய்வமாக உள்ளது.

மகாத்மா [பேரான்மா] என்பது ஆடம்பர வாழ்வுக்கு வழியில்லாத ராமரதன் அல்லாதித்தா என்னும் இரண்டு நண்பர்கள் மக்களிடம் செய்யும் ஜால வித்தையைப் புலப்படுத்துவது. அல்லாதித்தா மகாத்மாவாகிறான்; ராம்ரதன் பிராமணனாகிறான். தன் மகளின் திருமணத்தை நடத்துவதற்கு யாரும் பொருளுதவி செய்ய முன் வரவில்லை என்று அங்கங்கு புகார் கூறிக் கொண்டு அல்லாதித்தாவிடம் வருகிறான். முனிவனாகிய அவன் தன்னைச் சூழ்ந்துள்ள மக்களிடம் பணமாகவும் பொருளாகவும் நன்கொடை தருமாறு கோரிக்கை விடுக்கிறான். போதுமானது சேர்ந்ததும் பிராமணனை அழைத்து அதை எடுத்துச் செல்லுமாறு கூறுகிறான். ஹரிதுவார் போக வேண்டும் என்று போக்குக்காட்டி அவனே அந்த இடத்தைவிட்டு நழுவுகிறான்.

கொரன் நு மொர் [திருடனுக்குத் திருடன்] என்பதனுள் தம் மகனுக்குப் பெண் பேச வரும் சுனிலாலை நம்பவைப்பதற்காக மன்மோகனும் அவர் மனைவி ராம்காணியும் பக்கத்து

வீட்டாரிடமிருந்து சோபா நாற்காலிகள் முதலியவற்றைப்பெற்று யாவரும் அமரும் அறையில் போடுகிறார்கள். இடையில் வருமானவரியை நிர்ணயிப்பதற்காக அவர்களுடைய செல்வத்தை அளவிடவேண்டி வருமானவரி இன்ஸ்பெக்டர் அங்கு வருகிறார். மனமோகனும ராம்காணியும் அவரைச் சுனிலால் என்று தவறாக நினைத்துக் கொண்டு, தங்களுடைய செல்வத்தைப் பற்றி மிகுதிப்படுத்தப்பட்ட கணக்கைக் கொடுக்கிறார்கள். அவர்கள் கண்ணியத்துடன் ஒத்துழைத்ததைப் பாராட்டி விட்டு அங்கிருந்து புறப்படுகிறார் அவர். இருபதனாயிரம் ரூபாய் அளவில் வரிவிதிப்பது மிகையாகாது என்று அவர் கூறுகிறார். தனக்குப்பிறகு மேலதிகாரி ஒருவர் சோதனைக்காக வருவார் என்று இன்ஸ்பெக்டர் கூறியதனால், தங்களுடைய தவற்றை உணர்ந்து, இரவலாக வாங்கியவைகளை ஒரு திரைக்குப் பின்னால் மறைக்கிறார்கள். மேலதிகாரிக்குப் பதிலாக இப்பொழுது சுனிலால் வருகிறார். *மன்மோகனும் ராம்காணியும்* தங்களுடைய அப்பட்டமான வறுமையைப்பற்றி அளவு கடந்து பிரலாபிக்கிறார்கள். சுனிலால் தாம் யார் என்று தெரிவித்ததும், பேச்சு மூச்சு அற்றவர்களாகித் தங்கள் தவற்றை அவரிடம் கூறுகிறார்கள். அவர்கள் எந்த ஒரு தவறும் செய்ய வில்லை என்று ராம்லால் குறிப்பிட்டுத் தக்க பதில் தருகிறார். அத்தகைய தவற்றைத் தாம் செய்வதற்கு முற்பட்டு அவ்வாறு செய்யாமைக்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறார்.

முழுநீள நாடகங்களில் சௌர் சனன் [முட்டாள் சனன்] ஒரே மகளுக்காக, சனன் என்னும் முட்டாளை, அவனுடைய பெற்றோர் வறியவர் என்று அறிந்தும் தேர்ந்துதெடுப்பது பற்றிய வேடிக்கை நாடகம். அத்தகைய குடும்பமே பெரும்பாலும் ஒத்து வரும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அவன் அவர்களோடு வாழ வேண்டும் எனறு விரும்புகிறார்கள். ஆனால், சனன் தன்னைத் தானே அபபட்டமாக வெளிப்படுத்திக் கொள்கிறான். அவனுடைய தந்தை மறைந்துவிட்டதால அவன் உடனே வீடு செலல வேண்டும் என்று பொய்யாக எழுதிய கடிதத்தை யாரோ அவனிடம் கொடுக்கிறார்கள். இவவாறு அவனுடைய மாமனார் மாமியார் அவனிடமிருந்து விடுதலையாகினறனர்.

பி.ஏ. பாஸ என்பது, இந்தியாவில் இருபது முப்பதுகளில் இருந்த உயர் கல்வியின் வேடிக்கை நிலை பற்றிய வெளிப்பாடாகும். உயர் கல்வியின் பொருட்டுக் கல்லூரிக்கு அனுப்பப்பட்ட ஏழைப் பெற்றோர்களின் பிள்ளைகள் சிலகாலம் செல்வர் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் போல் காட்டிக் கொண்டு பட்டம் பெற்ற பிறகு வேலை

பெறத் தவறி வீடு வந்து சேர்ந்தார்கள். அத்தகைய மாணவன் ஒருவன் ஜகதீஷ். வீட்டில் அமைதியின்மையால், நல்லவர் ஒருவர் வந்து காப்பாற்றியிராவிட்டால் ரயிலின் முன் அவன் விழுந்திருப்பான். அந்த நல்லவர் அரசாங்க வேலை பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்கிறார். பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து நாடு விடுதலை பெறுதற்பொருட்டுத் தொண்டு செய்பவனாகிறான் அவன். அந்த நாளில் படித்து வேலை பெறாத சூழ்நிலை பற்றிக் கிண்டல் செய்கிறார் நானக்சிங். அவரே தக்க நல்வழியும் காட்டுகிறார். அரசியல் என்பது கயவர் கடைசியாக புகும் அரண் என்னும் டாக்டர் ஜான்சனின் கருத்திற்கு வேறுவடிவம் தருகிறார் அவர். இங்கே படித்து ஏமாற்றமடைந்த ஒருவன், நாட்டுப்பற்றில் தஞ்சம் புகுகிறான்.

பாய் கன்ஹைய்யா, பி.ஏ. பாஸ் ஆகிய இருநாடகங்களைத் தவிர பெரும்பாலான நாடகங்கள் மேடையில் வெற்றி பெறக் கூடியவை எனினும் வெற்றி அரிதாகவே கிட்டுகிறது.

## துணை நூற்பட்டியல்

## அ. நானக்சிங் இயற்றியவை

நாவல்கள்

1. மாட்ராய் மா
2. மிதா மௌஹ்ரா
3. கால் சக்கர்
4. பிரேம் சங்கீத்
5. சித்தலாகு [1932]
6. ஃபௌலாடி ஃபூல் [1934]
7. காக்டன் டி பெரி [1934]
8. பியார் கி துனியா
9. கரீப் கி துனியா
10. அத் கிரா ஃபூல்
11. பவித்தர் பாபி
12. ஜீவன் சங்ரம்
13. துன்டேல் பார்ச்சேவன்
14. லவ் மேரேஜ்
15. துர்கினாரா
16. துட்டி வீணா
17. கங்கா ஜலி விச் ஷராப்
18. குன் டி சொகிலி [1948]
19. அக் டி கெட் [1949]
20. மஞ்ஜ்தார்
21. சித்ரகார்
22. கடிஹோய் படாங் [1951]
23. சுமன் கான்டா
24. ஆடம் கோர் [1954]
25. நதூர்
26. சங்கம்
27. பஞ்சர்
28. பூஜாரி
29. ஆஸ்டிக் நாஸ்டிக்
30. சாலவா
31. இக்மியான் டு டால்வரன் [1970]
32. கோய் ஹரியா புட் ரஹியோரீ [1971]
33. மெரியன் ககானியன்
34. பிரான்ஸ் டா டாகு
35. ரஜ்னி

நாடகங்கள்

36. சௌர் சாமான் அன்டு பி.ஏ. பாஸ் [எட்டு ஓரங்க நாடகங்கள் மட்டும்]
37. மெரி துனியா
38. சத்குரு மகிமா.

ஆ. நானக் சிங்கைப் பற்றியவை:

பாஸின் ராஜிந்தர் சிங் [பதிப்பு] நானக்சிங்கின் அலோசா நாடாமாக் அத்யாயன் மொழித்துறை, பஞ்சாப், பாடியாலா.

பாடியா, ப்ரிதம் கௌர், நாவல்கர் நானக்சிங், பெப்சு புக் டிப்போ பாடியாலா [1978]

போகல், பியாராசிங், நாவல்கர் நானக்சிங், ஹிரியஜித் பிரகாஷன் ஜலந்தர் [1972]

காங், குல்பிர்சிங், நானக் சிங் டி நாவலன் டா அலோச நாடாமாக் சர்வேகன், பெப்சு புக் டிப்போ பாடியாலா 1976.

பிரபாகர் ராஜன், கலாகர் நானக்சிங் நேஷனல் புக் ஷாப், டெல்லி, 1966.

சைனி, பிரிதம், காடி ஹேறாய் படாங், இக் அத்யாயன் லாகூர் புக் ஷாப் லு தியானா தேதி இல்லை.

சிங்கால் தரம்பால் நானக்சிங், இக்பரிசயா பஞ்சாப் பல்கலைக் கழகம், சண்டிகார் 1983.

சிடல், ஜிட்சிங், [பதிப்பு] நானக்சிங், ஜீவன் டி சோதி, ரவீந்தர் சிங், நானக்சிங் டி நாவலன் டிவாஸ்டு விவேசன், அமர்ஜித் சாகிட் பிரகாஷன், பாடியாலா, 1974.

சோஸ், எஸ்.எஸ். கால்பா சமாரட் நானக்சிங் நீலம் பப்ளிஷர்ஸ் பாடியாலா, 1975.

உப்பால், சவீந்தர் சிங் [பதிப்பு] நானக்சிங் டி அஸ்கலா, பஞ்சாடிப ரைடர்ஸ் கோவாபரேடிவ் டெல்லி, 1984.

இ. ஒரு பகுதி நானக்சிங்கைப் பற்றியது.

நரின்ஜன் டாஸ்னிம், பஞ்சாபி நாவல் டா அலோசாநாடமாக் அத்யாயன், லோக் சாகித் பிரகாஷன், அமிர்ஸ்டஷர், 1973.

ராஹி, ஜோதிந்தர்சிங், பஞ்சாபி நாவல், நானக்சிங் புஸ்டக்மாலா, அமிர்ஸ்டர், 1978.

வாலியா, ஜக்தீஷ் கௌர், பஞ்சாபி நாவல் விச் ரஜ்னிடிக் அன்ஷ் அமர்ஜிட் சாகிட் பிரகாஷன், பாடியாலா, 1981.

தற்கால பஞ்சாபி நாவலின் தந்தை எனக் கருதப்படும் நானக் சிங் [1897–1971] வங்க மொழியில் பங்கிம் சந்திரர் சரத் சந்திரர், இந்தியில் ப்ரேம்சந்த் ஆகியோர் வரிசையில் வைத்தெண்ணப்படுபவர். நெறியும் எழிலும் நேர்த்தியும் ஊட்டி, பஞ்சாபி சிறுகதைக்குப் புதிய திருப்பம் தந்தவர். கற்பனைக் காதல், சமுதாய விமர்சனம் ஆகிய இரண்டும் அவருடைய படைப்புகளில் திரும்பத் திரும்ப வரும் கதைத் கருக்கள். போலிச் சமய நிலை, சாதிக் கொடுமை, பெண்ணடிமை ஆகியவற்றை அவர் வெளிப்படுத்துகிறார். அவருடைய படைப்பு முழுதும் காந்திய லட்சியம் விரவிக்கிடக்கின்றது. முப்பத்தைந்து நாவல்களின் ஆசிரியர் அவர். சாகித்திய அக்காதெமி பரிசு பெற்ற இக்மியான் தோ தால்வரான் [ஒரே உறையில் இரண்டு வாள்கள்] என்னும் நாவல், ஆழ்ந்த கதை சொல்லும் திறத்தாலும் நடப்பியலுக் கொத்த பாத்திரப் படைப்பாலும் பஞ்சாபி இலக்கிய உலகிற்குக் கிடைத்த இணையற்ற கொடையாகக் கருதப்படுகின்றது.

சாந்த் சிங் செகோன் [தோற்றம் 1908] ஒரு தலைசிறந்த எழுத்தாளர், திறனாய்வாளர், நாடகாசிரியர். மிட்டார் பியாரா என்னும் அவருடைய நாடகம் 1972–ல் சாகித்திய அக்காதெமி பரிசு பெற்றது. பஞ்சாப் மொழியறியாத வாசகர்க்காக, இந்த வாழ்க்கை வரலாற்று நூலில் நானக் சிங்கின் வாழ்வையும் பணியையும் அளவிடுகிறார் அவர்.

ISBN-81-7201-391-4

*Nanak Singh* - (Tamil) Rs 15